# கல்கி

தீபாவளிச் சிறப்பிதழ்
KALKI 26.10.97 ரூ. 4.00
அதிக பக்கங்கள்!

- ராஜேஷ்குமாரின் ஒன், டூ, த்ரீ கதைகள்
- நிலா வேட்டை
  — புதிய தொடர்கதை



சிரிப்பு ஸ்பெஷல்!

பூப்போல மெல்லியது! பொன்னூலில் பின்னியது!!
கெட்டியான சேலையிது! சுகமான சேலையிது!!
சொல்லாமல் சொல்லுது சாரதா'ஸ்!!!




மாமா என் சார்பா
இந்தப் பட்டாசை
வீரப்பன்ட்ட
கொண்டு போய்க்
குடுத்துட்டு
வரீங்களா?
—கிச்சா





"அரை மணியிலிருந்து ஒரு மணி எடுத்துக்கலாம். மக்களை விழுந்து விழுந்து சிரிக்க வைக்கிற மாதிரி ஒரு படைப்பை நம்ம கண் எதிரிலே எழுதித் தள்ளுங்க பார்க்கலாம்?'' என்றோம் கிரேஸி மோகனிடம்.

"ஒரு சின்ன நாடகம் எழுதறேன். சீரியஸ் டிராமா. கொஞ்சம் வித்தியாசமா அதே சமயத்துல யதார்த்த ரீதியிலே சமூக பிரக்ஞையோட, அறிவு ஜீவித்தனமா ஒரு பரிட்சார்த்த நாடகம்'' என்று கூறி நம்மை அதிர்ச்சியின் எவரெஸ்டுக்கே அனுப்பினார்.

"ஒரு கனவு. அதிலே எப்படி இந்த சீரியஸ் டிராமாவை போடறதுன்னு எங்க ட்ரூப் பாத்திரங்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். இதுதான் ப்ளாட்'' என்றார்.

டிஸைன் போட்ட ஒரு சட்டையை மாட்டிக் கொண்டார். எந்த நாடகம் எழுதினாலும் இதை அணிந்து கொண்டிருந்தால் ஒரு ராசியாம். எழுதும் விஷயத்தில் மோகனுக்கு பல கிரேஸியான (?)சென்டிமெண்டுகள் உண்டு. விஜயா ஸ்டோர்ஸில்தான் பேப்பர் வாங்குவாராம். ஃபவுன்டன் இங்க் பேனாவில்தான் எழுதுகிறார். ("என்னவோ பால்பாயிண்ட் பேனான்னா பிடிக்காது") நடு நடுவே செல்லமாகத் தன் செல்லத்தைத் திறந்து வெற்றிலையை வாயில் போட்டுக் கொள்கிறார். எழுதும்போது ஒரு உத்வேகத்துடன் கை நகங்களைக் கடித்துக் கொள்கிறார். ("இப்படியே போனா உங்க கை நகமெல்லாம் மறைஞ்சு, ஆலிலை கிருஷ்ணன் மாதிரி கால் நகத்தைக் கடிக்கத் தொடங்கிடுவீங்க'' என்று இடையே இடித்துரைத்து விட்டுப் போனார் அவரது மனைவி) "சிலர் பட்டையடிச்சுட்டுதான் வசனம் எழுதுவாங்க. எனக்கு பேனா பட்டையடிச்சால் போதும்'' என்றார்.

— சுஜ்லா

**மாது:** நாம டிஸ்கஷனை ஆரம்பிப்போமா?

**மோகன்:** பேஷா.

**மாது:** ஒரு சேஞ்சுக்குப் புராண நாடகம் போடுவோம். முதல்லே எந்தப் புராணத்தை நாடகமாகப் போடப் போறோம்ங்றதை முடிவு செய்வோம்.

**மோகன்:** ஏன் வால்மீகி ராமாயணத்தைப் போடலாமே!

**சுப்பு:** பெரிய புராணமாச்சே அது.. போட முடியுங்கறேன்?

# பாரதம் படும் பாடு!

**மோகன்:** அட நான் பெரிய புராணத்தைச் சொல்லலே.. வால்மீகி ராமாயணம்.

**சுப்பு:** நானும் அதைத்தான் சொல்றேன். வால்மீகி ராமாயணம் ரொம்பப் பெரிசாச்சே. இரண்டு மணி நேரத்திலே அத்தனையையும் எப்படிப் போடறது?

**மாது:** ஏன்டா அலுத்துக்கறே? வால்மீகி ராமாயணத்தை கால் மீகியா நாலா பிரிச்சுக்குவோம். நாலு பார்ட்டா போட்டுடுவோம்.

**சீனு:** போட்டா முழுசாப் போடணும்! இல்லை போடக் கூடாது?

**மாது:** சரி, வால்மீகி ராமாயணத்துல வர்ற முக்கியமான காட்சிகளை மட்டும் செலக்ட் பண்ணி சின்னதா இரண்டு மணி நேரம் வரா மாதிரி போட்டுடுவோம்.

**சீனு:** முக்கியமான காட்சிகன்னா?

**மாது:** இந்த தருமரும் சகுனியும் சூதாடற சீன், கிருஷ்ணர் பாண்டவர்களுக்காக தூது போற சீன், பாஞ்சாலி சபதம்.... இப்படி

**சுப்பு:** முண்டம்... இப்ப நீ சொன்ன காட்சிகள் எல்லாம் வால்மீகி ராமாயணத்துல கிடையாது.

**மாது:** பின்னே?

**சுப்பு:** அதெல்லாம் கம்பராமாயணத்துல வருது.

**மோகன்:** கஷ்டம், நீங்க இரண்டு பேர் பேசறதும் மகாபாரதம்.. ராமாயணமில்லை.

**மாது:** சரி.. அப்ப மகாபாரதமே போட்டுடுவோம். அதான் பெட்டர்... இந்த தமயந்தி வஸ்திராபஹரணம் மகாபாரதத்திலேதான் வருது?

**மோகன்:** ஐயோ அது தமயந்தி இல்லை.. திரௌபதி!

**மாது:** அட... இந்த தமயந்தி, திரௌபதி பேர் எதுகை மோனையா இருக்கறதாலே வாய் தவறி தமயந்தினு தப்பா சொல்லிட்டேன்.

தமயந்தி கதை எனக்குத் தெரியாதா? இந்த துஷ்யந்தன் கொடுத்த மோதிரத்தை தொலைச்சுட்டுத் தவிச்சாளே... கடைசில கூட மயான காண்டத்திலே அந்த சாமியார் ரிஷி... அவர் பேர் என்ன அகஸ்தியரா?

**மோகன்:** கருமம். விசுவாமித்திரர்.

**மாது:** நாம அகஸ்தியர்னே வச்சுப்போம். கோபிக்கு எப்படியும் ஒரு ரோல் கொடுத்தாகணுமே.

**சுப்பு:** அதிருக்கட்டும். திரௌபதி வஸ்திரா பஹரணமெல்லாம் ரொம்பப் பழசு. ஏற்கனவே நிறைய பேர் செஞ்சுட்டாங்க.

**மாது:** அசிங்கமா பேசாதே. அதை துச்சாதனன் ஒருத்தன்தான் செய்திருக்கான். மோகன், இந்த திரௌபதி வஸ்திரா பஹரணம்ன்றது துச்சாதனன் இழுக்க இழுக்க, கிருஷ்ணரோட அருளாலே பட்டுப் புடவையா வருமே... படிச்சிருக்கேனே நல்லி பாரதத்திலே!

**சுப்பு:** ஹுக! பட்டுப்புடவையா வந்தா உடனே நல்லி பாரதமா? இது வில்லி பாரதம்டா!

**மாது:** அப்புறம் இந்த கிருஷ்ணர் பாண்டவர்களுக்காக தூது போற சீன்... அட டிராமாவுக்கு டைட்டில்கூட அமர்க்களமா தோணியிருக்கு.

கௌரவர்கள் கிரேஸி மேல மான நஷ்ட வழக்குப் போடப் போறாங்க பாரு!

**சுப்பு:** என்ன?

**மாது:** தூது போறது கிருஷ்ணர். கிருஷ்ணர் கையிலே என்ன இருக்கும்?

**சுப்பு:** வெண்ணெய்.

**மாது:** அது பாலகிருஷ்ணர். நான் சொல்றது பெரிய கிருஷ்ணர். அவர் கையிலே புல்லாங்குழல் இருக்கும். டிராமா டைட்டில் "ஒரு புல்லாங்குழல் தூது போகிறது"

**சுப்பு:** பிரமாதம். அந்த சீன்ல கிருஷ்ணர் கூட வேற யார் இருக்கா?

**மாது:** கிருஷ்ணன், துரியோதனன் அப்புறம் கௌரவர்கள் நூறு பேராச்சே!

**சீனு:** துரியோதனன் ஒருத்தன்தான் கௌரவன். மீதி 99 பேர் அகௌரவர்கள்... காட்ட வேணாம்.

**கோபி:** பஞ்ச பாண்டவர்கள்?

**மாது:** அர்ஜுனன் ரோலுக்கு பத்ரி.

**சுப்பு:** பத்ரியா? என்னடா. அவன் ஈர்க்குச்சியாட்டம் வத்தலா இருக்கான். இவன் அர்ஜுனனா?

**மாது:** டயலாகிலே சமாளிக்கலாம். "என்ன இது பஞ்ச பாண்டவர்களிலே அர்ஜுனன் மட்டும் பஞ்சத்திலே அடிபட்ட பாண்டவனாட்டம் இருக்கான்னு" துரியோதனன் சொல்ல, "அடேய் துரியோதனா, நான் பார்ப்பதற்கு ஒல்லியா இருக்கலாம். ஆனால் என் பலம் உனக்குத் தெரியாதுன்னு கம்பீரமா சிரிக்கறான். பி.எஸ். வீரப்பா மாதிரி. ஆனா பத்ரி உன் உடம்புக்கு நீ ஓவரா சிரிச்சா, சிரிச்ச முகத்தோட நீயே ஓவராயிடுவியே.

**பத்ரி:** கவலைப்படாதே! அந்த சீன்லே நான் மனசுக்குள்ளே சிரிச்சுக்கறேன். மைக்கிலே எனக்கு பதிலாக டப்பிங்கிலே சிரிச்சுடுங்க.

**சீனு:** கடைசி குருக்ஷேத்திர சண்டையிலே ஒரு பேமிலி மெஸேஜ் கொடுக்கணும்டா.

**மாது:** ஐந்து குழந்தைகளைப் பெத்து குடும்பக் கட்டுப்பாடு செய்துக்கிட்டதாலே பாண்டுவின் பசங்க யுத்தத்திலே ஜெயிச்சாங்க. திருதராஷ்டிரன் நூறு குழந்தைகளை முட்டையிட்டு குஞ்சு பொரிச்சதாலே அத்தனை பேரும் யுத்தத்திலே தோத்துட்டானுங்க. இதிலேயிருந்து பேமிலி ப்ளானிங் செய்து கிட்டா யுத்தத்திலே ஜெயிக்கலாம்னு தெரியுது இல்லையா?

**கிரேஸி மோகன்**

தொண்டர்களே இல்லாமல் (அப்படியே இருந்தாலும் டெலிபோனிலேயே அவர்களுடன் பேசி) கட்சியை நடத்தும் சுப்பிரமணிய சுவாமிக்கு அதிர்ஷ்டம் அடித்து, தமிழ்நாட்டு சி.எம். ஆகிவிடுகிறார். (சும்மா ஒரு கற்பனைதாங்க!) அப்புறம் செய்தித்தாள்களில் செய்திகள் எப்படி இருக்கும்...?

# சி.எம். சுவாமி!

## கருணாநிதி தமிழரே அல்ல

**க**ருணாநிதியின் தாத்தாவுக்குத் தாத்தா சைபீரியாவிலிருந்து சைனா வழியாக திருவாரூருக்கு வந்து செட்டில் ஆனதாக ஒரு டாக்குமென்ட் என் கைல கிடைச்சிருக்கு. அந்த டாக்குமென்டை, சந்திரலேகா தமிழ்நாடு ஆவணக் காப்பகத் தலைவரா இருந்தப்ப பார்த்துட்டாங்க. அதை வெளியே சொல்லிடக் கூடாதுங்கறதுக்காகத்தான் அவங்க மேல கருணாநிதி ஆளைவிட்டு ஆசிட் ஊத்திட்டார். அந்த டாக்குமென்ட்படி, கருணாநிதி தமிழ் பேசுபவர் இல்லே. கொஞ்சம் சைபீரிய பாஷையும், கொஞ்சம் சைனா பாஷையும் கலந்து பேசுவார். அதைத்தான் தமிழ் தமிழ் என்று இங்கே எல்லாரும் ஏமாந்து போய்க் கேட்டுக் கொண்டிருக்கிறாங்க. 'அவர் பேசறது எதுவும் புரியலே'ன்னு தயாளு அம்மா சொல்றது இதுனாலதான். தான் தமிழர்னு சொல்லி இத்தனை வருஷமா வேஷம் போட்டிட்டிருக்கார் கருணாநிதி. பெரியார் உயிருடன் இருந்தப்பவே இதை நான் அவர்கிட்ட சொன்னேன். அவரே கேட்டுட்டு ஆச்சரியப்பட்டார். என் முதுகில் தட்டினார். (அவர் கைபட்ட ஜிப்பாவின் முதுகுப் பக்கத்தை அருகே பார்க்கிறார்கள்.) இதைக் கருணாநிதி மறுக்க முடியாது. மறுத்தால் கேஸ் போடுவேன். போட்டால் அவர் தோற்றுப் போயிடுவார். அப்புறம் தமிழ் நாட்டுப் பக்கமே தலை காட்ட முடியாது!

*(தமிழக முதல்வர் சுப்பிரமணிய சுவாமி பேச்சு)*

## 'ஜே'யைச் சந்தித்து ஆசி வழங்கினார் சு. சுவாமி!

**த**மிழக முதல்வர் சுப்பிரமணிய சுவாமிக்கு, போயஸ் தோட்டத்திலிருந்து திடீர் என்று அழைப்பு வந்தது. முன்னாள் முதல்வர் ஜெயலலிதா அவரை உடனடியாகச் சந்தித்துப் பேச விரும்புவதாகச் செய்தி வந்ததும், பாதிச் சாப்பாட்டில் கையைக்





கூடக் கழுவாமல் புறப்பட்டுச் சென்று, ஜெயைச் சந்தித்துக் கை குலுக்கினார். இருவரும் சுமார் 19 நிமிடம் பேசிக் கொண்டிருந்தார்கள். சந்திரலேகா பேசாமல் இருந்தார். 'நாங்கள் அடித்த கொள்ளைகளை எல்லாம் மறந்து, கோர்ட்டில் உங்களுக்கு எதிராக ஆபாச ஆர்ப்பாட்டம் செய்ததை எல்லாம்கூட மன்னித்து, எங்களுடன் கூட்டு வைத்துக் கொண்டது உங்கள் பெருந்தன்மையைக் காட்டுகிறது' என்று ஜெ அப்போது சொன்னார். உடனே சந்திரலேகா தமது முகத்தைத் திருப்பி அவரை ஆசையாகப் பார்த்தார். ஜெயலலிதா இருவருக்கும் சால்வை அணிவித்து, ஆளுயர மாலை போட்டு மரியாதை செய்தார். சுப்பிரமணிய சுவாமி அப்போது ஆசி வழங்கினார். 'இந்தச் சந்திப்பு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது' என்றார் ஜெயலலிதா. 'இனி கருணாநிதி தலை தூக்கவே முடியாது' என்று ஜெ சொன்னதை, சுப்பிரமணிய சுவாமி சிரித்துக் கொண்டே ஆமோதித்தார். சந்திரலேகாவும் அழுகிற மாதிரி சிரித்தார்.

## "வாழப்பாடி என் வழிகாட்டி!"

— முதல்வர் சு. சுவாமி பேச்சு

**கா**மராஜர் பிறந்தநாள் விழாவில், தமிழக முதல்வர் சுப்பிரமணிய சுவாமியும், வாழப்பாடியாரும் கலந்து கொண்டனர். 'இனி காமராஜர் மாதிரியே நானும் முக்கால்-கை சட்டைதான் அணியப் போகிறேன்!' என்று சொன்னதுடன் மிச்சத் துணியை மக்களுக்குக் கர்ச்சீப் தைத்து, அவர் பிறந்த நாளில் இலவசமாகக் கொடுப்பேன்!' என்றார் சுப்பிரமணிய சுவாமி.

அவரைப் பாராட்டி இரண்டு மணி நேரம் பேசினார் வாழப்பாடியார். தாம் காலையில் சுப்பிரமணிய சுவாமியைப் பற்றி வெளியிட்ட காரசாரமான அறிக்கையை எல்லாரும் இதற்குள் மறந்திருப்பார்கள் என்று நம்புவதாகக் கூறியபோது பலத்த கைதட்டல். 'வாழப்பாடியார் என் வழிகாட்டி. சந்திரலேகா என் மூதாட்டி' என்று அப்போது அறிவித்தார் சுப்பிரமணிய சுவாமி. (மூதாட்டி என்றால் என்ன அர்த்தம் என்று அவர் வாழப்பாடியாரிடம் கேட்டபோது, எல்லாரும் மறுபடி கைதட்டினார்கள்.) உடனே வாழப்பாடியார் எழுந்திருந்து, 'தங்கபாலு எங்கள் வீட்டில் ஒட்டடை அடித்தவர். அவர் இன்று கலைஞருடன் சேர்ந்து கொண்டு, தமிழ்நாட்டையே மொட்டை அடிக்கப் பார்க்கிறார். நானும் சுப்பிரமணிய சுவாமியும் இதை நிச்சயம் தடுத்திடுவோம்!' என்றார். கூட்டத்தில் கல்லடியோ, கலாட்டாவோ நடக்காமல் பார்த்துக் கொள்ள பத்தாயிரம் போலீசார் பாதுகாப்பாக வந்தார்கள். ஆனால் கூட்டத்தில் நாற்பது பேர்தான் இருந்தார்கள் என்பதால் அசம்பாவிதம் ஏதும் நடக்கவில்லை.

## தமிழக முதல்வர் சுப்பிரமணிய சுவாமிக்கு பிரதமர் அழைப்பு

**பொ**துத் தேர்தலில் அமோக வெற்றி பெற்று பிரதமராக ஆகிவிட்ட சந்திராசுவாமியை, நரசிம்மராவ், சந்திரசேகர், அந்னான் கசோகி ஆகியோர் சந்தித்து விட்டுச் சென்றதும், அவர் உடனே சுப்பிரமணிய சுவாமியை தில்லிக்குப் புறப்பட்டு வரச் சொன்னார்.

தனி விமானம் மூலம் வந்த சுப்பிரமணிய சுவாமி, பிரதமர்



''மளிகைக் கடைக்காரர் வீட்டில் பெண் பார்க்கப் போனது தப்பாப் போச்சு...''

''ஏன் என்ன ஆச்சு?''

''பெண்கிட்டே 'தனியா' பேசணும்னு சொன்னால், 'தனியா, சீரகம், மிளகு என்ன வேணும்னாலும் பேசுங்க'ன்றார்!''

— வெ. ராஜாராமன்

மனிதன், கடவுளைத் திடீரென சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. கடவுளிடம் மனிதன் கேட்டான்: ''மனிதனின் பத்து லட்சம் ஆண்டுகள் உங்களுக்கு எவ்வளவு நேரம்?''

கடவுள் சொன்னார் : ''அது எனக்கு ஒரு வினாடிதான்.''

மறுபடியும் மனிதன் கடவுளிடம் கேட்டான் : ''எங்கள் பத்து லட்சம் ரூபாய் உங்களுக்கு எவ்வளவு மதிப்பு?''

கடவுள் சொன்னார் : ''அது எனக்கு ஒரு ரூபாய்தான்!''

மனிதன் தன்னை மிகவும் புத்திசாலி என்று நினைத்துக் கொண்டு கடவுளிடம், ''அப்படி என்றால் எனக்கு ஒரே ஒரு ரூபாய் தானம் தாருங்கள்'' என்று கேட்டான்.

கடவுள் சிரித்தபடி, ''ஒரே ஒரு வினாடி பொறு தருகிறேன்'' என்றார்.

— எத்தனை எத்தனை ஜாலிகள்! நூலிலிருந்து

தகவல் : எல்.எம். மங்கை



சந்திரா சுவாமியைச் சந்தித்து நாலு நாள் இடைவிடாமல் பேசிக் கொண்டிருந்தார். கிளின்டன், யெல்ஸின் முதலியோர் சந்திரா சுவாமியை மதிக்க வேண்டும் என்றால், காவியுடையைக் களைந்து விட்டு, தாடியையும் எடுத்துவிட வேண்டும் என்று அப்போது யோசனை கூறினார் சுப்பிரமணிய சுவாமி. ஜெ'யை அசாம்-மேகாலயா ஆளுநராக ஆக்க வேண்டும் என்றும், அப்படிச் செய்தால் உல்ஃபாவுக்குப் போகிற பணத்தை எல்லாம் [illegible] வசூல் பண்ணிவிடுவார் என்றும் யோசனை கூறியதாக, பிறகு செய்தியாளர்களிடம் சுவாமி சொன்னார். அப்படியானால் சிக்கிம் மாநில ஆளுநராக சசிகலாவை நியமித்து விடலாம் என்று சந்திராசுவாமி சொன்னதாகவும் சுப்பிரமணிய சுவாமி தெரிவித்தார்.

பிறகு தில்லியிலிருந்து அமெரிக்கா, ஐரோப்பா வழியாக சென்னை வந்து சேர்ந்தார் தமிழக முதல்வர் சுப்பிரமணிய சுவாமி.

## லட்சுமி பார்வதி சினிமாவில் நடிக்கிறார்

### — சுப்பிரமணிய சுவாமி கதாநாயகன்

ஆந்திராவில் லட்சுமி பார்வதி, சந்திரபாபு நாயுடுவை எதிர்த்துப் போர்க் கொடி தூக்கியிருப்பது தெரிந்ததே. அவருக்கு ஆதரவாக, தாம் உதவப் போவதாக, நேற்று அவரைச் சந்தித்த தமிழக முதல்வர் சுப்பிரமணிய சுவாமி அறிவித்தார். சினிமா ஒன்றினால்தான் ஆந்திராவில் ஆட்சியை மாற்ற முடியும் என்று அப்போது லட்சுமி பார்வதி சொன்னதை சுப்பிரமணிய சுவாமி ஏற்றார். லட்சுமி பார்வதி கதாநாயகியாக நடிப்பதாய் இருந்தால், தாம் கதாநாயகனாக நடிப்பதாகவும், ஹார்வர்டு பல்கலைக் கழகத்திலேயே தாம் நாடகத்தில் நடித்திருப்பதாகவும் சுப்பிரமணிய சுவாமி சொன்னார். சந்திரலேகாவுக்குத் தோழி வேடம் கொடுக்கப்படும் என்றார் லட்சுமி பார்வதி!

## டி.என் சேஷன் ஒரு புளுகர்!

### — முதல்வர் சுப்பிரமணிய சுவாமி குற்றச்சாட்டு

தாம் புரொபசராக இருந்தபோது, தம்மிடம் சாப்பாட்டுக்கு வேண்டும் என்று டி.என். சேஷன் (முன்னாள் தேர்தல் கமிஷனர்) தம்மிடம் பத்து டாலர் கடன் வாங்கியதாகவும், அதை இன்னும் அவர் திருப்பித் தரவில்லை என்றும் நேற்று, பெத்துக் கவுண்டன் பாளையத்தில் பதினாலு பேர் கலந்து கொண்ட பிரம்மாண்டமான பொதுக்கூட்டத்தில் கூறினார், சுப்பிரமணிய சுவாமி. இதை ராஜீவ் பிரதமராக இருந்தபோதே தாம் அவரிடம் கூறியதாகவும், அப்போது சேஷன் அதைத் தன்னிடம் கொடுத்து விட்டதாகவும் கூறியது அப்பட்டமான பொய் என்றார் சுப்பிரமணிய சுவாமி. 'சோ' அதை ஒளிந்திருந்து பார்த்தது போல், சேஷனுக்கு ஆதரவாகப் பேசியிருப்பது வெட்கக் கேடு என்றார் சுவாமி.

— சித்தார்த்

என்றும் இளமையாய் இருப்பது எப்படி?

# ஒரு கல்லில் 1+1 மாங்காய்!

"ஐம்பதா? பார்த்தா தெரியல்லியே" என்ற ஆச்சரியப் பேச்சை எங்கு கேட்டாலும் அந்த ஐம்பது வயது இளைஞரைச் சற்று உற்றுப் பாருங்கள். பெரும்பாலும் அவர் உடலில் ஊளைச் சதை எங்குமே இருக்காது. முக்கியமாக, தொந்தி இருக்காது.

ஓர் ஆணைப் பொறுத்தவரை இருபத்தி ஆறு வயதுக்குப் பிறகு அவனது எடை ஏறக் கூடாது. எக்கச்சக்கமான உடற்பயிற்சி செய்து தசைகள் கூடினாலொழிய இயற்கையான முறையில் அவனது உடலின் எந்த பாகமும் அதற்குமேல் வளர்ந்து எடையைக் கூட்டு வதில்லை. எனவே அதற்குப் பிறகு ஏறும் எடை, உடல் பருமனைக் காட்டுகிறதே தவிர ஆரோக்கிய வளர்ச்சியை அல்ல. சற்றே முன் பின்னாக பெண்ணுக்கும் இந்த நியதி பொருந் தும்.

ஆனால் நடைமுறையில் பெரும்பா லோரின் எடை அந்த வயதுக்குப் பின் ஏறு முகத்தில்தான் இருக்கிறது. நல்லவேலையில் சேர்ந்து விட்டால் அவனது 'ஊர்சுற்றல்' (நண் பர்களுடன் மற்றும் வீட்டுச் சாமான்களை வாங்கிப் போடுவது) குறைந்து விடுகிறது. திருமணமும் ஆகிவிட்டால் அவனது சின்னச்



சின்னத் தேவைகளைக் கூட மனைவி நிறைவேற்றி விடுகிறாள். தட்டிக் கேட்கவும் ஆளில்லை. இதன் காரணமாக எடை ஏறுகிறது. பெண்களைப் பொறுத்தவரை பிரசவத்துக்குப் பிறகு எடையைக் கூட்டிக் கொள்பவர்கள் உண்டு. வீட்டிலும் ஏகப்பட்ட நவீனக் கருவிகள் வந்து உடலை எந்த விதத்திலும் அலட்டிக் கொள்ளவிடாமல் செய்துவிட்டன. ஆண், பெண் இருவருக்குமே தைராய்டு மற்றும் அட்ரினலின் சுரப்பிகள் போதிய அளவு சுரக்கா விட்டாலும் உடலின் எடை கூடும்.

உடலைச் சிக்கென்று வைத்துக் கொள்ள, காயகல்பம் சாப்பிட்டதுபோல் தென்பட அற்புதமான மருந்து உடற்பயிற்சி. நடை, ஜாகிங் ஆகியவை மிக ஏற்றவை என்பது நமக்குத் தெரிந்ததுதான். என்றாலும் அவை ஒரு குறைந்த பட்ச வேகத்தில் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் போதிய பலனிருக்காது.

திடீரென்று ஒருவர் தீவிர உடற்பயிற்சியில் ஈடுபடக் கூடாது என்றாலும் சில அடிப்படை விஷயங்களை நடைமுறைப்படுத்தலாம். புஜங்காசனம், ஏரோபிக்ஸ் என்று பல வழிகள் உண்டு.

அவ்வளவு ஏன், வயிற்றுப் பகுதியில் உள்ள தசைகளைக் கொஞ்சம் தம்பிடித்து உட்புறமாக இழுத்துக் கொள்ளுங்கள். வயிற்றுப் பகுதியை உள்ளடங்கியே வைத்திருங்கள் - முதலில் சில நொடிகளுக்கு. நாளாக ஆக இந்த நேரத்தை அதிகரியுங்கள். வெகு சுலபமாகச் செய்யக் கூடிய உடற்பயிற்சி இது. தொப்பைகளுக்குத் தடா போட மிக உதவும்!

தினமும் சில மணி நேரங்களாவது உட்காரும்படி நேரும். குறைந்தது டி.வி.க்கு முன்பு. அப்போது விளம்பரம் வரும் நேரங்களில் - அதுதான் கணிசமாக இருக்குமே - சில எளிய உடற்பயிற்சிகளைச் செய்யலாம்.

உதாரணமாக ஆழமாக மூச்சை உள்ளே இழுங்கள். பிறகு மெதுவாக மூச்சை வெளியே விடுங்கள். அப்படி மூச்சை வெளியே விடும் போதே உங்கள் உடலை முன்புறமாக வளையுங்கள் - இரு கைகளும் தரையைத் தொடு மளவுக்கு.

பிறகு? 'உடற்பயிற்சி முடிவடைந்து விட்டதென்று' விலுக்கென்று உட்கார்ந்து விட வேண்டாம். மெதுவாக மூச்சை உள்ளிழுத்துக் கொள்ளுங்கள். அதேசமயம் உடலை மேலே கொண்டு வந்து வழக்கமாக உட்காரும் நிலைக்குக் கொண்டு வாருங்கள். இப்படி அடிக்கடிச் செய்வது முதுகெலும்புக்கு நல்லது. இறுக்கமில்லாமல் இருக்கும்.

தினமும் சிலமுறை முழங்கால் வளையாமல் விரல்களால் பாதங்களைத் தொடுவதுகூட நல்ல பயிற்சிதான். வயிற்றுத் தசைகளுக்கு மிக ஆரோக்கியமான இப்பயிற்சியை கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்து வந்து தினமும் ஐம்பது - அறுபதுமுறை கூடச் செய்யலாம்.

உடற்பயிற்சியோடு கொஞ்சம் டயட்டும் அவசியம். தேவைக்கதிகமாக ஒரு இட்லி சாப்பிட்டால் சுமார் 60 கலோரி உடலில் கூடுகிறது. இதை இழக்க அரை மணி நேரம் ஜாகிங் செய்ய வேண்டியிருக்கும்.

வைப்ரேட்டர், ரோயிங் வீல், அப்டாமினல் பென்ச், ட்விஸ்டர் என்று பலவிதக் கருவிகள் 'ஜிம்'களில் உண்டு. சௌகர்யப்பட்டவர்கள் இவற்றின் உதவியுடன் உடலையும் வயதையும் குறைத்துக் கொள்ளலாம்.

ஆரோக்கியத்துக்கு ஆரோக்கியம். இளமைக்கு இளமை எனும்போது உடற்பயிற்சி செய்யாமல் இருப்பதா?

— அருண் சரண்யா

## இளமைப் போட்டி – 11

அமலா, 'ரோஜா பூ... ஆடி வந்ததே' என்று பாடிவந்த போது ஏக்ஸர்ஸைஸ் பண்ணிக் கொண்டிருந்த நடிகர் யார்? அடுத்த வாரத்துடன் போட்டி முடிகிறது. உங்கள் விடைகளை, அடுத்த இதழில் வெளிவரும் கூப்பனில் எழுதி அனுப்புங்கள். பரிசு விவரங்கள் விரைவில்..!



# எல்லாம் பெற்ற இல்லத்தரசிகளுக்கு



**ஹாக்கின்ஸ்®**
**ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்**

அவள் தன் குடும்பத்திற்கு சத்தான, ருசியான உணவை ஒவ்வொரு முறையும், சரியான வேளையில் பரிமாற வேண்டியுள்ளது. ஹாக்கின்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிரஷர் குக்கரின் வேகம், சௌகர்யம், நம்பகம் மற்றும் பாதுகாப்பு ஆகியன அவளுக்குத் தேவை.

ஹாக்கின்ஸில் உள்ள உயர்ந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீல், பூரண ஆரோக்கியத்தையும், வலிமையையும் தருகிறது. சுத்தம் செய்யவும் எளிதானது. 5.8 மி.மீ. தடிம 'சாண்ட்விச்' அடிப்பாகம் சூட்டை விரைவாகவும், சமமாகவும் பரப்புகின்றது. பிரஷர் குக்கர் சமையலுக்கு முன்னர், இலேசாக அல்லது நன்றாக பொரிக்க உகந்தது. உட்புறம் உள்ள எல்லா பரப்புகளுமே ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் அல்லது ஸ்டெயின்லெஸ் 'ஹார்டு அனோடைஸ்டு' அலுமினியத்தால் ஆனது. இவைகள் ஹாக்கின்ஸை உண்மையான ஸ்டெயின்லெஸ் பிரஷர் குக்கராக்குகின்றன.

உங்களின் முழுமையான உலகிற்குள், முழுமையான பிரஷர் குக்கரான ஹாக்கின்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலையும் கொண்டு வாருங்கள். அதிகப்பட்ச சில்லரை விலை:
3 லிட்டர் ரூ. 1300, 5 லிட்டர் ரூ. 1500 (செப்பரேட்டர்களுடன் ரூ. 1695);
7 லிட்டர் ரூ. 1700 (செப்பரேட்டர்களுடன் ரூ. 1950).



## கீழ்க்கண்ட டீலர்களிடம் கிடைக்கின்றது

**சென்னை : அடையார் டெலிபோன் எக்ஸ்சேஞ்ச் எதிரில்** செல்வ விநாயகர் ஸ்டோர்ஸ், 73/4 எல்.பி. ரோடு, போன் : 419647 ● **ஈவினிங் பஜார்** எம்.ஏ. எதிராஜுலு நாயுடு, 18, போன் : 5353215 ● **கந்தக் கோட்டம்** எஸ். சந்தோஷ நாடார் சன் ஃபர்ம், 88, நமசிவாய நாயக்கன் தெரு, பார்க் டவுன், போன் : 5353050 ● **அண்ணா சிலை சிக்னல் எதிரில்** ஸ்பென்சர் அண்டு கோ. லிட்., 769, போன் : 8563611 ● **பாண்டி பஜார்** பொன்னிஸ் 37, போன் : 446106 ● ரெத்னா ஸ்டோர்ஸ் ஃபர்ம் c/o ரவி ஸ்டோர்ஸ், சிவா காம்ப்ளெக்ஸ், போன் : 4342942 ● **புரசைவாக்கம் ஹைரோடு** குமரன் எண்டர்பிரைசஸ், 264, போன் : 6421739 ● **தி. நகர்** ரத்னா ஸ்டோர்ஸ், c/o ரத்னா மெட்டல்ஸ், ரத்னா காம்ப்ளெக்ஸ், 55, ரங்கநாதன் தெரு, போன் : 4344484 ☐ **பாண்டிச்சேரி : ஜவஹர்லால் நேரு தெரு** கந்தன் அண்டு கம்பெனி, 74 போன் : 34108 ☐ **சிதம்பரம் : தெற்கு தேரடி வீதி** ஸ்ரீ விநாயகர் பாத்திரக் கடை, 25 போன் : 22611 ☐ **கோயமுத்தூர் : இடையர் தெரு** வேல் முருகன் ஸ்டோர்ஸ், 780 போன் : 397279 ● **காந்திபுரம்** கமலா ஸ்டோர்ஸ் c/o அருள் ஜோதி கார்பரேஷன், 16A கிராஸ் கட் ரோடு, போன் : 233489 ● **ஆர்.எஸ். புரம்** ஐடியல் கிப்ட் ஹவுஸ், 8, கிழக்கு பாஷ்யகாரலு தெரு, போன் : 40136 ☐ **திண்டுக்கல் : பழைய பஸ் நிலையம் எதிரில்** ஸ்ரீ லட்சுமி எண்டர்பிரைசஸ் 5&6, டட்லி ஸ்கூல் காம்பவுண்ட் போன் : 24710 ☐ **ஈரோடு : மாதவ கிருஷ்ணா தெரு** யுனிவர்சல் டிரேடர்ஸ், 243 போன் : 214225 ☐ **கரூர் : ஜவஹர் பஜார்** இரவி எவர்சில்வர் மார்ட், 730 போன் : 60453 ☐ **மதுரை : கிழக்கு வீதி தெரு** ஆல்வின்ராஜ் மெட்டல் சென்டர், 180-181, போன் : 623538 ● **காமராஜர் சாலை** ஆனந்தா மெட்டல் கம்பெனி ஃபர்ம், 43, A போன் : 620891 ● **தெற்கு ஆவணி மூல வீதி** ஆனந்தா ஸ்டோர்ஸ், 42, போன் : 745365 ● **அம்மன் சன்னதி,** எஸ். சந்தோஷ நாடார் கார்ப்பரேஷன், எண்-3, போன் : 622097 ☐ **மயிலாடுதுறை : காந்திஜி ரோடு** அன்னை ஃபர்னிச்சர்ஸ், 27-B போன் : 22948 ☐ **சேலம் : இரண்டாவது அக்ரஹாரம்** V.C.R. மெட்டல்ஸ் கம்பெனி, 88 போன் : 64205 ● **பஜார் தெரு** நேஷனல் ஏஜென்ஸீஸ், 348 போன் : 412549 ● **மெயின் பஜார்** வா. சந்திரசேகரம் அண்டு சன்ஸ், 357 போன் : 65580 ● **பஜார் தெரு,** வா. சந்திரசேகரம் & கோ., 361, போன் : 414265 ☐ **சிவகாசி : தெற்கு வீதி** M.V.K.D. தங்கவேலு நாடார், 122-A போன் : 20907 ☐ **தென்காசி : சுவாமி சன்னதி தெரு** ஜெமீதா எண்டர்பிரைசஸ், 29, போன் : 24057 ☐ **திருப்பூர் : முனிசிபல் ஆபீஸ் தெரு** ஸ்ரீ ராமநாத் ஏஜென்ஸி, 67, ☐ **திருநெல்வேலி : ஜங்சன்** காசியானந்தா & கோ., 41-44, மதுரை ரோடு போன் : 26044 ☐ **திருச்சி : மலைவாசல்** மங்கள் & மங்கள், 25, N.S.B. ரோடு, போன் : 29324 ☐ **வேலூர் : சி.எம்.சி. ஆஸ்பத்திரி எதிரில்** சீனு ஏஜென்ஸீஸ், 80A, ஆற்காடு ரோடு, போன் : 20015.

**ஏதேனும் உதவி தேவைப்பட்டால் தயவுசெய்து எழுதவும் : ஹாக்கின்ஸ் குக்கர்ஸ் லிமிடெட், த.பெ. எண். 6481, மாகிம், மும்பை-400 016, தொலைபேசி எண் : (022) 4440807/09, ஃபாக்ஸ் : (022) 4449152.**

HC0266K-TAM

**சுப்புடுவின் இசை, நாட்டிய விமர்சனங்களில் தமாஷுக்குப் பஞ்சமே இருக்காது. அவரது விமர்சனங்கள் தொகுக்கப்பட்டு, இரண்டு புத்தகங்களாய் கண்மணி கிரியேடிவ் வேவ்ஸ் என்ற நிறுவனத்தால் வெளியிடப்பட்டுள்ளது. (விலை தலா ரூ.50). புத்தகங்களில் இடம் பெற்றுள்ள விமர்சனங்களிலிருந்து எடுக்கப்பட்ட சில சுப்புடு 'பஞ்ச்' வரிகள்:**

♦ (நாட்டிய நிகழ்ச்சிகளின் போது) ஒளி அமைப்பு மிக நுணுக்கமான கலை. வெறும் பச்சை விளக்கையும், சிவப்பு விளக்கையும் சுழற்றினால், அதில் சென்ட்ரல் ஸ்டேஷன் தான் வருமே அல்லாது, அபிநயம் பளிச்சிடாது.

♦ அத்தைமடி மெத்தையடி கேள்விப்பட்டிருக்கிறோம். அக்கா மடியும் மெத்தைதான். அகாடமியில் முதல் நாளன்று வத்தனோபசாரம் கூறிய எஸ். ராமசாமியின் வாக்கில், 'அக்காடமி' தான் 'அக்காமடி'யாக மாறிற்று.

♦ பிரான்னில் கொடிகட்டிப் பறந்த ஆர்.கே. சூரிய நாராயணா வாசித்து, நீட்சிதர் கிருதியைக் கேட்டபோது, நீட்சிதர் பாண்ட், சூட்டை அணிந்திருப்பது தெரிந்தது. கீர்த்தனைகள் உருமாறி, இவர் வீணையை வாசித்தாரா, வீணை இவரை வாசித்ததா என்று தெரியாமல் இரண்டு மணி நேரம் அல்லல் படுத்தி விட்டார்!

♦ (கமலாவுக்கு) அரிதாரம் பூசிவிட்டால் 20 வயது குறைந்து விடுகிறது. ஆட ஆரம்பித்து விட்டால் இன்னும் 20 வயது குறைந்து அந்தப் பாத்திரமாகவே ஒன்றி விடுகிறார். நேயர்கள் கணக்குப் போட்டு கமலாவைத் தொட்டிலில் போட்டு விட்டேன் என்று சொல்லக் கூடாது. ஒரு கலையை ரசனையுடன் வர்ணிக்க முயன்றிருக்கிறேன்.



## சுப்புடு பஞ்ச்

♦ அரசியல்வாதிகளுக்குத் தேர்தல் பயம் உண்டு. இசை விற்பன்னர்களைக் கேட்பாரில்லையோ ஸ்வாமி?

♦ சோமுவின் இந்த வரிகளைப் பாருங்கள். தேவி...தயாபரி... மாதங்கி... மருடமுக்குத்தி அணிந்தவளே.. அப்புறம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி.வேறு! நல்லகாலம். இந்த கீர்த்தனை ஆதி தாளத்தில் அமைந்தது. கண்ட திருபுடையில் இருந்திருந்தால், 'நல்லி டிசைன் அணிந்தவளே!' என்று இன்னொரு வரியையும் சேர்த்திருப்பார் போலும்.

♦ சாதாரணமாக அகாடமியில் விருது பெறுபவர் அவ்வமயம் எழுபதையும் தாண்டி எமனின் வரவை எதிர்பார்த்திருப்பார்கள். சிலர் வாங்கின கையோடு, யாத்திரை புரிவார்கள்.

♦ வா வா முருகா என்று காபி ராகத்தில் ஒரு அதிரம்யமான பாட்டு இருக்கிறது. ராமநாதன் அதில் புரிந்த சேஷ்டைகள், அந்த முருகனை அந்த வட்டாரத்திலேயே அண்ட முடியாதபடி செய்திருக்கும் என்பது திண்ணம்!

♦ பத்மா (சுப்ரமணியம்) ஒரு வரப் பிரசாதி. கல்லூரிகள் இவரைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அப்போதுதான் எது டான்ஸ், எது உடான்ஸ் என்று தெரியும்.

♦ குச்சுப்புடியின் ஒரே குறை. அது இது காறும் அதே கிருஷ்ண சப்தத்தையும், அதே தாம்பாள டான்சையும் ஆடி வருவதுதான்.

ரசிப்பு + தொகுப்பு: **சி.எம்.**



**பூ**ச்செண்டு மாதிரி இருந்தது அந்தக் குழந்தை. அழைத்து வந்திருந்த அப்பன்காரன், அகிலாவைக் கிட்டத்தில் பார்த்ததில், கிறுகிறுத்துப் போய் இருந்தான். கிரேனிலிருந்து அடைக்கலராஜ், "யோவ், பேபி எடுத்தாய்யா!"

"பாப்பா, கூப்புடறாங்க. ஓடு."

"யோவ், நான் லைட்டைச் சொன்னேன்."

எதற்கோ கத்தியலை எடுத்துக் கொண்டு ஒருத்தன் ஃபீல்டுக்குக் குறுக்காக ஓடினான். "சாவு கிராக்கி!" - கிரேன் கத்தியபோது ரங்கராஜன் சிகரெட்டை உருவிக் கொண்டு எழுந்து போனான்.

"ரங்கா, அவ ரெடியா பாரு" ஹரி குரல் கொடுத்தபோது, அகிலா லிப்ஸ்டிக் தடவிக் கொண்டிருந்தாள்.

"தாயே, பரதேவதை, லாங் ஷாட்டுக்கு நீ இப்ப பூசியிருக்கற லிப்ஸ்டிக்கே யதேஷ்டம். சுருக்க எழுந்து வாரியா?"

ஹரி, அந்தக் குழந்தையையே பார்த்துக் கொண்டிருந்தான். மூணு, மூணரை வயசுதான் இருக்கும். உடலுமும் செழிப்பும் அபரிமிதமாக இருந்தது. கோவிலுக்கு நேர்ந்து கொண்டு ஆடு வளர்க்கிறவன் மாதிரி, சினிமாவுக்காகவே பெற்று, வளர்க்கிறார்கள் போலும். இந்தப் படம் முடிந்தால் அடுத்த சில வருஷங்களுக்கு இந்தக் குழந்தையைப் பிடிக்க முடியாமல் போகலாம். பிஸியான குட்டி நடிகையாக மழலைத் தோரணங்கள் கட்டி, கேட்பரீஸும் அம்மாவின் முத்தங்களும் என் விருப்பங்கள் என்று தினத்தந்தி நட்சத்திர பேட்டியில் சொல்லும்...

ஹரி, கண்ணை இறுக்கி மூடிக் கொண்டான். மானசீகமாக அதனை இழுத்து முத்தம் கொடுத்தான். ரஞ்சனியிடம் சொல்ல வேண்டும். மூன்று மாதங்களாகத் தேடிக் கொண்டிருந்த பூக்குட்டி இன்று கிடைத்து விட்டது. படத்தின் வெற்றியில் பாதியை அதன் வெல்வெட் புன்னகை உறுதி செய்திருக்கிறது. சொல்கிறதை நெருப்பு போலப் பிடித்துக் கொள்கிற ஆற்றல் இயல்பாக இருக்கிறது.

"**ஹ**ரி, ஷாட் ரெடி பண்ணிட்டேன். வந்து ஃப்ரேம் பார்த்துடு." - நடந்தவாக்கில் ரங்கா சொல்லிப் போனான்.

அவன் எழுந்து கொண்டதும் ஃபீல்டில் குழந்தையைக் கொண்டு வந்து அகிலாவிடம் கொடுத்தார்கள். தானே சொந்தமாகப் பெற்று வளர்த்தது போல் அவள் ப்ஜிஎம்முக்குக் குழந்தையைச் சீராட்ட, அது முகத்தைச் சுளித்தது.

நாலு டேக் வாங்கி, ஷாட் முடியவும் வாசலில் டெம்போ வந்து நின்றது. பெரிய அலுமினிய கேரியர்களில் அசைவ சமாசாரங்கள் இறங்க, டிரைவர் தலையைச் சொறிந்து கொண்டு ப்ரொடக்ஷன் ஆட்களைத் தேடினான். ஹரி, மணி பார்த்தான். ஒன்று முப்பது. இப்போது ப்ரேக் விட்டு, இரண்டரைக்குத் தொடங்கினால் ஆறு மணிக்குள் அடுத்தடுத்த இரண்டு பிஜி. எம்களை முடித்து விடலாம். ராத்திரி ஷெட்யூல் தொடரலாம் என்று ரங்கா சொல்கிறான். விடிய விடிய 'கட்டுத்'தீர்ப்பதில் ஆட்சேபணை ஒன்றுமில்லை. ஆனால், ஆறரைக்கு டாக்டர் மகாதேவனைப் பார்க்க வேண்டும். அங்கே வேலை ஐந்து நிமிஷத்துக்கு



பா. ராகவன்

# நிலா வேட்டை 1

உள்ளே தான் இருக்கும். ஆனால், ஷூட்டிங் தொடர்வதும் நிற்பதும் அந்தச்சில நிமிஷங்களுக்குள் அவர் உதிர்க்கிற சொற்கள் தனக்குள் இறங்குகிற விதத்தைப் பொறுத்துத்தான் அமையும் என்று அவன் நினைத்தான்.

எதையும் எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்க மனம் தயங்குகிறது. பனிச் சறுக்கு மாதிரி வாழ்க்கை வழுக்கிக் கொண்டு ஓடினால் தேவலாம் போல் இருக்கிறது. ஆனால் தடை ஓட்டம்தான் நிஜத்தில் சந்திக்க வேண்டிய விஷயமாக இருக்கிறது. போன வாரம் டாக்டர் மகாதேவனிடம் டெஸ்டுக்குப் போனதை அவன் ரஞ்சனியிடம் சொல்லியிருக்கவில்லை. ஏவி.எம்மில் எடிட்டிங் இருக்கிறது; இரவு வருவது பற்றி உத்தரவாதமில்லை என்று சொல்லிவிட்டு, காலையிலேயே டாக்டரிடம் போயிருந்தான்.

தோல்விகள் அவனுக்குப் புதிதல்ல. முதலில், அவ்வப்போது படிப்பில். பிறகு வாய்ப்புத் தேடி பட நிறுவனங்களுக்கு அலைந்ததில். அப்புறம் எடுத்த முதல் படத்தின் இமாலயத் தோல்வி.

"காட்! நீ என்ன, கல்கத்தாகாரர்கள் போல் கலைப்படம் எடுத்து கானே ஃபெஸ்டிவலுக்கு அனுப்பவா நான் முப்பது லட்சம் போட்டேன்? மகனே, ஒரு வாரம் டயம் தரேன். நாலு ஃபைட்டு, ஒரு கனவு சீன், ரெண்டு பாத்ரூம் காட்சி சேர்க்காட்டால், தொலைஞ்சே!"

ரீ-ரெக்கார்டிங் நடந்து கொண்டிருந்த போது நகம் கடித்தபடி முழுப்படத்தையும் பார்த்துவிட்டு, சட்டையைப் பிடித்த ப்ரொட்யூசர்.

அவன் தலைக்கு மேலே கை கூப்பி மறுத்துவிட்டு, எழுந்து வெளியே போனான். நீங்கள் சொல்வதைச்



செய்தால், சமரசத்தின் பெயரில் என் ஆண்மையை அடகு வைத்தது போல் ஆகிவிடும் என்று அவன் போகிறவாக்கில் சொன்னது அந்தக் கடலெண்ணெய் வியாபாரிக்குப் புரியவில்லை. அப்போது அவனிடம் முதல் அஸிஸ்டென்ட்டாக இருந்த ரங்காவைக் கூப்பிட்டுச் செய்து தரச் சொன்னார். அவனும் மறுத்தபோது, அடுத்தவனைச் சரிகட்டிக் கூட்டிப் போய் தான் விரும்பிய வண்ணம் எடுத்துச் சேர்த்து வெளியிட்டார். ஒரு வாரத்தில் பெட்டிகள் திரும்பி விட்டன. பிற்சேர்க்கைகளை வெட்டிவிட்டு, ஒரு நப்பாசையில் அரசுக்கு அனுப்பியபோது, அவன் மாநில அளவில் சிறந்த டைரக்டராக அடையாளம் காட்டப்பட்டான்.

அடுத்தடுத்த ஆறுபடங்களில் நாலு வெற்றி, இரண்டு தோல்வி. ஆனால், ஒரு அங்கீகாரம் கிடைத்திருக்கிறது. மனிதர்களின் முகமூடியைக் கிழித்து, நிஜ ரூபங்களைக் காட்சிப்படுத்துவதில் விற்பன்னன் என்று காலித் மொஹம்மத் பிலிம் ஃபேரில் ஒரு குறிப்பு எழுதியிருக்கிறான். சடாரென்று கண்முன் உதித்துச் சிறகடிக்கிற பட்டாம்பூச்சிபோல அவ்வப்போது வருடிப் போகிற பாராட்டுக்கள்தாம் தோல்விகளில் துவண்டு விடாமல் பார்த்துக் கொண்டிருக்கின்றன.

ஆனால், டாக்டர் மகாதேவனிடம் போகும்போதே ஏன் தோல்வி பற்றிய ஞாபகங்கள் தன்னைக் கவ்வ வேண்டும்? படபடக்கிற மனமும் வியர்க்கிற உடலும் தடுமாறும் சொற்களுமாகத் தன்னை சராசரிக்கும் கீழானவனாக அவன் இனம் கண்டான்.

ஆனால், அத்தனை பரிதவிப்பு வேண்டாம் என்று டாக்டர் சொன்னார். மிஸ்டர் ஹரி, நீங்கள் படித்தவர் இல்லையா? பாமரன் அல்லவே! திஸ் இஸ் நத்திங், ப்ளீஸ் காம் யுவர் ஸெல்ஃப். லெட் மி ஸீ.



"இந்த வருடம் நமது தலைவர்... தீபாவளியை ஒரு ஏழையின் வீட்டில்... கொண்டாடுவார் என மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்...!"

— ராஜிராதா

இன்று போக வேண்டும். ஆனால் டாக்டர் சொன்னதுபோல் அமைதியாகத்தான் இருக்க முடியவில்லை. வேலையில் மனம் பொருந்த மறுக்கிறது. காலையிலிருந்து பெரும்பாலான பணிகளை ரங்காதான் கவனித்துக் கொண்டிருக்கிறான். ஒரு சாஸ்திரத்துக்கு, டைரக்டராகத் தான் உட்கார்ந்திருப்பதாகவே அவனுக்குப்பட்டது. தவிர, அடிக்கடி எழுகிற ரஞ்சனியின் ஞாபகம். எப்போதும் பூ வருடலாக இருக்கிற அவளது ஞாபகம் இன்று ஏனோ பயத்தைத் தருகிறது.

ரஞ்சனியும் அவளது சர்ரியலிஸ ஓவியங்களும். ஆறு வருஷங்களாகவே அவளது ஓவியங்களின் கருப்பொருள் ஒரே விஷயமாகத்தான் இருக்கிறது. ஒரு தாயின் ராட்சஸத் தேடல். விதவிதமான அபிநயங்களுடன் நூற்றுக் கணக்கான குழந்தைகளின் உடல்கள். ரஞ்சனி ஏனோ முகங்களை சஜஷனில்தான் காட்டுகிறாள். கலபத்தில் பிடிபடாத விதமாக.

"ஒரு நாள் அந்த முகங்களுக்கு நான் வண்ணம் சேர்ப்பேன். அன்று நம் ரேஷன் கார்டில் புதிய பெயர் ஒன்று சேர்ந்திருக்கும்..."

விழிகள் படபடக்க, ரஞ்சனி சொல்வது அவன் காதில் ஒலித்துக் கொண்டே இருந்தது.

"ஹரி, ஒரு நிமிஷம் தனியா வா." ரங்கா வாயில் வடையைக் கடித்தபடி வந்து கூப்பிட்டான்.

"சொல்லு."

"அகிலா சம்பந்தப்பட்ட சீனை எல்லாம் எத்தனை சீக்கிரம் முடியுமோ, முடிச்சுடணும்."

"என்னவாம்? கலைச்சேவை செய்ய துபாய் போறாளாமா?"

"அது பரவாயில்லை. அம்மணி இப்ப ரெண்டு மாசம்."

"ஐயோ, இப்ப யாராம்?"

சொன்னான். "ஆனா, இது நிச்சயம் கல்யாணத்துல முடிஞ்சிடும்னு லேட்டஸ்ட் தகவல். அதுவும் as quick as possible. அதுவும் இந்த மாசத்துக்குள்ளவே. பிறகு அவ குடும்பப் பெண்ணாகி, கல் தோன்றி மண்தோன்றாக் காலத்துக் காரியங்களில் பிஸியாயிடுவாள். ஸோ..."

"புரியறது."

"நம்ம படத்துக்கப்புறம் அவள் வேறெதையும் கமிட் பண்ணிக்கலைங்கறதை கவனி."

"உம். ஆனால், விஷயம் இன்னும் எப்படி பிரெஸ்ஸுக்குப் போகலைங்கறதுதான் ஆச்சர்யமா இருக்கு."

"திருட்டு நொரடி. ரொம்ப ஜாக்கிரதையா வெச்சு இருக்கா. எனக்கே இப்பத்தான், அவ டிரைவர் கோடி சத்தியம் வாங்கிட்டு, ரகசியமா சொன்னான்."

"ரகசியம் தொடருவது நல்லதுதான். இன்னும் பத்து, பன்னெண்டு நாள் ஷூட்டிங்தான் பாக்கி. நீ சொன்னமாதிரி டெய்லி டே அண்ட் நைட் அடிச்சா முடிச்சுடலாம்."

ரங்கா போனதும் ஹரி, தயிர்சாதப் பொட்டலத்தைப் பிரித்துக் கொண்டு உட்கார்ந்தான். உள்ளும் புறமும் நினைத்துக் கவலைப் பட கோடி பிரச்னைகள். இந்தப்படம் சென்ஸாரில் குதறப்படாமல் இருக்க வேண்டும். இயல்பு கருதி சேர்க்கப்பட்டிருக்கும் சில வட்டாரக் கொச்சைகள், சென்ஸார் அதிகாரிகளின் சினத்துக்கு இலக்காகலாம். தொப்புள்களில் ஆம்லெட் போட்டால் தப்பில்லை. ஆனால் நிஜங்களைத் தோலுரிப்பதை ஏற்பதில் அதிகாரிகளுக்கிடையே அபிப்பிராய பேதம் வந்து விடும். அது கடைசிக் கட்டம். அதற்கு முன்னால் அனுமன் தாண்டுவதற்குக் கோடி கடல்கள் காத்து இருக்கின்றன. அகிலா ஒரு கடல்.

இரண்டு மாசம்! கடவுளே, அவள் ஓடிப் போனால், எழுபது சதம் முடிந்து விட்ட படத்தை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறேன்? நாளைக்கு உடனடியாகத் தயாரிப்பாளரைக் கூப்பிட்டுப் பேசச் சொல்ல வேண்டும். அகிலாவின் முதல் வெட்டிங் டே கொண்டாட்டத்தில் அவள் குழந்தையும் பங்கு பெறும். ரஞ்சனி கூட அப்படித்தான் ஆசைப்பட்டாள். அடுத்தடுத்த ஆண்டு திருமண தினங்களின் இரவுகளில், மகிழ்ச்சிக் கொண்டாட்டங்களின் முடிவில் ஒரு சொட்டுக் கண்ணீரை அவனால் தவிர்க்க முடிந்ததே இல்லை. அதனால்தான் இந்த வருஷம், ஒரு வெறி கொண்டவன் போல் பரிசோதனைக்கு, டாக்டரிடம் போய் வந்தான். ரஞ்சனி, யூ ஆர் பர்ஃபெக்ட்லி ஆல்ரைட். அந்த நாளுக்காகக் காத்திரு. ஃபீஸைக் கையில் வாங்கிக் கொண்டு, வாழ்த்துக்களைப் புன்முறுவலில் சொன்னாள் டாக்டர்.

ஹரிக்கு, அவள் இதன் பொருட்டு டாக்டரிடம் செல்வதில் உடன்பாடே இல்லை. எதையும் உடைத்துப் பார்த்து விடுவதில் என்ன சுவாரஸ்யம் இருக்கிறது? எதிர்பார்ப்பில் இருக்கிற விறுவிறுப்பு, விடை தெரிந்ததும் இல்லாமல் ஆகிவிடுகிறது. இல்லையா? மேலும், விடை விரும்பக் கூடியதாக மட்டுமே இருக்க மனம் அலையத் தொடங்கி விடும்.

ரஞ்சனி பதில் சொல்லவில்லை. அவள் தீர்மானங்களை எப்போதும் மாற்றுகிறவளல்ல.

மறுநாளே டெஸ்டுக்குப் போனாள். மூன்றாம் நாள் ரிஸல்டுடன் வந்தாள். ஷி இஸ் பர்ஃபெக்ட்லி ஆல்ரைட்.

ஆகவே, அவன் தானும் பரிசோதித்துக் கொள்ள முடிவு செய்தான். ரஞ்சனி அதைக்




கேட்கவில்லைதான். ஆனால் மனசுக்குள் மணியடிக்கத் தொடங்காமலா இருக்கும்?

டாக்டர் மகாதேவன். ஒரு சொல்லில் ஒரு சரித்திரத்தை எழுதப் போகிறவர். நிஜம் எப்போதும் சினிமா போல் இருக்கிறதில்லை. வலியும் வேதனையும் பீதிடும் சந்தோஷமும் வெறியும் வேட்கையும் வெற்றியும் தோல்வியும் ஏற்கெனவே மாற்ற முடியாமல் நிர்ணயிக்கப் பட்டு விட்டன. திரைக்கதையில் அவை எங்கெங்கே இடம் பெறுகின்றன என்று தெரியாததுதான் சவாலும் சுவாரஸ்யமும். வேறு வழியில்லை. சந்தித்துத்தான் தீர வேண்டும். இத்தனைக்கு நடுவிலும் ஒரு தயிர்சாதம் சாப்பிட அனுமதித்த கடவுளுக்கு நன்றி சொல்ல வேண்டும்.

அவன் எதிர்பார்த்ததை விட வேகமாக மத்தியானம் வேலைகள் நடந்தன. அஞ்சு மணிக்குள், எடுத்துக் கொண்டிருந்த பாடலை முழுவதுமாக முடித்துவிட முடிந்தது. அவனுக்குக் கொஞ்சம் ஆச்சர்யமாகவே இருந்தது.

"ஹரி, நான் அகிலாவோட அம்மாகிட்டே பேசினேன். நைட் பன்னெண்டு வரைக்கும் கன்டின்யூ பண்ணத் தயார்ங்கறா. இது பெரிய விஷயம். நீ ஹீரோவுக்கு போன் பண்ணிப்பார். அவர் ஃப்ரீயா இருந்து, வர முடியுமானா, முக்கியமான சில சமாசாரங்களை உடனே முடிச்சிடலாம்."

"பேசறேன் ரங்கா."

"இந்தக் குழந்தை க்ளோஸப்ஸ் கொஞ்சம் எடுத்துடலாம் இப்போ. ஏழு மணியானா அதுக்குத் தூக்கம் வந்துடுமாம். அப்பனைப் பார்... ஹீரோயினை சாப்டுட்டு இருக்கான்..."

"ரங்கா, க்ளோஸப்ஸுக்கு நான் இருக்கணுமா? நீ கொஞ்சம் பார்த்துக்கோ. நான் ஒரு அரை மணி, வெளியில் போயிட்டு வந்துட

றேன்."

"என்னாச்சு ஹரி? காலையிலிருந்தே பார்த்துட்டு வரேன். நீ சரியாவே இல்லை."

"நத்திங். ஹாஃப்பனவர். வந்து சொல்றேனே?"

சட்டென்று கிளம்பி, காரை எடுத்தான்.

உள்ளே பரபரப்பு கூடிக் கொண்டிருந்தது. படிக்கிற காலத்தில், பரீட்சை முடிவுகளின் போது கூட வராத பரபரப்பு. கொஞ்சம் பயம். கொஞ்சம் நம்பிக்கை. ஓரத்தில் ஓர் ஒளிக்கீற்று. தெம்பு தரும் கற்பனைகள். ரஞ்சனியின் முகம். வண்ணம் சேர்க்கப்படாத அவன் வரைந்த முகங்கள். முகத்தில் அடிக்கும் எதிர்க்காற்று. மீறி வழியும் வியர்வை. டாக்டர் மகாதேவன். அங்கே அகிலா. அப்புறம் பாப்பா. ஐயோ, அதன் கன்னங்கள்! வெறி பிடித்துத் தனக்காக உழைக்கிற ரங்கா. மறுபடியும் ரஞ்சனி.

கல்யாணம் முடிந்த நாலாவது நாள், "இன்னிக்கு ஒண்ணும் ஷூட்டிங் இல்லையே?" என்று ரஞ்சனி கேட்டாள். இரண்டாவது படம் தொடங்கியிருந்த சமயம்.

தீவுத் திடலில் சுற்றுலா பொருட்காட்சி. அதற்குப் போக வேண்டும். வெட்டவெளியில், பொறித்த அப்பளம் கொறித்துக் கொண்டு சுற்றிவர வேண்டும். ஜயண்ட்வீல். நெஞ்சம் படபடக்க ஜோராக ஒரு ரவுண்ட். பிறகு கூவத்தில் படகு சவாரி. வாரீர், வாரீர். எதை எடுத்தாலும் அஞ்சு ரூபா. அங்கே கொஞ்சம் அள்ளிக் கொள்ள வேண்டும்.

"இந்த அப்பர்-மிடில் கிளாஸ்ங்கறதே ஒரு இடைஞ்சல். மிடில்கிளாஸ் ஆசைகளும் மேல் தட்டு மனோபாவமுமா ரெண்டுங்கெட்டான் பொஸிஷன். ஒரு சேஞ்சுக்குக் கொஞ்சம் கீழே இறங்கிட்டு வரலாம் ஹரி?"

விழிகளில் ஆர்வம் பொங்க ரஞ்சனி கேட்டாள். எதையும் மறுக்கக் கூடிய சமயமா அது?

✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪



"ஏதாவது சந்தேகம் இருந்தா கேட்கலாம்...?"

"சங்கு சக்கர வாணம் வினாடிக்கு எவ்வளவு சுற்று சுற்றுது சார்....!"

— ராஜிராதா

✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪✪

அவள் கையை இறுக்கிப் பற்றி முன்னும் பின்னும் ஆட்டியபடி மிலிட்டரி நடையில் தீவுத்திடலைச் சுற்றி வந்தபோது காலடியில் சொர்க்கத்தைக் கண்டான் ஹரி.

இரண்டு மணி நேரம் நடந்தபின், உட்காரலாமா என்று ரஞ்சனி கேட்டாள்.

"கால் வலிக்கறதாடா?"

"உம். கொஞ்சம்."

"பிடிச்சு விடட்டுமா?"

"இங்கியே? பிடிங்க பார்க்கலாம்?"

அவள் நிச்சயம் எதிர்பார்க்கவில்லை. அவன், சட்டென்று அவள் கால்களை எடுத்துத் தன் மடிமீது வைத்து அமுத்தத் தொடங்கியதும் பதறிவிட்டாள்.

"ஐயோ, ப்ளீஸ்! விடுங்க. ரெண்டு பேர் பார்த்துட்டாங்க."

"சீ, இதிலென்ன அசிங்கம்? நான் என்ன பக்கத்து வீட்டுக்காரிக்கா கால் பிடிக்கறேன்? என் பெண்டாட்டிக்குத்தானே?"

அவள் திமிறி விடுவித்துக் கொண்டு எழுந்தாள். "ஐ'ம் ஸாரி. நான் விளையாட்டா கேட்டதே தப்பு."

"ஒண்ணும் தப்பு இல்லை. காம்பன்ஸேட் பண்ணிடு. சரியாப் போயிடும்."

"அதென்ன?"

"இதே மாதிரி பப்ளிக்கா ஒரு ஃபோர்ஸ்ஃபுல் முத்தா."

அவள் சிணுங்கி, மறுப்பாள் என்று நினைத்துக் கொண்டிருந்த வேளையில் சரேலென்று நெருங்கி, பளிச்சென்று ஒற்றி விலகினாள்.

அரை இருட்டில் நாலைந்து பேர் பார்த்துவிட்டு வெட்கப்பட, சீ என்றும் ஸ்டுப்பிட் என்றும் சிறு குரல்கள் கேட்க, எது குறித்தும் கவலைப்படாமல் எழுந்து போனார்கள்.

அவன் தன்னிச்சையாகக் கன்னத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டான். இன்னும் காயாத அன்றைய ஈரம். தன்னையறியாமல் எழுகிற பெருமூச்சு. இனிய நினைவுகளின் வீதி வலம். அட, எப்போது வந்தது டாக்டர் மகாதேவனின் கிளினிக்? வாருங்கள் மிஸ்டர் ஹரி.

அவன் முகத்தை துடைத்துக் கொண்டான்.

"சொல்லுங்கள் டாக்டர்."

டாக்டர் எழுந்து வந்து அவன் தோளை அமுத்திப் பிடித்தார்.

"ஸாரி ஹரி. நீங்கள் உங்களைத் தேற்றிக் கொண்டுதான் ஆக வேண்டும். உங்கள் உயிர் அணுக்களைப் பரிசோதித்த வகையில், ஒரு குழந்தையைப் பிறப்பிப்பதற்கான சாத்தியங்கள் உங்களிடம் இல்லை என்று அறிகிறேன். அதாவது..."

அவன் அவசரமாகக் கண்களை மூடிக் கொண்டான்.

(தொடரும்)

நம்மள விட
அவங்க பாடுதான்
ரொம்பப்
பரிதாபம்.....



1997 அக்டோபர் 26
ஈசுவர ஐப்பசி 9
மலர் : 56
இதழ் : 13

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்மிடடி பாப்பா - பாரதியார்.



## விழித்திருந்த வீரப்பனும் தூங்கிவிட்ட முதல்வர்களும்!

சந்தனக் கடத்தல் வீரப்பன் சேற்றைப் பூசி விட்டான்! கர்நாடகாவைச் சேர்ந்த ஆறு பேர் மீண்டும் பிணைக் கைதிகளாகும்வரை இரு மாநில அரசுகளும் பேசாமல் இருந்து விட்டன.

நக்கீரன் கோபால் உதவியுடன் சென்றமுறை பிணைக் கைதிகள் மீட்டு வரப்பட்டபோதே வீரப்பனும் சரணடைவான் என்று எதிர்பார்க்கப்பட்டது. அதற்கு அவன் விதித்த நிபந்தனை களையும் பகுதி அளவில் அரசு ஏற்றது. எனினும் அவன் உரிய காலத்தில் சரணடையவில்லை.

தமிழக - கர்நாடக அரசுகள் வீரப்பனின் இந்த வாக்குமீறலை எதிர்பார்த்து திட்டம் தீட்டி யிருக்க வேண்டும். மத்திய அரசுடன் ரகசியப் பேச்சுவார்த்தைகள் நடத்தி, ராணுவ உதவியுடன் வீரப்பன் வனப் பகுதியைச் சூழ்ந்து, சலித்து (combing operations நடத்தி) அவனைப் பிடித்திருக்க வேண்டும்.

அந்தப் பொன்னான வாய்ப்பைப் பயன்படுத்தியிருந்தால் மூன்று தரப்பு அரசுகளுக்கும் நற் பெயரும் அரசியல் ஆதாயமும் கிடைத்திருக்கும். பிணைக் கைதிகள் மீட்கப்பட்ட 'வெற்றிக் களிப்பில்' அந்த வாய்ப்பு தவற விடப்பட்டு விட்டது.

வீரப்பன் மீண்டும் சில பிணைக் கைதிகளைப் பிடித்து வைத்துக் கொண்டு மிரட்டக்கூடும் என்றாவது எதிர்பார்த்திருக்கலாம். இந்த விஷயத்திலும் இரு மாநில அரசுகளும் ஒற்றுமையாய்த் தவறியிருக்கின்றன! பந்திப்பூர் சரணாலயத்தில் பட்டுப் பூச்சிகளைப் பிடிக்கும் இலகுவுடன் பிணைக் கைதிகளைப் பிடித்திருக்கிறான் வீரப்பன்! இப்போது காஸெட் அனுப்பி மிரட்டுகிறான். கர்நாடக முதல்வர் படேல் டெல்லியில் போய் உதவிக்குக் கெஞ்சுகிறார். மத்திய உள்துறை



அமைச்சரோ, 'உங்களால் முடிந்ததை முதலில் செய்யுங்கள், பிறகு பார்க்கலாம்' என்கிறார்.

தமிழக முதல்வர், மீண்டும் நக்கீரன் கோபாலைத் தூதனுப்ப முயல்கிறார். அவர் மறுக்க, அவரது சகா சிவசுப்ரமணியத்தை அனுப்பி வைக்க முயற்சி மேற்கொள்கிறார்.

பிணைக் கைதிகளாகவுள்ள ஆறு நபர்களின் குடும்பத்தினர் சோகத்திலும் பயத்திலும் ஆழ்ந்து கிடக்கிறார்கள்.

'காலமறிதல்' என்று ஓர் அதிகாரமே குறளில் இருக்கிறது. தமிழக முதல்வருக்குத் தெரியாததல்ல.. ஆனாலும் ஒரு நல்ல வாய்ப்பைத் தவற விட்டு விட்டார்.

இந்த நிகழ்ச்சியினால் செல்வாக்கை, மக்களின் நல்லுணர்வை, கணிசமாக இழந்து விட்ட இரு மாநில அரசுகள் எதிர்க்கட்சிகளின் புதுப்பிக்கப்பட்ட தாக்குதலை வேறு சந்தித்தாக வேண்டும்.

## கசந்து போன நல்லுணர்வு!

பிரிட்டிஷ் அரசி இந்தியா வருவதற்கு முன்பே ரசாபாசமான குரல்கள் எழத்தான் செய்தன. 'ஜாலியன்வாலாபாக் கொடுமைகளுக்கு அவர் மன்னிப்புக் கேட்க வேண்டும்' என்று ஒரு பிரிவினர் வெறி கொண்டிருந்தனர். ராணியின் ஜாலியன்வாலாபாக் விஜயத்தையே ரத்து செய்துவிடலாமா என்றெல்லாம் யோசித்து, பின்னர் இரு தரப்பு நன்மை கருதி, நிகழ்ச்சி மாற்றங்களின்றி நடைபெற்றது.

அமைதியாகவும் நிதானமாகவும் அஞ்சலி செலுத்தினார் அரசி. விருந்தினர் புத்தகத்தில் கையெழுத்திட்டார். அவருடன் வந்த கணவர் எடின்பரோ கோமகன், அரசியை அடியொற்றி நடப்பதே தமது மரபு என்று கூறி, விமர்சனம் எழுதும்படி கேட்ட கோரிக்கையையும் மறுத்து கையொப்பமிட்டுப் போனார்.

ஆனால் நினைவுச் சின்னத்திலிருந்து வெளியேறும் நேரம், அவருடைய இந்த நல்லுணர்வு பிசகி விட்டது. கண்ணில் பட்ட அறிவிப்புப் பலகையிலிருந்த செய்தியை அவர் விமர்சித்த




விதம் ரசக் குறைவானது. 'உயிர் நீத்தவர்களின் ரத்தம் இவ்விடத்தில் தோய்ந்து போயிருக்கிறது' என்ற அறிவிப்பை, அவர் 'மிகைப்படுத்தல்' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

ஒரு நல்லுறவு விஜயத்தின் அடிப்படை நோக்கத்தைத் தவிடு பொடியாக்கும் வார்த்தைகளாக அவை ஆகி விட்டன. மக்கள் மனம் புண்பட, பத்திரிகையாளர்கள் அவரை நன்றாகப் பதம் பார்த்துவிட்டனர்.

தமது சமீபத்திய அயல்நாட்டுப் பயணத்தின்போது பிரதமர் குஜ்ராலும் தப்பும் தவறுமாகப் பேசி மாட்டிக் கொண்டிருக்கிறார்.

பிரிட்டனை ஒரு மூன்றாந்தர வல்லரசு என்று அவர் குறிப்பிட, பத்திரிகைகள் அதை வெளியிட்டு விட்டன. உடனே, தாம் அவ்வாறு கூறவில்லை என்று மறுத்திருக்கிறார். பின்னர் மறுப்பை ஓரங்கட்டிவிட்டு, தாம் அவ்வாறு பேசியதாகக் கூறப்படுவது பொது மேடையில் அல்ல, தனிப்பட்ட விவாதங்களின்போதுதான் என்று பூசி மெழுகும்படியாகியிருக்கிறது.

இந்தோ-பாக் பிரச்னை முற்றுப்பெற வேண்டும் என்று அரசி எலிசபெத் தெரிவித்த கருத்து தான் குஜ்ராலை இப்படி முன்னுக்குப் பின் முரணாகப் பேச வைத்திருக்கிறது.

'இந்தோ - பாக் பிரச்னை இரு நாடுகளுக்கிடையேயானது. அதில் மூன்றாவது தேசம் குறுக்கிடக் கூடாது' என்ற கோட்பாடுதான் பிரதமரின் பேச்சுக்குக் காரணம்.

இந்தக் கோட்பாடே கேள்விக்குரியது. இத்தனை ஆண்டுகளாக முயன்றும் இந்தியா - பாகிஸ்தான் உறவுகள் சீர்படவில்லை. இந்நாடுகளுக்கு ஆயுதம் ஏற்றுமதி செய்யும் நாடுகள்தான் இந்த எல்லைப் பிரச்னையினால் ஆதாயம் பெற்றுள்ளன. நமக்கோ, பயங்கரமான ராணுவச் செலவு; பொருளாதார நஷ்டம்!

தனது செல்வாக்கைப் பயன்படுத்தி, இந்தோ - பாக் உறவுகளைச் சமனப்படுத்த வேறு நடுநிலை நாடு முன்வருமேயானால், அதன் உதவியை மகிழ்ச்சியுடன் ஏற்கலாம்.

அதற்கு மாறாக, உதவ விரும்பும் நாட்டைச் சிறுமைப்படுத்துவது புத்திசாலித்தனமான அயலுறவுக் கொள்கையுமல்ல; பாரதப் பண்பாடும் அல்ல!

# கலக்(கு)கிறார்கள் கார்ட்டூனிஸ்டுகள்!

**வாசகர்களைச் சிரிக்க வைப்பதில் கார்ட்டூனிஸ்டுகளின் பங்கு மிக அதிகம். ஆளுக்கொரு மூலையில் அறையில் கதவைச் சாத்திக் கொண்டு சிரிக்க வைக்க சீரியசாக எப்போதும் யோசித்துக் கொண்டிருக்கும் தமிழ்நாட்டின் நாலு முக்கிய கார்ட்டூனிஸ்ட்களைக் கூப்பிட்டு சும்மா ஜாலியாக கலந்துரையாடச் சொன்னோம். 'ஹிந்து' கேசவ், 'தினமணி' மதி, நடனம், செல்லம் நால்வரும், தங்கள் துறையை பாதிக்கிற விஷயங்கள் பற்றியே அதிகம் பேசினார்கள்:**

**நடனம்:** முன்பெல்லாம் அரசியல்வாதிகள் தப்பு செய்ததுண்டு. அதை கார்ட்டூன் ஆக்குவது பொருத்தமாக இருந்தது. ஆனால் இப்போதைய அரசியல்வாதிகள் பயங்கரக் குற்றங்களை அல்லவா புரிகிறார்கள்? இதையெல்லாம் கார்ட்டூன் ஆக்கினால் நகைச்சுவையைவிட கோபம்தான் வருகிறது. ''பூலான்தேவி அரசியலில்



நடனம் • கேசவ்

நுழைந்திருக்கும்போது எனக்கு மட்டும் என்ன குறை?'' என்று வீரப்பன் கேட்கும் காலமிது.

**மதி:** ஒரு அரசியல்வாதியை நகைச்சுவை பொங்கக் கார்ட்டூனாக்கினால், அதைவிட ஒருபடி காமெடியாக இருக்கும்படி அவர் நடந்து கொள்கிறார். கார்ட்டூனையே மிஞ்சி விடுகிறது அவர்களது நடவடிக்கை!

**செல்லம்:** நேருஜி, ராஜாஜி ஆகியோரெல்லாம் தங்களைப் பற்றிய கார்ட்டூன் இன்னல்களை அனுபவித்து ரசித்திருக்கிறார்கள். கார்ட்டூனிஸ்ட் தாணுவுக்கு ராஜாஜி



யோசனைகள் கூறியதுண்டு...

**மதி:** அந்தக் கால அரசியல்வாதிகள் தங்கள் தனி வாழ்விலும் ஒழுக்க நெறியோடு இருந்தார்கள். கார்ட்டூனிஸ்டுகளும் ஓரிரு அந்தரங்க அத்துமீறல்களைப் பெரிதுபடுத்தியதில்லை.

**கேசவ்:** தனி வாழ்வில் ஒழுக்க நெறியைப் பின்பற்றாதவர்கள் பொது வாழ்வில் எதற்கு நுழைய வேண்டும்? அப்படி நுழைந்தால் அவர்களின் தனி வாழ்வும் விமர்சனத்துக்கு (கார்ட்டூன் உட்பட) உள்ளாகத்தான் செய்யும்.

**நடனம்:** தமிழகத்தில் கார்ட்டூனிஸ்ட் என்பவன், ஓரளவு டீஸன்ட்டாக வாழ

வேண்டுமென்றால் நான் முழுவதும் தொடர்ந்து பல பத்திரிகைகளுக்கு கார்ட்டூன் வரைந்து தள்ளிக் கொண்டே இருக்க வேண்டும். இதில் அவனுக்கு மூல நோயே வந்துவிடும்!

**மதி:** டைம்ஸ் ஆஃப் இந்தியா, பயனிர் போன்ற பல வட இந்தியப் பத்திரிகைகளில் கார்ட்டூனிஸ்டுகளுக்கு ஊதியம் கணிசமாகத் தரப்படுகிறது. இங்கே இந்து, எக்ஸ்பிரஸ் இதழ்களும் இந்த விதத்தில் ஓ.கே. தான். மற்றபடி.... பொருளாதாரப் பற்றாக் குறை இருக்கும்போது கார்ட்டூன் எப்படி வரைய முடியும்? நமக்கே சிரிப்பு வராதபோது நாமெப்படி மற்றவர்களைச் சிரிக்க வைக்க



மூடு வரும்?

**கேசவ்:** எனக்கென்னவோ, மூடு இல்லாத போது மேலும் நன்றாக கார்ட்டூன் வரைய முடியும் என்று தோன்றுகிறது. அதிகக் கோபத்தையும் சிறுமை கண்டு பொங்குதலையும் வெளிப்படுத்தலாமே. தவிர இன்று கார்ட்டூன் போடத் தொடங்கும் இளைஞர்கள் தாங்கள் வரைந்த கார்ட்டூன்களை உடனடியாக விற்க முடிகிறதா என்று பார்ப்பதிலேயே குறியாக இருக்கிறார்கள். ஒரு பதினைந்து வருடங்கள் கஷ்டப்பட்டு உழைத்தால்தான் ஒருவன் தேர்ந்த கார்ட்டூனிஸ்டாக வர முடியும் என்பது என் கணிப்பு. ஆர்.கே. லக்ஷ்மண் இன்று தலைசிறந்த கார்ட்டூனிஸ்ட். ஆனால் இந்தத் துறையில் அவரது முதல் பத்து வருடங்களைப் பற்றியும், அதில் அவர் சந்திக்க நேர்ந்த ஏமாற்றங்கள் பற்றியும் நமக்குத் தெரியாது.



• மதி



• செல்லம்

கூடல்: கார்ட்டூன்களுக்கு, சம்பந்தப்பட்ட அரசியல்வாதிகள் ரியாக்ட் பண்ணுவதுண்டா?

**கேசவ்:** இன்றைய அரசியல்வாதிகளுக்கு பொறுமையின் அளவு குறைவு. பொதுவாக அரசியல்வாதிகள் என் கார்ட்டூன்களுக்கு எதிர்ப்பு தெரிவித்ததில்லை. ஒருவர் மட்டும் ஆசிரியரிடம் இது பற்றி எரிச்சல் பட்டதுண்டு. ஒரு கார்ட்டூனிஸ்ட் மக்கள் ஏற்றுக் கொள்வதற்காக என்று ஒரு கார்ட்டூனை வரையக் கூடாது. அவனுக்கு முழுத் திருப்தி வருவதுதான் முக்கியம். ஆனால் தினசரிக்கென்று வரையும்போது நேரமின்மை காரணமாக நம் எதிர் பார்ப்புக்குக் குறைவான சில கார்ட்டூன்களையும் வரைய வேண்டி இருக்கிறது. இந்துவைப் பொறுத்தவரை எனக்கு முழுச் சுதந்தரம் கொடுத்திருக்கிறார்கள்.

**மதி:** தினமணியில் சேரும்போது "உங்க பாலிஸி என்ன?" என்றேன். ஆசிரியர் சம்பந்தம், "கார்ட்டூனுக்கு எதுக்கு பாலிஸியும், கட்டுப்பாடும்? தோணுவதைச் செய்" என்றார். என்றாலும் ஒரு கார்ட்டூன் வரைந்தால் பத்திரிகை அலுவலகத்திலேயே ஒரு ஆறு பேரிடமாவது காட்டி அது பளிச்சென்று புரி





''இது தீபாவளிக்கு என் கணவரின் பரிசு! பத்தாயிரம் ரூபாய் பட்டுப் புடைவை!''

''ஓ! எந்தக் கடையில் வாங்கினார்?''

''ம்... அவருக்கே இன்னும் இந்த விஷயம் தெரியாது!''

— கௌதம்

---

கிறதா என்பதைக் கேட்டுக் கொண்டால்தான் எனக்கு நிம்மதி. அரசியல்வாதிகள் நேரிடையாகத் தொடர்பு கொண்டதில்லை. ஆனால் வட்டம், மாவட்டம் போன்றவர்கள் "நம்ம தலைவரைப் பற்றி கார்ட்டூன் போடும்போது ஜாக்கிரதையா போடு'' என்று அன்பாக எச்சரித்ததுண்டு.

**நடனம்:** இந்த விஷயத்தில் அரசியல்வாதிகளைக் குறைத்து மதிப்பிட்டு விடக் கூடாது. ஒரு கார்ட்டூனுக்காகத்தானே விகடன் ஆசிரியரைக் கைது செய்தது அன்றைய அரசு?

**செல்லம்:** முரசொலியில் நான் வரையும் கார்ட்டூன்கள் அனைத்துக்குமே கருத்து தெரிவிப்பது கலைஞர்தான். இது பழகிப் போச்சு. சில சமயம் கையைக் கட்டிப் போட்ட உணர்வு தோன்றியதுண்டு. ஆனால் வருத்தம் இல்லை!

**நடனம்:** இது பல பத்திரிகைகளிலும் அவ்வப்போது நடப்பதுதான். ''இங்கே போயிருக்கிறீர்களா?'' என்று விகடனில் சாவி சென்னையின் பல்வேறு இடங்களைப் பற்றி எழுதினார். அவற்றுக்கு என்னுடைய கார்ட்டூன்தான். ஒருமுறை வள்ளுவர்கோட்டப் பகுதியைப் பற்றி எழுதியபோது 'கருணையும் நிதியும் சேர்ந்ததால் குப்பைமேடு கோபுரமாகியது' என்ற வாசகத்துக்கு கார்ட்டூன் வரைந்திருந்தேன். கடைசி நிமிடத்தில் அதை எடுத்துவிடச் சொன்னார்கள். அப்போது எம்.ஜி.ஆர் அரசு பதவியேற்றிருந்தது.

**மதி:** இன்றைய அரசியல்வாதிகளில் பலர் எப்படியாவது செய்தியிலும் கார்ட்டூனிலும் இடம் பெறுவதை ஒரு பெருமையாகவும், பப்ளிசிடியாகவும் எண்ணுகிறார்கள்.

**கேசவ்:** எனக்கு மிகவும் பிடித்த கார்ட்டூனிஸ்ட் ஒலிபான்ட். அவரே தனது குருவாக கருதியது டேவிட் லோ என்பவரை. பல சர்வதேச கார்ட்டூனிஸ்டுகளும் இவரைக் கடவுளாகவே எண்ணுவதுண்டு. பழுத்த அரசியல் சிந்தனை உடையவர். பிரபல அரசியல்வாதிகளின் வீடுகளுக்கே சென்று அவர்களை ஸ்டடி செய்தவர். அவர் வரைந்தால் அமெரிக்கப் போர் கப்பலிலிருந்து, ஜெர்மன் போர் கப்பலை வித்தியாசப் படுத்திக் காட்டுவார்! அப்படியொரு சின்ஸியாரிட்டி!

**கல்கி:** உங்கள் படைப்புகளில் அதிக வரவேற்பு பெற்ற கார்ட்டூன் என்று எதையாவது குறிப்பிட்டுச் சொல்ல முடியுமா?

**நடனம்:** விகடன் அட்டைப்படம். வித்வான் தனது நண்பரிடம் பேசிக் கொண்டிருக்க, நண்பரின் குழந்தை அழுகிறது."நேற்று கச்சேரிக்கு வந்திருந்தீர்களா?" என்று வித்வான் கேட்க, நண்பர் "பேஷா. நீங்க முகாரியை முடிச்சதும், இவ ஆரம்பிச்சுட்டா'' என்று நண்பர் பதிலளிக்குமாறு நான் வரைந்திருந்த கார்ட்டூனுக்கு நல்ல வரவேற்பு.

**செல்லம்:** இந்திராகாந்தியின் எமர்ஜென்ஸி கால கட்டத்தில் அவர் உருவம் படிப்படியாக ஹிட்லரின் உருவமாக மாறுவதுபோல் நான் வரைந்திருந்த கார்ட்டூன் பலரையும் கவர்ந்தது. ''நியூஸ்வீக்''இதழில்கூட இதை மறு பிரசுரம் செய்திருந்தார்கள்.

**கேசவ்:** "பதவியில் இருக்க இரு வழிகள்" என்ற தலைப்பில் அகல வாயைத் திறந்து கொண்டிருக்கும் சேஷனையும், ஜிப் போட்டு மூடிய வாயுடன் நரசிம்மராவையும் வரைந்திருந்த கார்ட்டூனுக்கு நிறைய பாராட்டுகள்.

---

*''என்ன பால்காரரே! பால் ரொம்ப தண்ணியா இருக்கு?''*

*''மினரல் வாட்டர்தான் கலக்கிறேன். பயப்படாம பயன் படுத்துங்க!''*

— ஜ-லி



ஆனால் பிரமாதமாக வந்துவிட்டதாக நாம் நினைக்கும் சில கார்ட்டூன்கள் மக்களிடையே அவ்வளவாக எடுபடாமல் போவதும் உண்டு. உதாரணமாக தியானன்மென் சதுக்கப் படுகொலையின் போது சீனாவை ஒரு டிராகனாக உருவகப்படுத்தி, அதன் வாயில் பற்றிக் கொண்ட நெருப்பாக அந்தப் படுகொலையைச் சித்திரித்திருந்தேன். தன் வாயால் ஊதி அந்தத் தீயை அணைக்கப் பார்க்கும் அது. ஆனால் காற்று பட்டால் தீ மேலும் கொழுந்து விட்டுத்தானே எரியும்? இந்தக் கருத்து நான் எதிர்பார்த்த அளவு மக்களைச் சென்று அடையவில்லை.

**கல்கி:** மற்றவர்களைக் கேலி செய்வதே ஒரு தொழில் என்று ஆகி விடுவதால் கார்ட்டூனிஸ்டுகளை ஒருவித சாடிஸ்டுகள் என்றும் கருத இடம் இருக்கிறதே?

**கேசவ்:** கார்ட்டூன் என்பதே ஓர் எதிர்மறைக் கலைதான். விலங்குகளை ஒத்ததுபோல் வி.ஐ.பி.க்களின் உருவங்களை வரைவதாக நீங்கள் குறிப்பிடுவது உண்மைதான். ஆனால் குறிப்பிட்ட உருவமல்ல; அதன் இயற்கைத் தன்மையை அந்த அரசியல்வாதி கொண்டிருக்கிறாரா என்றுதான் பார்ப்பேன்.

**மதி:** நரசிம்மராவை நான் பலமுறை ஆமை போல வரைந்திருக்கிறேன். எந்த முடிவெடுப்பதிலும் அவர் ஸ்லோ என்பதால்தான் இப்படி வரைந்தேன்.

**கேசவ்:** பாங்கோலின் என்ற மிருகம், தன்னைக் கொல்ல ஏதாவது மிருகம் வந்தால் உருண்டையாக பந்து போல தன்னை சுருட்டிக் கொண்டு தப்பி விடும். நரசிம்மராவின் தன்மை இது போன்றது என்பது என் கருத்து.

**நடனம்:** யதார்த்தமான நகைச்சுவை இன்று குறைந்துவிட்டது. சமுதாயமும், ரொம்ப சீரியஸ் ஆகிவிட்டது. விதவிதமான கேரக்டர்கள் எல்லாம் இப்போது அரிதாகி விட்டன.

**செல்லம்:** மாலி, சாமாவெல்லாம் பல விதமான பாத்திரங்களை என்னமாகப் படைத்தார்கள்! வெகு அருமை. ஒரு ஹோட்டலில் "சாப் பாடுபோ டப்படும்" என்று மூன்று வரிகளில் எழுதியிருக்க, "எனக்கு ஒரு ப்ளேட் சாப், இவருக்கு ஒரு ப்ளேட் பாடுபோ" என்பான் ஒருவன். ராஜுவின் இந்தக் கார்ட்டூனை நினைத்தால் இப்போதும் சிரிப்புப் பொங்குகிறது!

**நடனம்:** பூம் பூம் மாட்டுக்காரனை வைத்தே பல ஜோக்குகள். இப்போது அப்படி ஒருவன் இருக்கிறானா? வேட்டி குல்லா என்று விதவிதமாக அலுவலகம் சென்றார்கள் முன்பு. கார்ட்டூனுக்கு நல்ல ஸ்கோப். இப்போது எல்லாமே ஸ்டீரியோடைப்பாகிவிட்டது.

**செல்லம்:** ஆர்.கே. லக்ஷ்மன் பழங்காலத்து மரச்சாமான்கள், உத்திரங்கள் இதையெல்லாம்கூட வெகு அழகாகக் கண்முன் நிறுத்துவார்.



**"என்ன! கஜானா காலியா? உடனே நாடெங்கும் நர்சரி பள்ளிகளும், இஞ்சினியரிங், மெடிகல் காலேஜ்களும் திறக்க ஏற்பாடு செய்யுங்கள்!"**

**— பாரதி**

**கேசவ்:** இன்றைக்கும் பாக்கெட் கார்ட்டூனில் அவருக்கு ஈடு யாருமில்லை என்றாலும் புடவையிலிருந்து சூடிதார், வேட்டியிலிருந்து பேன்ட், கம்ப்யூட்டர் என்றெல்லாம் மாறி விட்டதால் வட இந்தியாவில் அவரது கார்ட்டூன்களுக்குக்கூட (இன்னும் பழமையைப் பிடித்துக் கொண்டிருப்பதால்) மவுசு ஓரளவு சரிந்திருப்பதாகக் கேள்வி.

**மதி:** கார்ட்டூனின் முக்கிய வேலை சிந்திக்க வைப்பதுதான்.

**கேசவ்:** சிரிப்பும் வந்தால் அது போனஸ்.

**செல்லம்:** நாம் சொல்ல நினைச்சதை இவன் சொல்லிட்டானே என்று மக்கள் பாராட்டணும்.

**நடனம்:** இன்னும் பாலிஷ்டா சொல்லிட்டானேன்னு ரசிக்க வைக்கணும்.

**கேசவ்:** கார்ட்டூனே புதிய விவாதங்களுக்கு வழி வகுப்பதாகக்கூட அமையலாம்.

**செல்லம்:** கேசவ், உங்கள் கார்ட்டூன்களை நான் மிகவும் ரசித்து கவனித்து வருகிறேன். பிரமாதமாகச் செய்கிறீர்கள்.

**கேசவ்:** நன்றி சார்! ஒரு விஷயம் தெரியுமா? நான் பதினைந்து வயதிலிருந்தே உங்கள் கார்ட்டூன்களின் ரசிகன். நீங்கள் கோகுலத்தில் செய்த படக்கதைகளையெல்லாம் இன்னும் பாதுகாத்து வருகிறேன் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.

தொகுப்பு: **ஜி.எஸ்.எஸ்.**
படங்கள்: **தி. பாண்டியராசு**

அற்புதங்கள் நிகழலாம் என்று, எல்லா தரப்பு மக்களும் கமலின் மருதநாயகம் தொடக்க விழாவிற்கு வந்திருந்தனர். எம்.ஜி.ஆர் திரைப்பட நகரில், விழாவை தொடங்கி வைத்த எலிசபெத் ராணியாரிடம் "மக்கள் உங்களைப் பார்க்க ஆவலாகக் காத்திருக்கிறார்கள்" என்று இரண்டொருமுறை காதில் போட்டும், "அடுத்தமுறை மக்களைப் பார்த்துக் கொள்கிறேன்" என்பதாக ...'next time, next time' என்று விடை பெற்றார். டயானாவுக்கும் ராணிக்கும் இருந்த – இருக்கும் வித்தியாசமே இதுதானே! அதைக் காப்பாற்றா விட்டால் எப்படி?

தொடக்க விழாவிற்கு வந்த ரஜினி, மேடைக்கு வராமல் போனது முக்கியமல்ல. சத்யராஜ், கார்த்திக்... என்று ராணியிடம் கமல் அறிமுகம் செய்து வைக்கிற சடங்கிலும் விழுந்தடிக்கவில்லை. வாழ்த்த வந்த நண்பனாக, அமைதியாக நின்றபடியே இருந்து விட்டுப் போய் விட்டார். "எப்பயுமே அவர் ஜென்டில்மேன்தான்யா" – கொஞ்சம் பிறத்தியாருக்குக் காதில் விழும்படியாகவே சுற்றியிருந்த மக்கள்

# எம்.ஜி.ஆர் நகரில்



பேசினர்.

வாழ்த்த வந்த ஜி.கே. மூப்பனார், கலைஞர், நடிகர் திலகம், ஜெய்பால் ரெட்டியை வரிசையில் அமர்த்திவிட்டு, கமல் ஒரு ஓரத்தில் அமர்ந்தது, தன்னடக்கத்தை 'காட்டியது' போல் இருந்தது. அடுத்த நிமிடமே கொலாப்ஸ்!

வி.ஐ.பி.க்களுக்குப் போடப்பட்ட இருக்கைகளில் சில காலியாக இருந்தன. 'வந்தமர்ந்து கொள்ளுங்கள்' என்று கமல் சைகை காட்டியதுதான் தாமதம். ரசிகர்கள் விழுந்தடித்து தூசியைக் கிளப்பி விட்டார்கள்! இந்த ஆரவாரத்தில் ஜெய்ப்பால் ரெட்டியின் பேச்சு மிதிபட்டு விழுந்தது.

"கட்டபொம்மனின் நினைவு நாளில் 'என் கண்மணி', மருதநாயகத்தை தொடங்கியது எனக்கு சந்தோஷமளிக்கிறது. நான் ஏன் இன்னும் வாழ்கிறேன் என்றால்... கேரக்டர்களுக்காக முகத்தை கோரமாக்கி, நடிப்புக் கலைக்கு உயிரூட்டும் கமலைப் பார்க்கத்தான்... நடிப்பில் இன்று கமல் முக்கியமானவர். நான் அந்தக் குடும்பத்தின் மூத்த மகன்..." என்று தொடங்கிய சிவாஜியின் பேச்சு அற்புதமாக அமைந்தது.

"ஏற்கனவே நாயகன். இப்போது மருதநாயகன்; குள்ளமான உருவத்தில் தோன்றி, உயரமான புகழை எட்டிய கமல், ஒரு கலைஞானி" என்றதும் கலைஞருக்குக் கிடைத்தது ஏகப்பட்ட கரகோஷம்!

தனக்கு 'வாழ்வளித்த'

• 'மருதநாயகம்' கமல்

கே. பாலச்சந்தர் வராததால் தன் உள்ளக் குமுறலைக் கொட்டினார் கமல். இந்த ஆதங்கம் ஒரு கவிதையாக மலர்ந்தது. ஆனால் விழா தொடக்கத்தில் 'களத்தூர் கண்ணம்மாவில் தோன்றிய கமல்' என்று தொடங்கி



• ராணியை வரவேற்கும் கலைஞர்

# எலிசபெத் ராணி!

கூட்டத்தினருக்கு கமலின் வேறுபட்ட வேடங்களை தொகுத்துக் காட்டியபோது கே. பாலசந்தரின் படங்களிலிருந்து எதுவும் இடம் பெறாமல் ஜாக்கிரதையாக 'வெட்டி'யிருந்தார்கள்.

"பாலசந்தர் கபடிக் கோட்டினை நாட்டின் எல்லைக் கோடாக நினைத்து விட்டார். விழாவிற்கு வராமல் களங்கத்தை ஏற்படுத்தியதுதான் அவர் கேட்கும் குருதட்சணையானால் அது அவருக்குக் கிடைத்து விட்டது!" என்றவர், ஃபெப்ஸிக்கு அழுத்தமான நன்றியையும் உடனே தெரிவித்தார்.

படைப்பாளிகளின் பக்கமிருந்து விழாவுக்கு யாரும் வரவில்லை. பாலசந்தர் வருகிறேன் என்று சொன்னபின்தான் அழைப்பிதழ் அச்சடிக்கப்பட்டதா? என்பது மர்மமாக இருக்கிறது.

இருபது நிமிஷம்தான் ராணி இருந்தார். கொஞ்சம் ஷூட்டிங் பார்த்துவிட்டு, போட்டோவுக்கு முகத்தைக் காட்டிவிட்டு, போயே விட்டார்.

> "ஏற்கெனவே நாயகன்;
> இப்போது மருதநாயகன்.
> குள்ளமான உருவத்தில்
> தோன்றி உயரமான புகழை
> எட்டிய கமல் ஒரு
> கலைஞானி!"
> - கலைஞர்

**பி**றகு, பிற்பகல் ராஜீவ் காந்தி நினைவகத்திற்கு ராணியார் வரும்போது தூறல் விழுந்து கொண்டிருந்தது. பரந்த புல்வெளியில் புதைந்த துயரத்தைப் பார்த்தவர்களுக்குப் பழைய நாட்களை நினைவு கூராமல் இருக்க முடியவில்லை. போலீஸாரின் கெடுபிடிகளைப் பார்த்து, "இதை ராஜீவ் காந்தி வந்தபோது செய்திருக்கணும்" என்று போட்டோ கிராபர்களும், பத்திரிகையாளர்களும் முணுமுணுத்தனர். ராணியார் வருவதற்கு முன் ஒத்திகைகள் பார்த்த போலீஸ் அதிகாரிகள், தமிழகப் பத்திரிகையாளர்களை விரட்டு விரட்டென்று விரட்டிக் கொண்டிருந்தனர்.

இந்தப் பரபரப்புக்கிடையில் வெள்ளையர்கள் உள்ளே நுழைந்து கேமராக்களுக்கு கோணம் பார்த்ததை, போலீசார் தடுக்கவில்லை. வாய் பிளக்க அவர்களின் நிறத்தை ஆசையோடு பார்த்துக் கொண்டிருந்தனர்! ராணியார் நடந்து கொண்டே ராஜீவின் துயர சம்பவத்தைக் கேட்டபோது அவர் முகத்தில் கவலை படர்ந்திருந்தது.

- சு. வேணுகோபால்

**ப**ச்சைப்பசேலென்று எதிரில் வந்து நின்றாள் பார்வதி.

"இதோ பாருங்க... நான் ரெடி... உங்க பையனும், பொண்ணும்தான் கிளம்ப மாட்டேன்னு அடம்பிடிக்கறதுங்க. வருஷா வருஷம் எல்லாருமா சேர்ந்துதானே தீபாவளிக்கு டிரஸ் வாங்கப் போவோம்! இந்த வருஷம் என்ன புதுசா கூத்தடிக்கிறாங்க? கொஞ்சம் கேளுங்க'' என்றவளைப் பார்த்தேன். அடிக்கிற பச்சையில் புடைவை, அறைகிற பச்சையில் மேட்சிங் பிளவுஸ்; காடி பச்சையில் கைப்பை, ஜோடி பச்சை காலணிகள் என்று ஒரு பச்சை தமிழச்சியாய் அவளை நோக்குங்கால், என் பையனும், பெண்ணும் இவளுடன் வரத் தயங்குவதன் நோக்கம் எனக்குப் புரியாமலில்லை.




இருந்தாலும் இவள் திருப்திக்காக அவர்களைக் கேட்டு வைத்தேன்.

''அப்பா எங்களை விட்டுடு... நீ தாலி கட்டின பெண்டாட்டி! உன் தலையெழுத்து. நீ அம்மாவோட போயே ஆகணும்...'' பச்சை வேட்டி, பச்சை சட்டை, பச்சை பனியன், பச்சை ஜட்டின்னு அம்மா சொல்றதை நீ வாங்கி தீபாவளிக்கு அம்மாவோட மேட்சிங்கா போட்டுட்டே ஆகணும். எங்களைத் தொந்தரவு பண்ணாதே... பணத்தைக் கொடு. நாங்களே வாங்கிக்கிறோம். இல்லேன்னா பழைய துணியே போதும்... பச்சை ஜீன்ஸும் பச்சை சூரிதாரும்னா பயமா இருக்கு'' என்று அவர்கள் கூறியபோதுதான் எனக்கும் பகீரென்றது.



பச்சை வேட்டி பச்சை சட்டையுடன் என்னைக் கற்பனை செய்து கொண்டவன் பீதியில் அலறினேன்.

"பார்வதி, நானுமா பச்சையிலே டிரெஸ் எடுத்துக்கணும்" என்று பரிதாபமாகக் கேட்டேன்.

''உங்களுக்கெல்லாம் நான் சொன்னா கிண்டலாத்தான் இருக்கும்... இந்த வருஷம் பச்சை கலர்லே கட்டிண்டா அத்தனை விசேஷம்னு எல்லாப் பத்திரிகையிலும் எழுதறான்... தீபாவளியை விட்டா நம்ப எந்தப் பண்டிகைக்கு டிரஸ் எடுக்கப் போறோம்? ஏதோ தோஷ நிவர்த்தியா இருக்கட்டுமேன்னு பச்சையோ, பச்சை கலந்த கலர்லயோ எடுக்கலாம்னு சொன்னேன்... கேட்டா கேளுங்க. இல்லேன்னா விடுங்க... குழந்தைங்க எப்படியோ போகட்டும். நீங்க என் கூட வாங்க... நல்ல பட்டையா பச்சைக் கரைபோட்ட வேஷ்டியாவது வாங்கிக்கங்க. ஆமாம்!'' என்று என்னை கச்சைக் கட்டிக்

கொண்டு இழுத்துப் போனான்.

எனக்கு இதுவும் வேண்டும். இன்னமும் வேண்டுமென்று நினைத்துக் கொண்டேன். பார்வதியின் இந்த 'பச்சையோமேனியா'விற்கு முதலில் பச்சைக் கொடி காட்டி ஆரம்பித்த அசடு நான்தான்.

# தீபாவளி ப(ர்)ச்சேஸ்!

## அகிலா கார்த்திகேயன்



என் மச்சினன் சுந்தர் அப்போது மேட்டூரில் வேலை பார்த்துக் கொண்டிருந்தான். மேனேஜருக்கும் அவனுக்கும் ஒத்துப்போகாததால் அங்கிருந்து கழற்றிக் கொள்ளப் படாதபாடுபட்டுக் கொண்டிருந்தான். அடிக்கடி சென்னையில் தலைமை ஆபீஸுக்கு வந்து இது விஷயமாக முயற்சி செய்து கொண்டிருந்தான். அப்படி ஒருமுறை வந்த போதுதான், நான் ஒரு வார இதழில் படித்ததை அவ்விடம் சொல்லித் தொலைக்க, அதைப் பார்வதியும் கேட்டுத் தொலைத்த விபரீதம் ஏற்பட்டது!

நடைபெறும் ஈஸ்வர வருடத்தில் சகோதரிகளுக்குப் பச்சை வர்ணத்தில் சேலை வாங்கிக் கொடுத்து குஷிப்படுத்தினால் உடன்பிறந்தவர்களுக்கு எந்த வேலையிலும் வெற்றி கிட்டும் என்ற அந்தப் பொல்லாத செய்தி சுந்தரை உடனே ஜவுளிக்கடைக்கு விரட்டியதில் தவறில்லை. கடையில் பச்சைப் புடைவைகளுக்கு அதிக கிராக்கியாயிருக்க, இவன் செலக்ட் செய்த அதே புடைவையை ஒரு சீமாட்டியும் தான்தான் செலக்ட் செய்தேன் என்று வம்புக்கு வந்ததில்கூடத் தவறில்லைதான். சுந்தர் விட்டுக் கொடுக்காமல் வீம்பாக அதே புடைவையை மல்லுக்கட்டி பில் போடச் சொன்னதில்தான் தவறு நேர்ந்தது. பில்லைக் கட்டி புடைவை பார்சலை வாங்கியதும்தான் அவன் கவனித்திருக்கிறான்: அந்த சீமாட்டி பக்கத்தில் பல்லைக் கடித்தபடி தன் எம்.டி. நிற்பதை! சுந்தரை சுட்டிக்காட்டி எம்.டி.யின் மனைவி ஏதோ சொல்லிக் கொண்டிருக்க, இவன் வெடவெடத்து நிற்க, "என்ன கொழுப்புய்யா உனக்கு... என் சம்சாரம் விரும்பி எடுத்த பச்சைப் புடைவையை தைரியமா வாங்கத் தெரிஞ்சது இல்லே... அதே தைரியத்தோட உன் டிரான்ஸ்ஃபர் ஆர்டரையும் வாங்கிக்க... தண்ணி கஷ்டமே தெரியாத மேட்டூர்லே இருந்தா உன் கொழுப்பு அடங்காது... பச்சை தண்ணியே இல்லாத இடத்துக்கு மாத்தறேன்... நீ வா விசாலம்" என்று கத்தியவர், இவனைப் பார்த்துக் கண்ணை அடித்திருக்கிறார். பிறகுதான் தெரிந்தது. அவர் மனைவியும் இதுபோல் பச்சைக் கலர் போதையில் அவரை வதைத்துக் கொண்டிருக்க, வாங்க வந்த இடத்தில் சுந்தரால் தடை ஏற்பட, அவர் மனைவி பச்சை சென்டிமெண்டை விட்டு ஒழிக்க ஏதுவாயிற்று என்ற சமாசாரம்.

அந்த குஷியில்தான் எம்.டி. இவன் கேட்ட டிரான்ஸ்பரை மனமார வழங்கி விட, பச்சை



''அவர் போலி சாமியார்ங்கறது அவர் வாயைத் திறந்து பேசினதுமே புரிஞ்சிடுச்சு.''

''எப்படி?'

''அறம், பொருள், இன்பத்துக்கப்புறம் வீடுன்னு சொல்லாமல் சின்ன வீடுன்னு சொல்றாரே!'

– பாலா

சென்ட்டிமென்ட்டும் 'டிரான்ஸ்பர்' ஆகி சுந்தரிடம் ஒட்டி, பின் பார்வதியிடமும் பற்றிக் கொண்டது.

''அத்திம்பேர், நீங்க சொன்னது ரொம்பவும் சரி. அக்காவுக்கு பச்சைப் புடைவை வாங்கப் போன இடத்திலேயே என் காரியம் சக்ஸஸ் ஆயிடுத்து.... அக்கா! உனக்கு போனஸா இன்னொரு புடைவையையும் வாங்கிண்டு வந்துட்டேன். இந்தா! கட்டிண்டு ஆசிர்வாதம் பண்ணு'' என்று ஆசிர்வாதம் வாங்கிக் கொண்டு அவன் கிளம்பி விட்டான். ஆனால் அவன் கிளம்பி விட்டதில் பார்வதிக்கு பச்சை மேல் இச்சை பெருகி, என்னை வதம் செய்ய ஆரம்பித்து விட்டது. பச்சை மகிமையை பல வார இதழ்களில் படித்ததில், இவள் படுத்தல் பெருகி விட்டது.

''இதோ பாருங்கோ... உங்க அக்காவுக்கெல்லாம் இந்த வருஷ நவராத்திரிக்கு நாம பச்சைப் புடைவை வாங்கித் தர்றோம்... செலவாகுதேன்னு மூக்கால அழாதீங்கோ'' என்று ஒரு இடியை இறக்கினாள்.

''ஏண்டி... உன் தம்பி சுந்தர் பாடு தேவலாம். அவனுக்கு நீ ஒரே ஒரு அக்கா... எனக்கு அரை டஜன் அக்காக்களாச்சே! மூக்கால அழாம என்ன பண்ணச் சொல்றே...''

''பாத்துண்டே இருங்கோ... ஏதாவது நல்லது நடக்கும்'' என்று இவள் பாட்டுக்கு கடைக்கு என்னை இழுத்துச் சென்று, தேவேந்திரா, கங்குடி, பூணம், மெட்டல் ஷிபான் என்று என் அக்காக்களை வகைப்படுத்தி, கிளிப் பச்சை, வெனிர் பச்சை, ஆலிவ் பச்சை, மாசிப் பச்சை, இலைப் பச்சை, காய்கறிப் பச்சை, கோக பச்சை, கொத்துமல்லி பச்சை என்று பச்சைகளையும் வகைப்படுத்தி ஒரு புடைவைக் குவியலையே வாங்கி, வைத்துக் கொடுத்து ஆறு அக்காக்களையும் சந்தோஷப்படுத்தி அனுப்பினாள்.

பத்து ஆண்டுகளாக நான் எதிர்பார்த்த பிரமோஷன் இப்பொழுது வந்து தொலைய, அதன் பழி பச்சை மேல் விழுந்தது.

''என்னமோ அழுதேளே... இப்போ பார்த்தேளா?'' என்று பார்வதிக்கு ஈஸ்வர வருட பச்சைப் பைத்தியம் பூத்துக் குலுங்க ஆரம்பித்து விட்டது.

மூக்குத்தி, ரிஸ்ட் வாட்ச், இரண்டு கின்ணம், ஒரு ஸ்பூன் இத்யாதிகளை திருடியதாகக் குற்றம்சாட்டப்பட்டு ரெண்டு வருடத்திற்கு முன் வேலையிலிருந்து நிறுத்தப்பட்ட வேலைக்காரி பச்சையம்மாவின் காலில் விழுந்து திரும்பவும் அவளை வேலைக்கு வரும்படி செய்திருக்கிறாள். ஆறு ஆண்டுகளாக 'ஆவின்' பாலுக்கு மாறியிருந்தும் திரும்பவும் தண்ணீர் பாலைக் கொண்டு வந்து கொடுக்க ஆதிகால பால்காரனை ஏற்பாடு செய்து விட்டாள். அந்தப் பால்காரனின் ஒரிஜினல் பெயரான பிச்சை என்பது மருவி பச்சையானதை, பாவம் பார்வதி அறிய வாய்ப்பில்லைதான்!

கதவு, ஜன்னல் ஸ்க்ரீன், சோபா செட், மெத்தை, தலையணை உறைகள் என்று, எதிலும் பச்சை என்று ஒரு பசுமைப் புரட்சியே செய்ய ஆரம்பித்து விட்டாள். சமையலறையில் பிடித்துணியைக் கூட பச்சையில்தான் இருக்க வேண்டும் என்கிறாள். நியாயமா சொல்லுங்கள்?

இப்படி இவள் 'பச்சைக் காமாலை' பிடித்து அலைந்ததில், எனக்கும் என் குழந்தைகளுக்கும் பச்சை அலர்ஜி ஆகிவிட்டது. கண்டிப்பாக தீபாவளிக்கு இவளுடன் பர்சேஸுக்குப் போனால் அது 'பச்சே'ஸாகத் தான் இருக்குமென்று அவர்கள் பயந்ததில் நியாயம் இருக்கிறது.

'தீபாவளி தள்ளுபடி' என்று கொட்டை எழுத்தில் போர்டில் எழுதி, கொசுறாக 'பச்சை ரகங்களுக்கு மட்டும் இல்லை' என்று கண்டிருந்தது. விசாரித்ததில் பச்சைப் புடைவை

''அமைச்சர்களுக்காக ஒரு புது 'இன்ஷ்யூரன்ஸ்' திட்டம் வருதாமே?''

''அமைச்சர் பதவி போயிட்டா பென்ஷன் தர்ற மாதிரியா?''

''இல்லே, லஞ்ச ஊழலில் மாட்டிக்கிட்டா, அவங்களை 'பெயில்'லே எடுக்க பணம் தர்ற மாதிரி!''

– சம்பத் குமாரி





''வரவர நம்ம தலைவர் வெளிப் படையாகவே பேச ஆரம்பிச்சுட்டாரு?''
''அப்படி என்ன பேசினாரு?''
''நாம என்ன சொல்றோம்னு முக்கியமல்ல; நாம என்ன வாங்கறோம் கறதுதான் முக்கியம்னு பேசியிருக் காரு!''

– வி.எஸ். கணேசன்

களுக்கு ஏகப்பட்ட டிமாண்ட் என்றும், விலையைப் பார்க்காமல் கிடைத்ததை அள்ளிக் கொண்டு போவதாகவும் கூறினார்கள்.

இந்தத் தகவல்கள் பார்வதியின் பச்சை பக்திக்குத் தூபம் போட, அந்த ஜவுளிக்கடைக் குள் நுழைந்தோம். பச்சைமா மலை போல் குவிந்திருந்தன புடைவைகள். வாங்க வந்திருந்த பெரும்பாலான பெண்டிரும் பச்சையாகவே உடுத்தியிருக்க, பச்சையோடு பச்சையாய்க் கலந்துவிட்ட பார்வதியை அடையாளம் காண இயலாதவனாய் 'சரி செலக்ட் செய்து கொண்டு வரட்டும்' என்று நினைத்தவன், மற்ற கணவன்மார்களோடு சேர்ந்து உட்கார்ந்தேன்.

சற்று நேரத்திற்கெல்லாம் பார்வதி புடைவை பார்சலுடன் வெளியேறியதைப் பார்த்தவன், விடுவிடுவென்று அவள் பின் னால் போனேன். சும்மா இருந்திருக்கலாம். இத்தனை சீக்கிரம் புடைவையை 'செலக்ட்' செய்து சாதனை படைத்து விட்டதை மெச்ச வேண்டுமென்று தோன்றியது.

'அட! பரவாயில்லையே, சீக்கிரம் செலக்ட் பண்ணிட்டயே'' என்றவாறு செல்லமாக முதுகில் நான் தட்டியது பிசகாகி விட்டது.

"யார்டா அது பொறுக்கி நாயி! பின்னால வந்து தட்றது?" என்று அந்த க்ஷணமே திரும்பி கன்னத்தில் கனமாக 'பளார்' விட்ட அந்த பாவையைப் பார்த்தேன். பாவி பார்வதி யில்லை! அதே புடைவை, அதே புறமுதுகு சாயலுடன் கூடிய பிறன்மனை! தர்ம அடி விழுவதற்குள் தலைதெறிக்க கடைக்குள் ஓடினேன்.

"ஸார்... உங்க வொய்ஃப் பரிசுக் கூப்பனை வாங்காம போயிட்டாங்க... அதை வாங்கத் தானே உங்களை விரட்டி அனுப்பியிருக் காங்க... இரண்டாயிரத்துக்கு மேலே வாங்கியிருக்காங்க. இந்தாங்க ஒரு பரிசுக் கூப்பன்'' என்று கேஷ் கவுண்டரில் இருந்தவர் வேறு, நான்தான் அவள் புருஷன் என்று தவறாகப் புரிந்து பரிசுக் கூப்பனை என் சட்டையில் திணித்தார்.

வெட்கக்கேட்டை அவரிடம் விவரிப்பா னேன் என்று பரிசுக் கூப்பனைப் பெற்றுக் கொண்டு கடைக்கு வெளியே வந்து நின்று விட்டேன். பர்சேஸை முடித்துக் கொண்டு வந்த பார்வதியிடமும் பரிசுக் கூப்பனைப் பற்றியோ, கன்னத்தில் பெற்ற பரிசு பற்றியோ மூச்சுவிடவில்லை.

தீபாவளியன்று பேப்பரைப் பார்த்த வனுக்கு மூச்சுமுட்டியது. என் பரிசுக் கூப்பனுக்கு பம்பர் பரிசு விழுந்திருந்தது. என்ன பரிசு என்று போடவில்லை. இதை எப்படிப் பார்வதியிடம் சொல்வது என்றும் புரியவில்லை. ஜவுளிக் கடைக்கு போன் பண்ணலாமென்று தெருக்கோடிக்குப் போனேன்.

''ஆமாம் ஸார். பம்பர் பரிசு விழுந்திருக்கு... அந்தப் பரிசுக் கூப்பன் என்கிட்டேதான் இருக்கு... என்ன பரிசுன்னு போடலையே'' என்று கேட்டேன்.

''ஓகோ.. கங்கிராஜுலேஷன்.. ஒரு சஸ்பென்ஸா இருக்கட்டுமேன்னுதான் போடலை... இப்போ சொல்றேன். உங்க வாரிசு அத்தனை பேருக்கும் எங்க கடையில பச்சைக் கலர் ஜவுளி இலவசமா வழங்கப் போறோம்''



''நான் கொஞ்சம் குண்டா இருக்கலாம். அதுக்கா... மகாலட் சுமிங்கற என் பேரை 'மெகா'லட் சுமின்னு நீங்க கூப்பிட றது நல்லா இல்லை.''

– வந்தவாசி பா. ஜெயக்குமார்

என்றார்.

"ஐயையோ" என்றேன் அதிர்ச்சியடைந்தவ னாய்.

"பயப்படாதிங்க! இப்போ இல்லே... அடுத்த அறுபது வருடத்துக்கப்புறம் ஈஸ்வர வருஷத் திலேதான்'' என்றார்.

அப்பாடா என்றிருந்தது... வெகு தூரத்துப் பச்சைதானே! இப்போது கவலைப்படு வானேன்!

# வாழ்த்துப்பா பாட நாங்கரெடி!

✉ 'வலிமை கொண்ட தோளினாய் வா வா!' என்று ஸ்ரீநாத் வரும்வரை வாழ்த்துப்பா பாட நாங்க ரெடி!

மயிலாடுதுறை, ஜெ. ரஜினி ராம்கி.

✉ ஐக்கிய முன்னணி அரசுக்கு தனது அறிக்கைகள் மூலம் அடிக்கடி பூச்சாண்டி காட்டும் கேசரிக்கும், அவரை தலைவராகக் கொண்டுள்ள காங்கிரசுக்கும் இப்போது தேர்தலை எதிர்கொள்ளும் அளவுக்கு தைரியம் இல்லை என்பதை இந்த வாரத் தலையங்கம் வெளிச்சம் போட்டுக் காட்டியது.

சென்னை – 1, கே.ஆர். உதயகுமார்.

✉ 'பூச்சாண்டி காட்டும் கேசரி'யைத் தங்களின் தலையங்கத்தில் பயமுறுத்தியிருப்பதை(?!) ஆரவாரத்துடன் வரவேற்கிறோம். எடுத்தேன், கவிழ்த்தேன் என்ற முறையில் கேசரியின் திடீர் திக் திக் அறிவிப்புக்கள் அனாவசிய சர்ச்சையைக் கிளப்புவதோடு காங்கிரஸின் மீதே மக்களுக்கு பலமான வெறுப்பையும் ஏற்படுத்தும் அபாயம் இருக்கிறது. இனிப்பான பெயரை வைத்துக் கொண்டு, இப்படிக் கசப்பான அறிவிப்புக்களை அடிக்கடி வெளியிடலாமா... கேசரி?

அரிசிப்பாளையம், மு. இரவிச்சந்திரன்.

✉ 'ஸ்ரீஹரிகோட்டாவிலிருந்து ஒரு நேரடி ரிப்போர்ட்' – நம்மை ஸ்ரீஹரிகோட்டாவுக்கே நேரில் அழைத்துச் சென்று பார்த்துப் பரவசமடையச் செய்த உணர்வை ஊட்டியது!

சென்னை – 30, புளியரை கணேசன்.

✉ 'நேரத்தின் மதிப்புத் தெரிய வேண்டுமா?' கலாவின் தொகுப்பு கண்டேன். என்றோ, எதிலோ படித்தது என எழுதியிருந்தார். லேனா தமிழ்வாணன் அவர்கள் சென்னையில் ஒரு இளைஞர் மாநாட்டுத் துவக்க உரைக்கு வந்த போது எல்லோரும் தாமதமானதால் இப்படிக் கூறினார்.

விருதுநகர், இரா. சந்திரசேகரன்.

✉ 'இந்திய விடுதலைப் போரில், தன்னுயிரைத் தியாகம் செய்த மாபெரும் வீரன் பகத்சிங் பிறந்த மாதத்தில் (7.10.97) அந்தத் தன்னலமற்ற தியாகியைப் பற்றிய உயர்ந்த செய்தியை வெளியிட்டு அஞ்சலி செய்த ஒரே பத்திரிகை 'கல்கி'தான் என்பதில் பெருமை கொள்கிறேன்.

பெங்களூர்–16, அ. சங்கரன்.

✉ சுரேந்தர்நாத்தின் 'அது ஒரு கனாக்காலம்' வித்தியாசமான கதையமைப்புடன் காதலின் மென்மையை உணர்த்தியது... காதல் நிறைவேறாததை, அனுபவித்தவர்கள் மட்டுமே புரிந்து கொள்வார்கள் என்பதைச் சொன்ன விதம் மனதைத் தொட்டது....

வலையப்பட்டி, எம். பாலசுப்பிரமணியன்.

✉ சில தமிழ்ச் சொற்களையும் பாடல்களில் பழநி பாரதி பயன்படுத்தியிருக்கிறார் என்ற விமர்சன வரிகளில் உங்களின் குறும்பும், ஆதங்கமும் பளிச்சிட்டது!

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

✉ 'வீரப்பனும் நானும்' என்று நக்கீரன் கோபால் எழுதுவது கல்கியின் தொடர்வாசகர்களுக்குத் தானே என்றுதான் புகைப்படங்களைப் போட்டு, தலைப்பில் விளையாடியிருக்கிறீர்களோ?

சென்னை – 14, அய்யாறு வாசுதேவன்.

✉ 'அதிகமாக வீண் செலவு செய்வது ஆண்களா – பெண்களா என்று பொதுவாக கருத்துக் கணிப்பு நடத்தாமல், கணவன் மனைவியையே, மோத விட்டுவிட்ட உமது இல்லாடித்தனத்தை எண்ணி சற்றே வியந்தேன்!

கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி.



## ஒன்...டூ...த்ரீ கதைகள்

# ஆசி

1

தன் பாதங்களில் விழுந்து வணங்கிய அந்த இளம்பெண்ணைப் பரிவோடு பார்த்தார் சத் சங்கரானந்தா சுவாமிகள்.

"சௌபாக்யவதி பவ...! எழுந்திரம்மா..."

எழுந்த அந்தப் பெண்ணுக்கு இருபத்தைந்து வயது இருக்கலாம். துலக்கி வைத்த செப்புப் பாத்திரம் போன்ற புது நிறத்தில் லட்சணமாய் இருந்தாள். அவளுடைய கண்களில் கவலை கனமாய் ஈஷியிருந்தது.

"சுவாமி...! உங்க ஆசீர்வாதம் வேணும்..."

சுவாமிகள் புன்னகைத்தார். "உன்னோட முகத்தைப் பார்த்தா... ஏதோ ஒரு பெரிய கவலை மனசுக்குள்ளே இருக்கிற மாதிரி தெரியுதே..."

"ஆமா... ஸ்வாமி..! கடந்த ஒரு மாச காலமா நான் நிம்மதியில்லாமே தவிச்சுட்டிருக்கேன்.... உங்க அருட்பார்வையும் ஆசீர்வாதமும் எனக்குக் கிடைச்சுட்டா... அந்தக் கவலைக்குரிய பிரச்னை காணாமே போயிடும்..." அவள் கைகூப்பி கண்களில் நீர் கோத்தாள்.

"கவலைப்படாதேம்மா...! உன்னோட கவலை எதுவானாலும் சரி. இனிமே காணாமே போயிடும்... இப்படி வந்து என் எதிர்ல உட்கார்ம்மா."

அவள் வந்து உட்கார்ந்தாள்.

சுவாமிகள் தன் அறைவாசலில் நின்றிருந்த சிஷ்யகோடிக்கு கண் ஜாடை காட்டி வெளியே போகும்படி சொல்லி விட்டு, தன் இடுப்பில் சொருகி வைத்திருந்த பிரத்யேகமான விபூதிப் பையை எடுத்தார். மயக்க மருந்து கலந்த அந்த விபூதியில் ஒரு சிட்டிகையை எடுத்து பெண்ணின் நெற்றியில் தீட்டிவிட்டு அவளுடைய நாசிக்குப் பக்கத்தில் கொண்டு போனார்.

அந்த விநாடியே அவளுடைய கண்கள் சொக்க, உடல் தன்னிச்சையாய் கட்டுப்பாட்டை இழந்து ஒரு பக்கமாய் சரிந்தது.

சுவாமிகள் அந்தப் பெண்ணை ஒரு மலர்ச்சரம் போல் ஏந்திக் கொண்டார்.

அந்தப் பெண் அரை மணி நேரம் கழித்து மயக்கம் தெளிந்து எழுந்து உட்கார்ந்தபோது சுவாமிகள் ஏதோ ஒரு புத்தகம் படிப்பதைப் போல் பாவ்லா செய்து கொண்டிருந்தார்.

"சு... சுவாமி..."

"ஓ...! எழுந்திட்டியாம்மா...! நான் உன்னோட நெத்தியில விபூதியை வெக்கவே நீ உணர்ச்சிவசப்பட்டு மயக்கத்துக்குப் போயிட்டே... உன்னைக் கொஞ்ச நேரம் ஆசுவாசப்படுத்திக்கிட்டு உன்னோட கவலை என்னான்னு சொல்லும்மா."

"சுவாமி! என்னை மன்னிக்கணும்! உங்களை மாதிரியான மகான்களுக்குப் பக்கத்துல நிக்கக் கூட எனக்கு யோக்யதை கிடையாது. நான் ஒரு பாவப்பட்ட ஜீவன். உடம்பை மூலதனமா வெச்சு வயித்தை கழுவிட்டிருக்கிற பெண். இத்தனை வருஷத்துல எவ்வளவோ ஜாக்கிரதையா இருந்தும் போன மாசம் ஆட்கொல்லி நோயான எய்ட்ஸ்



நோயில் மாட்டிக்கிட்டேன். இந்த நோய்க்கு மருந்து கிடையாதுன்னு எனக்குத் தெரியும். இருந்தாலும் உங்களை மாதிரியான மகான்களின் கால்கள்ல விழுந்து வணங்கி ஆசீர்வாதம் வாங்கினா தீராத நோய்களும் தீரும்ன்னு ஒரு புத்தகத்துல போட்டிருந்தாங்க... அந்த நம்பிக்கையை மனசுல வெச்சுக்கிட்டுத்தான்..."

சுவாமிகளின் அடிவயிற்றில் உருவான ஒரு பயம் கத்தி மாதிரி சொருகிக் கொண்டது.

**ராஜேஷ்குமார்**

# இந்தத் தவறுகள் திருத்திக் கொள்ளப்படும்!

"ஸார்...!"

கம்ப்யூட்டரில் ப்ரிண்ட் அவுட் எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்த நான், ப்யூன் மாரியின் குரல் கேட்டு நிமிர்ந்தேன்.

"என்ன மாரி...?"

"உங்களைப் பார்க்க ஒரு பொண்ணு ஆபீஸ் ரிசப்ஷன்ல வந்து காத்திட்டிருக்கு ஸார்..."

நான் நெற்றியைச் சுருக்கினேன்.

"பொண்ணா...?"

"ஆமா ஸார்..."

நான் கம்ப்யூட்டரை அணைத்துவிட்டு எழுந்தேன். மனதில் நிரப்பிக் கொண்ட வியப்போடு நடந்தேன்.

என்னைத் தேடி... ஒரு பெண்...! அதுவும் ஆபீஸுக்கு...?

யாராக இருக்கும்...?

ஒரு நிமிஷ நடையில் ரிசப்ஷனுக்கு வந்து – சோபாவில் உட்கார்ந்திருந்த அந்தப் பெண்ணைப் பார்த்ததும் என் வியப்பின் சதவீதம் உச்சத்துக்குப் போயிற்று.

காரணம்...?

போன வாரம் வியாசர்பாடியில் எனக்காக 'பார்த்து' விட்டு வந்த பெண். காயத்ரி.

"காயத்ரி...! நீயா...?"

அவள் தயக்கமாய் எழுந்து நின்றாள். "ஸாரி...! ஆபீஸ் நேரத்துல வந்து உங்களுக்குத் தொந்தரவு தந்துட்டேன்..."

"பரவாயில்லை...! என்ன விஷயம்... சொல்லு..."

"உங்களுக்கு என்னைக் கல்யாணம் பண்ணிக்க சம்மதம்னு கேள்விப்பட்டேன்... உண்மையா...?"

"உண்மைதான்...!"

"எனக்கும் உங்களைக் கல்யாணம் பண்ணிக்க இஷ்டம்தான். இருந்தாலும் நாளைக்குக் கணவரா வரப் போகிற உங்ககிட்ட என்னைப் பத்தி ஒரு உண்மையைச் சொல்லிடறது உத்தமம் இல்லையா?"

நான் புன்னகைத்தேன்.

"என்ன ஏதாவது காதல் விவகாரமா...?"

"நோ... நோ... அப்படியெல்லாம் எதுவும் இல்லை..."

"பின்னே...?"

"என்னோட அம்மாவும் சரி... அப்பாவும் சரி... இந்தக் கல்யாண புரோக்கர்களும் சரி. என்னைப் பத்தி ஒரு விஷயத்தை மறைச்சிட்டாங்க."

நான் ஆர்வமானேன்.

"என்ன விஷயம்...?"

"கடந்த அஞ்சு வருஷ காலமா எனக்கு லேசா வலிப்பு நோய் இருந்தது. வருஷத்துல ரெண்டு மூணு தடவை இந்த நோய் வந்துடும். வலிப்பு வந்தாலும் ரெண்டு மூணு நிமிஷந்தான்...! உடனே சரியா போயிடும். ந்யூரோ சர்ஜன் 'ஹரிஹரேஷ்'தான் எனக்கு ட்ரீட்மெண்ட் எடுத்தார். இப்போ சரியாயிடுச்சு. இருந்தாலும் இந்த உண்மையை நீங்க கல்யாணத்துக்கு முன்னாடியே தெரிஞ்சுக்கிறது நல்லதில்லையா...? என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறதுல அவசரம் வேண்டாம். வீட்டுக்குப் போய் உங்க ஃபாதர் மதரை கன்சல்ட் பண்ணிட்டு அதுக்கப்புறமா உங்க விருப்பத்தைத் தெரிவிச்சா போதும். நான் வர்றேன். இது ஆபீஸ் நேரம். உங்களுக்கு வேலை நிறைய இருக்கும்."

காயத்ரி போய்விட – அவள் சென்ற திசையையே வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றேன்.

சாயந்தரம். வீடு. ஐந்து மணி.

அம்மாவும் அப்பாவும் என்மேல் பாய்ந்து குதறாத குறையாகப் பெரிய குரலெடுத்துக் கத்தினார்கள்.

"டேய்... உனக்கு என்னடா ஆச்சு...? நேத்து அந்த காயத்ரியை கல்யாணம் பண்ணிக்க சம்மதம்னு சொல்லிட்டு இன்னிக்கு வேண்டாம்னு சொல்றே...?"

நான் அவர்களை ஏறிட்டேன். "இன்னிக்கு காலையில் காயத்ரி என்னோட ஆபீஸுக்கு வந்தா. அஞ்சு வருஷத்துக்கு முந்தி அவளுக்கு வலிப்பு நோய் இருந்ததாம். இப்போ இல்லைன்னாலும்... அவ அதை மறைச்சு வைக்கப் பிரியப்படாமே வந்து சொல்லிட்டா...! ஆனா நாம என்ன பண்ணியிருக்கோம்...? நான் ஒரு ஹார்ட் பேஷண்ட். ரெண்டு தடவை எனக்கு ஆபரேஷன் நடந்திருக்கு. இன்னொரு தடவையும் ஆபரேஷன் செய்ய வேண்டி

2



வரலாம்னு டாக்டர் சொல்லியிருக்கார். இந்த நிலைமையிலேயும் எனக்கு நீங்க கல்யாணம் பண்ணி வைக்க ஆசைப்பட்டீங்க. கட்டாயப்படுத்தினீங்க. உங்க கட்டாயத்துக்காகத் தலையாட்டினேன். அந்தப் பொண்ணு காயத்ரி இவ்வளவு பெருந்தன்மையாய் நடந்துக்கிட்ட பிறகும் நான் அவ கழுத்துல தாலியைக் கட்டினா அதைவிட துரோகம் வேற எதுவுமே இருக்க முடியாது. காயத்ரிக்கு நல்ல, ஆரோக்கியமான கணவன் அமையட்டும். இதோடு எனக்குப் பெண் பார்க்கிற முயற்சிகளுக்கு ஒரு முற்றுப்புள்ளியை வையுங்க. எனக்கு நீங்க பண்ணக்கூடிய பெரிய உதவி இதுதான்''

# பண்ணையாரம்மா

அந்த நள்ளிரவு நேரத்தில் தோப்புக்கு நடுவில் இருந்த தன்னுடைய குடிசையின் கதவு மெல்ல தட்டப்படும் சத்தம் கேட்டு 'திடும்' மென்று எழுந்து உட்கார்ந்தாள் அருக்காணி.

"அதாரு...?"

"நாந்தா... புள்ள... கதவைத் தொற..."

வெளியே கேட்டது, பண்ணையாரின் குரல்.

பதற்றமாய் எழுந்த அருக்காணி வேக வேகமாய்ப் போய் கதவைத் திறக்க - நாற்பது வயதுப் பண்ணையார் செண்ட் வாசனை யோடு உள்ளே நுழைந்தார். மல்லிகை வாசம்.

"என்ன... புள்ள... நல்ல தூக்கம் போலி ருக்கு...?" தூக்கக் கலக்கத்தில் இருந்த அருக் காணி சேலைத்தலைப்பை இழுத்துப்

## ஒன், டூ, த்ரீ...

வாரம் ஒரு பிரபல எழுத்தாளர் ஒரு பக்கம், இரண்டு பக்கம், மூன்று பக்க அளவுகளில் மூன்று கதைகள் எழுதப் போகிறார்கள் இப்பகுதியில். இந்த வாரம் ராஜேஷ்குமார் ஆயிற்றா? அடுத்த வாரம் எழுதப் போகிறவர் தாமரை.

போர்த்திக் கொண்டாள்.

"அய்யா... நீங்க.. இந்த ராத்திரி நேரத்துல..."

"ஏம்புள்ள...! பயப்படாதே.. இப்படி வா..." கயிற்றுக் கட்டிலுக்குப் போய் சாய்ந்து கொண்டார்.

"உம் புருஷன் ஜெயிலுக்குப் போயி ஆறு மாசமாச்சு. அடிதடி கேஸு.. ரெண்டு வருஷம் போட்டுத் தீட்டிட்டாங்க. ம்.. என்ன பண்றது.. எந்த நேரத்துக்கு எது நடக்குமோ... அதுதானே நடக்கும்..."

"அ... அய்யா... இந்த நேரத்துல... எதுக் கோசரம்...?"

"வரணும்னு கேட்கறியா...? எல்லாம் உனக்கோசரம்தான்...! இதோ... பாரு புள்ள! ஆறுமாசமா உம்புருஷன் விரல் உடம்பு மேல படாமே இருக்கே. ரொம்ப கஷ்டம்தான். உணர்ச்சிகளை அடக்கி வெச்சுட்டு நீ படற பாடு எனக்குத் தெரியும்... வயிறு பசிச்சா நினைச்சதை வாங்கித் திங்கற மாதிரி... உடம்பு புக்கும்..."

அருக்காணி குறுக்கிட்டாள்.

"அ... அய்யா... நீங்க பெரியவங்க...! உங்க வூட்டு உப்பைத் திங்கற நாயி நானு! என்றகிட்ட வந்து... இது மாதிரி பேசறது தப்புங்க. நீங்க நெனைக்கற மாதிரி பொம்பள நானு இல்லீங்கோ..."

**3**

"பயப்படாதே புள்ள... ஆறு மாசமா உடம்பைக் காயப் போட்டு வெச்சிருக்கே.. உன்னால தாக்குப் பிடிக்க முடியாது... பொம்பளை

களைப் பத்தி எனக்கு நல்லாவே தெரியும்..."

கட்டிலை விட்டு எழுந்து அவளை நோக்கி வந்தார்.

"வே... வேண்டாங்கய்யா..."

"உனக்கு என்ன வேணும்ன்னாலும் கேளு.. தர்றேன்... மூக்குல காதுல தங்கம் போட்டுக் கறியா... வாங்கித் தர்றேன்..."

"வே... வேண்டாங்க..."

"வேற என்ன வேணும்.. கேளு..."

அருக்காணி எச்சிலைக் கூட்டி விழுங்கி விட்டு வியர்த்த முகமாய் அவரை ஏறிட்டாள்.

"நா... எதை வேணும்ன்னாலும் கேக்கலா முங்களாய்யா?"

பண்ணையார் மலர்ந்தார்.

வழிக்கு வந்து விட்டாள்.

"கேளு... கேளு..."

"நா... இப்போ கேக்கப் போற ஒரு கேள்விக்கு நல்ல பதில் வேணுங்கய்யா."

"என்னது! கேள்வி கேட்கப் போறியா?"

"ஆமாங்கய்யா... எம்மனசுக்குள்ளாற இப்ப ஒரு சந்தேகம்... வந்துடுச்சுங்க..."

பண்ணையார் நெற்றியைச் சுருக்கினார்.

"சந்தேகமா...?"

"ஆமாங்கய்யா...! புருஷனைப் பிரிஞ்ச பொம்பளைகளாலே உணர்ச்சிகளை அடக்க முடியாதுன்னு சொன்னீங்கய்யா...?"

"ஆமா..."

"வயித்துப் பசிக்கு கிடைச்சதை வாங்கிச் சாப்பிட்டிருக்கிற மாதிரிதான் இந்த ஒடம்பு பசியும்ன்னு சொன்னீங்களய்யா...?"

"ஆமா..."

"அய்யா...! அஞ்சு வருஷத்துக்கு முந்தி நீங்க மோட்டார் சைக்கிள்ல போயி, கீழே விழுந்து முதுகுத் தண்டு வடத்துல அடிபட்டு கிட்டத் தட்ட ஒன்பது மாசம் டவுன் ஆஸ்பத்திரியில கிடந்தீங்க... சுயநினைவே கெடையாது. அந்த ஒன்பது மாச காலத்துல நம்ம பண்ணை யாரம்மா எப்படி இருந்திருப்பாங்கய்யா...? ஏன்னா பொம்பளைங்களைப் பத்தி உங் களுக்கு நல்லாவே தெரியும்... உணர்ச்சிகளை அவங்களால அடக்கிக்க முடியாது. அவங்க தப்பு பண்ணினாலும் அது தப்பு இல்லை. நம்ம பண்ணையாரம்மா அப்படி இருந்திருப் பாங்கன்னு நீங்க நம்பினா... என் ஒடம்பு மேல கையை வையுங்கய்யா. பண்ணையாரம்மா அப்படியெல்லாம் இருந்திருக்க மாட்டாங் கன்னு நீங்க நினைச்சா வெளியே போயிடுங்க... நான் எதுக்கும் தயார். உங்க பதில் என்னங் கய்யா...?"

அருக்காணி கேட்டுக் கொண்டிருக்கும் போதே –

பண்ணையார் குடிசையின் கதவைத் திறந்தபடி வெளியேற ஆரம்பித்திருந்தார்.

A UNIT OF
**HARI**
AGENCIES

# மாமி, அவர் ஆபீஸிலிருந்து வந்ததும் சாவிய அவர்கிட்ட கொடுத்துடுங்க !



போகும் போது எங்க போறேன்னு கேட்கக் கூடாது ... இருந்தாலும்...

நீங்க கேட்கறதுக்கு முன்னாடி நானே சொல்லிடறேன் மாமி ! மயிலாப்பூர் லஸ் கார்னரில் இருக்கும் ஹரிப்பிரியாவுக்குத் தான் போறேன். ஹரிப்பிரியா பெண்களுக்கான பிரத்யேக ஆடை உலகம். அங்கே பெட்டிகோட்ஸ், கரிதார்கள், பேன்டீஸ், பிராக்கள், நைட்டீஸ், மாக்ஸிகள்,



கைக்குட்டைகள் எல்லாம் ஏராளமான வகைகள் தாராளமாக கிடைக்கிறது.

நம்ம பட்ஜெட்டுக்கு தகுந்தாப்ல வாங்கணும்னா ஹரி ஏஜென்சியோ. அங்கமான ஹரிப்பிரியா மட்டும் தான் போகணும்.

சித்த நாழி இருக்கியா ? நானும் கதவை பூட்டிண்டு பக்கத்தாத்தில சாவிய கொடுத்துட்டு வந்திடறேன்.




**ஹரிப்பிரியா**

பெண்களுக்கான பிரத்யேக

ஆடை உலகம்

111, முதல் மாடி, கச்சேரி சாலை,
சென்னை - 600 004.
போன் : 4942368.

# வீரப்பனும் நானும்

7

பள்ளத்தில் உருளுவது - அதுவும் கேமரா கருவிகளுடன் - சாத்தியமான விஷயமல்ல என்று நான் பேபியிடம் சொன்னேன். அவன் சற்று யோசித்தான். பிறகு எங்களை ஓர் அடர்ந்த புதரில் ஒளிந்து கொள்ளச் சொன்னான். துப்பாக்கியில் தோட்டா நுழைக்கும் பகுதியை க்ளச் க்ளச்சென்று திறந்து திறந்து மூட ஆரம்பித்தான். எனக்கு முதலில், அவன் ஏன் அப்படிச் செய்கிறான் என்று புரியவில்லை. சில விநாடிகளில் வெடி மருந்தின் வாசனை நாசியில் நுழைந்தது. மருந்து வாசனை எருமைகளைச் சென்று அடையும் வரை அவன் அப்படிச் செய்வதை நிறுத்தவில்லை.

காட்டெருமைகளுக்கு வெடிமருந்து வாசனை அலர்ஜி என்பது எனக்கு அப்போதுதான் தெரிந்தது. மருந்து நெடியை அவை சுவாசித்ததோ இல்லையோ - அலறியடித்துக் கொண்டு நாலாபுறமும் சிதறிப் பாய்ந்தன. நான் பிரமிப்புடன் அக்காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தபோது என்னையறியாமல் தொண்டை வரண்டு போனது! கை கால்கள் செயலற்று நின்றுவிட்டன! சுமார் அரை மணி நேரம் என்னைக் கலக்கி அடித்துவிட்டது அந்த நிகழ்ச்சி.

அதற்குப் பிறகு பெரிய பிரச்னைகள் ஏதும் வரவில்லை. காட்டு எல்லை வரை பேபி கொண்டு வந்து விட, நல்லபடியாகச் சென்னை வந்து சேர்ந்தேன். முதல் காரியமாக நான் எடுத்து வந்திருந்த வீடியோ கேஸட்டை முதல்வரிடம் கொடுத்தேன். மகிழ்ச்சியுடன் விஷயத்தைக் கேட்டுக் கொண்ட கலைஞர், தான் கேஸட்டைப் பார்த்துவிட்டு, கர்நாடக முதல்வரிடமும் பேசிவிட்டுத் தகவல் சொல்வதாகச் சொன்னார்.

மூன்றாவது நாள், முதல்வரிடமிருந்து அழைப்பு வந்தது. தேடுதல் வேட்டையை நம் போலீசார் நிறுத்திக் கொள்வதில் ஆட்சேபனை இல்லை. அதற்கான உத்தரவைப் பிறப்பிக்கச் சொல்லிவிடுவதாகச் சொன்னார்.

அப்போது டி.ஜி.பியாக இருந்த ராஜ் மோகன், வீரப்பன்



**மாரியம்மா டான்ஸ்....**

சரண்டர் குறித்து இரண்டுமுறை என்னிடம் வந்து பேசினார். அவருக்குப் பின் கூடுதல் டி.ஜி.பி. குமாரசாமி வந்து பேசினார். என்னிடம் பேசிவிட்டு, அலெக்சாண்டரிடமும் இது குறித்துப் போய்ப் பேசினார். அப்போதுதான் கர்நாடக தரப்பிலிருந்து வீரப்பன் சரணடைவதில் - அவனுடைய நிபந்தனைகளைப் பரிசீலிப்பதில் ஆர்வம் காட்டத் தொடங்கினர். கர்நாடக கூடுதல் டி.ஜி.பி. சுப்பையா தமிழ்நாடு வந்து உயரதிகாரிகளுடன் இது குறித்துப் பேச்சு வார்த்தை நடத்தினார்.

அவனுடைய நிபந்தனைகளின் பேரில் அரசாங்கம் எடுக்கும் தீர்மானங்களை நானே மறுபடியும் நேரில் அவனிடம் கொண்டு போக வேண்டும் என்று ஒரு மனதாகக் கேட்டுக் கொண்டார்கள்.

''நான் எதற்கு மறுபடியும் போக வேண்டும்? நீங்கள் உங்கள் முடிவுகளை ரேடியோவில் அறிவித்து. விட்டாலே போதுமே!'' என்று சொன்னேன்.

அடிபட்ட சிவா, விஜயா மருத்துவமனையில் அட்மிட் ஆகி இருப்பதாகவும் எழுதியிருந்தார்கள்.

சிவா, விஜயாவில் அட்மிட் ஆகி இருந்தது உண்மைதான். ஆனால் அவர்கள் குறிப்பிட்டிருந்தது காரணமல்ல. மோட்டார் பைக்கில் தம் நண்பருடன் அவர் சென்னை வந்து கொண்டிருந்தபோது, எதிர்பாராமல் ஒரு விபத்து ஏற்பட்டு அவருக்குக் கால் முறிவு ஏற்பட்டிருந்தது. நான்தான் செய்தி கேள்விப்பட்டதும் அவரைச் சென்னைக்கு உடனடியாக அழைத்து வர ஏற்பாடு செய்து, விஜயாவில் அட்மிட் செய்திருந்தேன். மற்றபடி வீரப்பன் இரண்டு கோடி கொடுத்தது, எங்களுக்குள் சண்டை என்று அந்தப் பத்திரிகையில், 'முகமே இல்லாத' அந்த நபர் அருவருக்கத்தக்க வகையில் எழுதியிருந்த



இதற்கு இடையில், ஒரு கசப்பான சம்பவம் நடந்தது. வேறு ஒரு புலனாய்வுப் பத்திரிகையில் எனக்கும் சிவ சுப்ரமணியனுக்கும் இடையே பிரச்னை உண்டுபண்ணும் நோக்கில் ஒரு புரட்டுக் கட்டுரை வெளியிட்டு இருந்தார்கள்.

வீரப்பன், எங்களுக்கு இரண்டு கோடி கொடுத்ததாகவும் அதைப் பங்கு போட்டுக் கொள்வதில் எனக்கும் சிவாவுக்கும் பிரச்னை வந்து, நான் அவரைத் தாக்கியதாகவும் பலமாக

## 'நக்கீரன்' கோபால்

தெல்லாம் வடிகட்டின பொய்!

ஆனால் இதைப் பொய் என்று நான் வெறும் வார்த்தைகளால் சொல்லிக் கொண்டிருப்பதைவிட, சிவாவை உடன் அழைத்துக் கொண்டே இன்னொரு முறை - அரசு கேட்டுக் கொண்டபடி நானே காட்டுக்குள் போய் வந்து விடுவது என்று முடிவு செய்தேன். இதற்கிடையில், சிவாவே அந்தப் பத்திரிகையின் அவதூறுச் செய்திக்கு மறுப்பு எழுத, அது நக்கீரனில் வெளியானது.

**வி**ஜயா மருத்துவமனையில் சிவாவுக்கு சிகிச்சை அளித்தவர் டாக்டர் மோகன்தாஸ். நான் அவரிடம், "நீங்கள் என்ன செய்வீர்களோ தெரியாது. இன்னும் ஆறு மாதத்தில் சிவா எழுந்து நடக்க வேண்டும். செலவு பற்றிக் கவலையில்லை" என்று சொன்னேன்.

"நீங்கள் கவலைப்படாதீர்கள். தேவாரமும் கோபாலகிருஷ்ணனும் கூட இங்கேதான் அட்மிட் ஆகி இருக்கிறார்கள். உங்கள் சிவாவை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று உறுதியளித்தார்.

சொன்னபடியே ஐந்தாவது மாதத்தில் சிவா எழுந்து நடக்க ஆரம்பித்தார்.

இதற்கிடையில் வீரப்பன் தேடுதல் வேட்டையில் கர்நாடக அரசு தன் போலீஸ் படையை அதிகரித்து விட்டது. ஒரு பக்கம் தமிழ்நாடு அரசு, வீரப்பன் சரணடைவான் என்று சொல்லிக் கொண்டிருக்க, மறுபக்கம் அங்கே நடந்த சண்டையில், சேத்துக்குளி கோவிந்தனுக்கு அடிபட்டு விட்டதாகவும் தகவல் வந்தது. வீரப்பன் மறுபடியும் சண்டை போடத் தொடங்கி விட்டானோ என்று கலங்கினேன்.

உடனடியாக அவனைச் சந்தித்து விடுவது அவசியம் என்று முடிவு செய்தேன். கிளம்புவதற்கு இரண்டு மாதங்கள் முன்னதாகவே முயற்சிகளைத் தொடங்கி விட்டேன்.

பிப்ரவரி 97. இரண்டாவது முறையாக நான் வீரப்பனைச் சந்தித்தது அப்போதுதான்.

"**ச**ரண்டருக்கான ஏற்பாடுகளைச் செய்வதாகச் சொன்னீர்கள். போலீஸ் படை காட்டுக்குள் வராது என்று நான் நம்பிக் கொண்டிருந்தபோது முன்னை விட அதிகமாக இப்போது வருகிறார்களே! ஒரு பக்கம் என் கையைக் கட்டிப் போட்டுவிட்டு இன்னொரு பக்கம் என்னைத் தேடிப் பிடித்து சுட்டு விடலாம் என்று பார்க்கிறீர்களா? உங்களால் முடியுமா? முடியாதா? தீர்மானமாகச் சொல்லி விடுங்கள். நான் எத்தனை நாளைக்குத் திருப்பித் தாக்காமல் ஓடிக் கொண்டே இருப்பது? உங்களுக்கு வாக்கு கொடுத்து விட்டேன்



என்பதால் [illegible] நான் அமைதியாக இறங்காமல் சும்மா இருக்கிறேன். என்ன செய்வதாக உத்தேசம்?" - இதுதான் வீரப்பன் என்னைப் பார்த்ததும் கேட்ட முதல் கேள்வி.

நான் சொன்னேன்: "தேடுதல் வேட்டையில் இறங்கி இருப்பது நிச்சயமாக தமிழ்நாட்டுப் போலீஸ் இல்லை. அவர்கள் கர்நாடகாகாரர்கள். இது உங்களுக்கே கூடத் தெரிந்திருக்கும். மேலும் உங்கள் விஷயமாகப் பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருக்கிறது. அரசுத் தரப்பில் ஒரு முடிவு எடுக்கப்படும் வரை, நீங்கள் சும்மா இருக்க வேண்டியது அவசியம். இந்த நிலையில் நீங்கள் ஏதாவது விபரீதமாகச் செய்து விட்டால் இதுவரை நான் எடுத்திருக்கிற அனைத்து முயற்சிகளுக்கும் அர்த்தமில்லாமல் போய் விடும்" என்றேன்.

பொறுமையாகக் கேட்டுக் கொண்ட வீரப்பன் ஒரு கேஸட்டை எடுத்து டேப்பில் போட்டு ஓடவிட்டான். கர்நாடக போலீஸ் அமைச்சர் ரோஷன் பேசிக் கொண்டிருந்தார் அதில்! அவர் பேச்சின் சாராம்சம், 'எப்படியும் வீரப்பனைப் பிடித்தே தீருவோம்' என்பதுதான். எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. இந்தப் பேச்செல்லாம் எப்படி இவன் கைக்குக் கிடைத்து விடுகிறது?

"ஐயா, எனக்குத் தெளிவாத் தெரியணும். என்னைப் பிடிக்கிறதுதான் நோக்கம்னா, அவங்க தேடிட்டே இருக்கட்டும். சமாதானமா போறதுன்னா, என் நிபந்தனைகளை ஏற்கட்டும்" என்றான்.

அப்போது பிரதமராக இருந்த தேவே கௌடா, கர்நாடக முதல்வர் ஜே.எச். பாட்டீல் எல்லாருக்கும் கேஸட்டில் பேசித் தன் தீர்மானங்களை என்னிடம் கொடுத்தான். கூடவே அந்தப் பத்து நிபந்தனைகளுடன் பதினோராவது நிபந்தனையாக பூலான் தேவி போலத் தன் வாழ்க்கையும், திரைப்படமாக எடுக்கப்பட வேண்டும் என்றும், அதற்கு சென்ஸார் கூடாது என்றும் சொல்லியிருந்தான்.

வீரப்பனிடம் நாலைந்து கேஸட்டுகள்தாம் உண்டு. அதிலேயேதான் இருப்பதை அழித்து விட்டு மேலே மேலே பேச வேண்டும். அப்படி ஒரு கேஸட்டை ஓட விடும் போது அதில் ஒரு

**"ஏன் டாக்டர், பள்ளிக் கூடத்துல படிக் கறப்ப நீங்க கணக்குல புலிதானே?"**

**"அட, எப்படி கண்டுபிடிச்சீங்க, அதை!"**

**"நாலு நாளா ஒரே தலைவலின்னு சொன்னதுக்கு, அப்ப ஒரு நாளைக்குக் கால் தலை வலியா'ன்னு கேட்டீங்களே, அதை வைச்சுத் தான்!"**

**— வெ. ராஜாராமன்**

வித, நூதனமான தாள இசை கேட்டது. அதில் கவரப்பட்ட நான், "இது என்ன இசை?" என்று கேட்டேன்.

"மாரியம்மா ஆட்டம்" என்றான் வீரப்பன்.

அது என்ன மாரியம்மா ஆட்டம்? நான் விவரம் கேட்டபோது, முப்பத்திரெண்டு தாள வகைகளைக் கொண்ட சிக்கலான நடனம் அது என்றும், அந்த இசைக்கு ஆடுவதற்கு நல்ல பயிற்சி வேண்டும் என்றும் வீரப்பன் சொன் னான்.

"நீங்க ஆடுவீங்களா?"

"ஓ! அத்தனை தாளத்துக்கும் ஆடுவேன்! ஆனா, ஆடணும்னா, 200 கி.மீ. உள்ள போய்டு வோம்!" என்றான்.

"வேணுமானா, உங்களுக்கு ஆடிக்காட்ட றேன். பாக்கறீங்களா?"

ஆட்ட சப்தத்தில் எங்காவது போலீஸ் வந்து விட்டால்? மெயின் ரோடிலிருந்து குறைந்த தூரத்தில்தான் அப்போது நாங்கள் இருந்தோம். ஆகவே வேண்டாம் என்று மறுத் தேன்.

"ஒண்ணு செய்யலாம். காட்டுக்குள்ள போலீஸ் வந்திருந்தாலும் சாயங்காலம் ஐந்து மணி ஆனால் முகாமுக்குத் திரும்பிடுவாங்க. மரம் வெட்ட கிராமவாசிகள், மாட்டுக்காரப் பையன்கள் உள்ளே வந்திருந்தாலும், ஆறு மணிக்கெல்லாம் ஊருக்குத் திரும்பிடுவாங்க. அந்த நேரத்தில நாம ஆடலாம். ஆடிட்டு உள்ள ஓடிடலாம்" என்றான்.

கொஞ்சம் தயக்கமாக இருந்தாலும், "சரி ஆடுங்க, பார்ப்போம்" என்று சொல்லிவிட்டு சிவாவிடம் வீடியோவை ரெடி பண்ணச் சொன்னேன்.

**நா**ன் எதிர்பார்க்கவே இல்லை. அத் தனை அற்புதமான நடனம் அது! சுழன்று, சுழன்று அந்த உடுக்கை சப்தத்திற்கு வீரப்பனும் அவனது ஆட்களும் ரௌத்திரம் வந்தவர்கள் போல ஆடிக் கொண்டே இருந்தார்கள்! ஒவ் வொரு தாளமும் சுமார் எட்டு நிமிடங்கள் நீடித்தன. எட்டு தாளங்கள் ஆனதும் போதும் என்று எனக்குத் தோன்றியது. வீரப்பனிடம் சொன்னேன்.

"ஐயோ, எட்டுல நிறுத்தினா முட்டிக்கும்" என்று இன்னொரு தாளமும் ஆடி முடித்தான். சிவா விளையாட்டாக, "ஒன்பது ஜெயலலிதா வோட நம்பராச்சே!" என்று சொல்லவும், "ஐய்யய்யே! அப்ப இன்னொரு தாளமும் ஆடிடுவோம்" என்று பத்தாவது தாளமும் ஆடி முடித்தான்.

கட்டுச் சோறு வந்தது. ஒரு பெரிய பேப் பரில் வைத்துத்தான் சாப்பிட வேண்டி இருந் தது.

சாப்பிட்டு சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொண்டு, கிளம்பினேன். இம்முறை வீரப்பன் தன் சகாக்களுடன் தானும் உடன் வந்தான்.

நாங்கள் உள்ளே போன வழி வேறு. திரும்பி வரும்போது வீரப்பன் கூட்டிச் சென்ற வழி வேறு. இது கொஞ்சம் சுற்று வழி. நள்ளிரவு ஒரு மணி வரை நடந்தோம். மிகவும் சோர்வு வந்து கவ்விக் கொண்டதும் ஓரிடத்தில் நின்று விட்டேன். அங்கே பெரிது பெரிதாக நிறைய பாறைகள் தென்பட்டன. பாறை என்று நான் நினைத்தது தவறு; அவை இறுகிவிட்ட யானைச் சாணம் என்று வீரப்பன் சொன் னான்.

அப்போது சேத்துக்குளி கோவிந்தன் எதையோ வாசனைப் பார்த்து, ரகசியக்குரலில், "மேல போக வாணாம்! கருப்பு வாசனை வருது" என்றான்.

கருப்பு என்றால் யானையாம். எனக்கு ஒரு வாசனையும் தெரியவில்லை!

வீரப்பன், "சரி. இன்னிக்கு மேல நடக்க வேணாம். இங்கேயே படுத்திருவோம்" என்று ஒரு பொட்டல் வெளிக்குக் கூட்டிப் போனான். எல்லோரும் படுத்தோம். எனக்கு மட்டும் காவ லாக ஓர் ஆள் துப்பாக்கியோடு பின்புறம்!

"மாதேஸ் ஒரு தப்பு பண்ணிட்டான். நேத்து இந்தப் பக்கம் வந்த போது பதினஞ்சு அடி நீள மலைப்பாம்பைப் பார்த்திருக்கான். அதை சும்மா விட்டிருந்தான்னா, இப்போ அதைத் தேடிப் பிடிச்சு தோள்ல போட்டுக்கிட்டு போட் டோவுக்கு போஸ் கொடுத்திருப்பேன்..." என் றான் வீரப்பன்.

"ஏன்? என்ன பண்ணான்?"

"சும்மா இருக்க மாட்டாம சீவிப் போட் டான். இங்கதான் புதைச்சோம்" என்று ஒரு மேட்டைக் காட்டினான்.

நான் படுத்திருந்த இடத்திற்குப் பக்கத்தில் இருந்தது அந்த மேடு. உதறல் எடுத்து விட்டது எனக்கு. வெட்டியது சரி; குழி தோண்டிப் புதைக்க வேண்டிய அவசியம் என்ன? வீரப் பனிடம் கேட்டேன். அவன் சொன்ன பதிலில் அசந்து போனேன்!

(தொடரும்)

# அமெரிக்கா சுத்திப் பார்க்கப் போனேன்... ஓயான்னு அலறிக்கிட்டு வந்தேன்!

**ஓர் இலக்கியப் போட்டியில் வென்று, அமெரிக்கா போகும் வாய்ப்புக் கிடைத்தது, இக்கட்டுரை ஆசிரியருக்கு. மதுரைக்கு மேற்கில் ஒரு கிராமத்திலிருந்து புறப்பட்டவருக்கு, மயக்கம் வராத குறையாக, மண்டை இடி அனுபவங்கள். படியுங்கள்...**

"நியூயார்க் போய் இறங்கினதும் இந்த நம்பருக்கு போன் போடுங்க. அவங்க வந்து கவனிச்சிப்பாங்க!"

– கிளம்புவதற்கு முன் என் கையில் என்னை நியூயார்க் அனுப்பிய மகானுபாவர்கள் ஒரு துண்டுச்சீட்டை மட்டும் கொடுத்தார்கள். அந்தச் சாது நம்பர்களால் தான் நியூயார்க்கில் என் சரித்திரமே மாற்றி எழுதப்படப் போகிறது என்பது அப்போது தெரியவில்லை.

"நம்ம புள்ள அமெரிக்கா போவுதுல்ல!" – ஆரத்தியெல்லாம் எடுத்து, போர்க்களத்துக்குப் போகிற புறநானூற்று வீரன் மாதிரி என்னை வழியனுப்பி வைத்த என் கிராமத்துப் பெண்களுக்கும் அப்போது தெரியாது. நான் அமெரிக்காவில் நாயடி, பேயடி படப் போகிறேன் என்பது.




சென்னை விலேயே ஏர்போர்ட்டில் என் கிராமத்து சாது முகம் (அப்படித்தான் நினைக்கிறேன்) நிறைய லஞ்சமாக இழக்க வைத்திருந்தது. நியூயார்க்கில் இறங்கியதும் கண்ணில் பட்ட டெலிபோன் பூத், "வா வாத்யாரே, வசம்மா மாட்டிக்கினே!" என்று கூப்பிட்டது.

கொடுக்கப்பட்டிருந்த நம்பருக்கு போன் செய்யப் போனேன். எது நம்பர்? எது ரிஸீவர்? சுழற்ற வேண்டுமா, ஒற்ற வேண்டுமா? தலைகால் புரியாத மாடர்ன் ஆர்ட் மாதிரி இருந்தது அந்த டெலிபோன். ஒரு இழவும் புரியாமல் பேய் விழி விழித்துக் கொண்டு நின்றேன்.

எங்கிருந்தோ டூயட்டுக்குப் பின்னணி ஆட ஓடி வந்து விடும் வெள்ளாடை தமிழ் சினிமாப் பெண்கள் மாதிரி, எங்கிருந்தோ வந்து நின்று, "மே ஐ ஹெல்ப் யூ?" என்றார் ஒரு வெள்ளை மகானுபாவர்.

சர்வீஸ் பண்ணாத என் அரைகுறை ஆங்கிலத்தைக் காட்டிக் கொள்ளாமல், சைலன்டாக நம்பரை நீட்டினேன்.

அந்த உத்தமர் (பின்னால் எப்படித் திட்டப் போகிறேன் என்று பாருங்கள்.) டயல் செய்து, என்னிடம் கொடுத்தார். எதிர்முனைக் குரல், "நீங்க வரப் போறதா... நிறுவனத் தலைவர் காலையில தான் சொன்னாரு. உங்களுக்கு மிட்வே ஹோட்டல்ல ரூம் போட்

டிருக்கோம். 'F' டிராக்ல ஹோட்டல், வண்டி வரும். நேரா அங்க போயிருங்க. காலைல சந்திப்போம்!'' என்று தந்தி பாஷையில் தட தடத்து விட்டு போனை வைத்து விட்டார்.

'F' டிராக், மிட் வே என்று ஸ்ரீராமஜெயம் மாதிரி சொல்லிக் கொண்டு திரும்பினேன்.

எனக்கு போன் தொடர்பு ஏற்படுத்தித் தந்த அந்த வெள்ளையர், "பத்து டாலர் குடு!'' என்றார் கறாராக.

"எதுக்கு?''

"நான் உனக்கு வேலை செய்திருக்கிறேன்.''

அட, பாதக மனித சாம்ராஜ்யமே! இப்படியும் டூரிஸ்டுகளை ஏமாற்ற முடியுமா?

சுண்டைக்காய் கால் பணம்; சுமைக்கூலி முக்கால் பணம் என்பார்களே, அது இதுதான்! போன் சார்ஜ் ஐம்பது சென்ட்; இந்தக் கட்டைல போறவனுக்கு பத்து டாலர் தரணு மாமே? பத்து டாலரென்றால் முன்னூத்தம்பது ரூபா. வேறு வழி? சரித்திரப் பிரசித்தி பெற்ற நியூயார்க் நகரில் அந்த ஆசாமி எனக்கு முதல் மொட்டையை அடித்துத் துவக்கி வைத்தான்.

அமெரிக்காவில் குளிருமா? "சேச்சே! மார்ச் மாசத்துல குளிர் ஏதப்பா! நல்ல சொக மான கிளைமேட்! என்ஜாய்!'' என்று சொல்லி யிருந்தார்கள் கிளம்பும்போது. அதனால் தெனாவட்டாக ஸ்வெட்டர் ஏதும் கொண்டு போகவில்லை.

ஆனால் நான் 'F' டிராக்கில் ஓட்டல் பஸ் வருவதற்காகக் காத்திருந்த சமயம், குளிருக்கு என்ன பசியோ? என்னை சாப்பிடத் தொடங்கிவிட்டது. விரலெல்லாம் கம்பி மாதிரி விரைத்து நிற்க, பற்கள் வாசித்த டிரம்ஸுக்கு உடல் முழுக்க பிரேக் டான்ஸ் ஆடத் தொடங்கியது.

தவிர, முன்னதாக இரண்டு வேளை நான் எதுவுமே சாப்பிட்டு இராததால் வயிற்றுக்குள் மூன்றாம் உலக யுத்தம் வேறு தொடங்கி இருந் தது. எங்கள் குலதெய்வம் சௌடம்மாவே என் வயிற்றுக்குள் கோவில் கொண்டு விட்டது போல் உருமிச் சப்தம் உள்ளிருந்து கேட்கத் தொடங்கியது.

ஒரு வழியாக நம் மாநகரப் பேருந்து மாதிரி, ஒரு மணி நேரம் தாமதமாக பஸ் வந்து சேர, பாய்ந்து ஏறி ஓட்டலை அடைந்தேன்.

அழகான ரிஸப்ஷனிஸ்டிடம், "நான் .... நிறு வனம் அனுப்பி, வந்திருக்கிறேன். இங்கு எனக் கொரு அறை முன் பதிவு செய் திருக்கிறது என் அருமை நிறு வனம்!'' என்றேன் கம்பீரமாக.

அம்மணி, கம்ப்யூட் டரைத் தட்டி ''நிசமா?'' என்று கேட்க அது, என்னை அதிர்ச்சியின் எல்லைக்கே தள்ளும் விதமாக "அதெல்லாம் ஒண்ணும் இல்லீங்களே? அண்ணாச்சி, பிளாட் பாரத்துல தங்கிக்கிட வேண்டியதுதான்!'' என்றது.

"ஐய்யயோ, இல்லீங்க. நான் வந்து..." என்று என்னென்னவோ விளக்க நினைத்து சடா ரென்று பொறி தட்டி, என்னை அனுப்பிய நிறுவனத் தலைவர், உணவு, உறைவிடம் இன்னபிற கச்சாத்துக்கள் செய்து தருவதாக ஒப்புதல் அளித்து, விசா அலுவலகத்துக்கு எழுதிய கடிதத்தை எடுத்து நீட்டினேன்.

நிரந்தரப் புன்னகை கிரீடம் சூடிய ரிஸப் ஷனிஸ்ட், அந்நிறுவனத்தின் அமெரிக்கத் தொடர்பு முகவரியில் பேசி, "மன்னிக்கவும். ஒரு மணி நேரம் முன்புதான் பதிவு செய்திருக் கிறார்கள். எங்களுக்கு இன்னும் தகவல் வரவில்லை! நீங்கள் தாராளமாகத் தங்கலாம்!'' என்று சொல்லி, சாவியைக் கொடுத்து, வயிற்றில் ஐஸ்வாட்டர் வார்த்தார்கள்.

அறைச் சாவியை வாங்கியதும் அமெரிக் காவையே வாங்கியதுபோல உற்சாகம் வந்து விட்டது எனக்கு. அறைக்குப் போய் லக்கேஜை வைத்துவிட்டு, வராண்டாவில்

கொஞ்சம் உலவலாம் என்று வெளியே வந்தேன். பழக்க தோஷத்தில் கதவைத் தள்ள, அது என்னை வெளியே தள்ளி, பூட்டிக் கொண்டது.

இது ஏதடா ரவுசு என்று பிடியைப் பிடித்து இழுத்தும் தள்ளியும், ஊஞ்சலாடியும் பார்த்தேன். ம்ஹூம்! திறப்பேனா என்றது. வேறு வழியில்லை. அகாலத்தில், பக்கத்து அறைக்கதவைத் தட்டினேன்.

கால பைரவன் போல் எழுந்து வந்த அன்பர் ஒரு வட இந்தியர். "க்யா?" என்றார். நான் "தீ..." விஷயத்தைக் கீழ் ஸ்தாயியில் சொல்லவும், அந்தக் கதவின் அண்டாகாகஸ அமைப்புகளைப் பற்றி விலாவாரியாகச் சொல்லி விட்டு, "கீழே ரிஸப்ஷனிஸ்டிடம் மாற்றுச்சாவி




வாங்கிக் கொள்ளச் சொன்னார். அப்படியே ரெஸ்டாரண்டுக்குப் போய்ச் சாப்பிடலாம் என்று அவரும் உடன் வந்தார்.

நான் சாவியையும் அவர் மெனுவையும் வாங்கிக் கொள்ள, "என் மெனு?" என்றேன் ரி.பெண்ணிடம். கம்ப்யூட்டரில் கேட்டுவிட்டு, "நீங்கள் தங்க மட்டும்தான் அந்த நிறுவனம் அனுமதி அளித்திருக்கிறது. சாப்பாடெல்லாம் உங்கள் செலவு" என்றாள் இரக்கமில்லாமல். ஏற்கனவே கொள்ளைப் பசி. கையில் தம்பிடி இல்லை. (அறையில் கொஞ்சம் வைத்திருந்தேன்) சரி. இன்று உபவாச தினம் போலும் என்று எண்ணிக் கொண்டு, மெனுவுடன் ரெஸ்டாரெண்டை நோக்கி, நாக்கை சப்புக் கொட்டிக் கொண்டு போகும் வட இந்தியரை நோக்கி ஒரு சோகப் பார்வை வீசி விட்டு, அறைக்குத் திரும்பினேன்.

தொடர்ந்து நடந்த தவறுகளால் விரக்தியின் விளிம்புக்கு வந்திருந்தவன், மேற்கொண்டு உணவு தேடும் படலத்தைக் கைவிட்டு விட்டு, பாத்ரூம் குழாயைத் திருகினேன். அமெரிக்கா விலும் குழாயைத் திறந்தால் காற்றுதான் வரும் போலும். விதியை நொந்தபடி டாய்லெட் குழாயைத் திருகினேன். நல்லவேளை. வெந்நீர் வந்தது. ஒரு ஜக்கில் இரண்டு லிட்டர் பிடித்து ஒரே 'கல்ப்'பாக அடித்துவிட்டுப் படுத்து விட்டேன்.

**அ**திகாலை பசி எழுப்பி விட்டது. என்னைச் சந்திக்க வரப் போகும் நபருக்காகக் காத்திருந்தேன். அவர் நல்ல இளைஞராக இருக்கலாம். என் கஷ்டங்களை நிவர்த்தி செய்யப் போகும் சர்வ வல்லமை படைத்தவராக இருக்கலாம். அமெரிக்காவில் என் முதல் உணவை அவருடன் அருந்துவது என்று மேலும் பசியுடன் காத்திருந்தேன்.

ஆடி அசைந்து, வெயில் ஏறிய நேரத்தில் வந்து சேர்ந்தவருக்கு வயது 65. வெல்கம் சொல்வதற்கு முன்னால் அவர் உதிர்த்த வார்த்தை: "எத்தனை நாள் தங்கறதா உத்தேசம்?"

ஆடிப் போன நான், சுதாரித்துக் கொண்டு "எத்தனை நாள் தங்கவைப்பதாக உத்தேசம்?" என்றேன், அவரை மடக்கியவனாக.

"நிறுவனம் உங்களை அஞ்சு நாள் ஸ்பான்சர் செஞ்சிருக்கு. மேற்கொண்டு தங்கறதானா உங்க செலவு."

"அஞ்சு நாள் போதும்" என்றேன் அவசரமாக.

**சா**ப்பிடப் போனோம். பத்து டாலர் பில் வந்தது. அதை என் ரூம் அக்கவுண்டிலேயே சேர்த்துக் கொள்ளச் சொன்னார், கருணை மிக்க பெரியவர். மேலும் என் கையில் 200 டாலர் கொடுத்து, "இப்படியே நேரா போனீங்கன்னா ஒரு டூரிஸ்ட் நிறுவனம் வரும். அங்க ஒரு நாளைக்கு 50 டாலர் கட்டினீங்கன்னா ஊரை சுத்திக் காட்டுவாங்க. நாலு நாள் சுத்திப் பார்த்துட்டு ஊர் போய்ச் சேருங்க" என்றார்.

எனக்கு ஒன்றுமே புரியவில்லை. மாபெரும் நாவல் போட்டியில் முதல் பரிசு வாங்கி, பரிசாக அமெரிக்கா சுற்றிப் பார்க்கப் போனவன் நான். இப்படி நடுக் காட்டில் அல்லது ரோட்டில் த்ராட்டில் விடுவார்கள் என்று தெரிந்திருந்தால் என் கிராமத்திலேயே கூழ் குடித்து விட்டு, வயலுக்குப் போய் வேலை பார்த்

திருப்பேன். என் அருமை விதியை நொந்தபடி அந்தப் பெரியவருடன் நடந்தேன்.




ஒரு தமிழ்க் கோவிலுக்குக் கூட்டிப் போனார். மைலாப்பூர்க்காரரான ராஜன் என்பவர் அங்கே தற்செயலாக அறிமுகமாகி, நட்பாகி, கொஞ்சம் எனக்கு நம்பிக்கையையும் பிரசாதத்தையும் கொடுத்தார்.

திரும்பும்போது, பெரியவர் என்னைப் பாதி வழியில் இறக்கிவிட்டு, பஸ் ஏறிப் போங்கள் என்றார் கறாராக. எது பஸ் ஸ்டாப்? எது டவுன் பஸ்? முன் ஜென்மத்தில் நான் அவருக்குக் கர்ண கடூரமாக ஏதாவது பாதகம் செய்திருக்க வேண்டும். அல்லாத பட்சத்தில் அப்படி டீவில் விட்டிருக்க மாட்டார்.

வழியில் பார்த்த சில அடையாளங்களை வைத்துக் கொண்டு, ஒரு வழியாக இரவு மிட் வே ஓட்டலுக்கு மொத்தமாக வந்து சேர்ந்தேன்.

மறுபடியும் பசி. மறுபடியும் ரெஸ்டாரன்ட். மறுபடியும் மெனு கேட்டாள் ஒரு மாது.

மெனு?

"அதெல்லாம் இல்லீங்க!" என்று தேவுடு ஐயர் காலத்துத் தேய்ந்த கிராமபோன் ரெக்கார்டாக ஒரே பல்லவியைப் பாடியது அந்த கம்ப்யூட்டர் சனியன்.

"காலைல சாப்பிட்டேனே?"

"அது தவறிப் போய் விட்டுட்டாங்க. அந்தப் பத்து டாலரையும் இப்ப கட்டிடுங்க."

வேறு வழி? மறுநாள் சூப்பர் மார்க்கெட் போய், பிரட், மூன்றடி நீளமுள்ள கேரட்டுகள், ஆப்பிள், ஆரஞ்சு என்று வாங்கிக் கொண்டு வந்து, சந்ததம் வந்தவன் போல் தின்று தீர்த்தேன்.

மனசுக்குள் அபார வெறுப்பு. என்னை அனுப்பியவர்கள் மீதா? அமெரிக்கா மீதேவா என்று தெரியவில்லை. எங்கும் சுற்றிப் பார்ப்பதில்லை; நாலு நாள் ஆனதும் அம்மா பட்டிக்கு வண்டியேறி விடுவது என்று முடிவு செய்து கொண்டேன்.

அறைக் கதவை இழுத்து சார்த்திக் கொண்டு, கொண்டு போயிருந்த கல்குதிரை புஸ்தகத்தை வைத்துக் கொண்டு படிக்க ஆரம்பித்தேன். லத்தீன் அமெரிக்க எழுத்தாளர் கார்ஸியா மார்க்வெயின் சிறப்பிதழ். கார்ஸியா புண்ணியத்தில் நாலு நாள் கழித்துவிட்டு மூட்டை கட்டிக் கொண்டு ஏர்போர்ட் போனேன்.

அமெரிக்காவில் டூரிஸ்ட் விசா வாங்கி வந்திருந்தால் குறைந்தது 15 நாள் தங்க வேண்டுமாம். நாலு நாளில் ரிட்டன் ஆனால், ஒன்று பெரிய அரசு அதிகாரியாக இருக்க வேண்டும். அல்லது கடத்தல்காரனாக இருக்க வேண்டும். விமான நிலைய அதிகாரிகளுக்கு நான் ஒரு பயங்கர கடத்தல்காரனாகத் தெரிந்தேன் போலும்.

பிடித்துக் கொண்டுபோய் சோதனை மேல் சோதனை போட்டு, கதற வைத்து விட்டார்கள்.

ஒருவழியாக நான் அங்கிருந்து தப்பியதும், தற்செயலாக அறிமுகமான அந்த ராஜன் என்கிற நண்பர் மூலம் தடுத்தாட்கொள்ளப் பட்டதும் எனக்கோ என்னை அனுப்பிய நிறுவனத்துக்கோ ஸ்நானப் பிராப்திகூட இல்லாத அவர் உதவி மூலமே மறுபடி நான் அமெரிக்கா சுற்றிப் பார்த்ததும் இன்னொரு நாவலுக்கான விஷயங்கள்.

ஒருவேளை அந்த நாவலை எழுதி, அதற்குப் பரிசாக ஆஸ்திரேலியாவுக்கோ அண்டார்டிகாவுக்கோ போகச் சொன்னால் நான் மாட்டேன் சாமி!

— சு. வேணுகோபால்

# குறையொன்றுமில்லை

**கா**யத்ரி மந்திரத்தை உரத்த குரலில் சொல்லக் கூடாது என்பது சாஸ்திரம். ஜபத்தில் மூன்று விதம் உண்டு.

உச்சம் - பெருத்த குரலில் ஒருத்தர் உட்கார்ந்து ஜபம் செய்வது. இதற்குக் கொஞ்சம்தான் பலன் கிடைக்கும். அவ்வளவாக சிலாக்கியமில்லை இந்த முறை.

உபாகும்சு - இது உச்சத்தைக் காட்டிலும் உயர்ந்த முறை. உபாகும்சு என்றால், ஜபம் சொல்கிறவர் காதிலே அது விழும்; அருகிலிருப்பவர்கள் காதிலேயும் விழும். ரொம்பவும் உரக்க சொல்வதைக் காட்டிலும் இது உயர்ந்தது.

இதைக் காட்டிலும் உயர்ந்தது மௌனம். உதடு தான் அசையலாம். ஓசை கேட்கக் கூடாது! காயத்ரியை ஜபிப்பதற்கு இந்த உதடு அசையாத முறை தான் உயர்ந்தது.

காயத்ரியை மிக ஜாக்கிரதையாக ஐந்து இடத்திலே நிறுத்தி, முறைப்படி ஜபம் பண்ண வேண்டும். அப்படிப் பண்ணுகிறவர்களுக்கு பிரும்ம வர்சஸ் ஏற்படுகிறது. அதனால்தான் பிரும்ம சூத்ரம் என்றே அதற்குப் பெயர்.

ப்ரும்ம சூத்ர பாஷ்யத்தை நன்றாகப் படித்தவர்களுக்குத் தெரியும். பரமாத்மா ஜோதி ஸ்வரூபனாய் இருக்கிறான் என்பது. துவாதச ஆதித்யர்கள் என்று பன்னிரண்டு ஆதித்யர்கள் சொல்லப்படுகிறார்கள். அந்த ஆதித்ய மண்டலங்கள் அனைத்திலும் உறைபவன் பரமாத்மா. 'அப்படி பன்னிரண்டு ஆதித்ய மண்டலங்களில் இருக்கிறவனை என் ஹ்ருதயத்திலே தியானம் பண்ணுகிறேன்...' என்று தியானிக்கும் போது, அங்கேயும் நம் ஹ்ருதயத்திலேயும் அவன் பிரகாசிக்க ஆரம்பிக்கிறான்.

சூர்ய, சந்திர, நட்சத்திர மண்டலங்களுக்கெல்லாம் ஒளியைத் தருகிறானே.. அவனுடைய தேஜஸ் இருக்கு பாருங்கள்.. அது எல்லா வஸ்துக்களிலும் பரவியிருக்கிறது. எப்படி அவனே எல்லா வஸ்துக்களிலும் பரவியிருக்கிறானோ, அப்படியே அவன் தேஜஸும் எல்லா இடத்திலும் பரவிக்கிடக்கிறது.

உதிக்கின்ற சூரியனின் ஒளி எல்லா இடத்திலும் பரவுகிறது அல்லவா... கோவில் கோபுரத்திலும் விழுகிறது; ஒரு சாக்கடையிலும் விழுகிறது; ஒரு விக்கிரகத்தை எழுலப் பண்ணி வைத்திருந்தால் அதன் திவ்ய வதனத்தின் மேலும் விழுகிறது; அழுக்கான குப்பை மேடு இருந்தால் அங்கும் விழுகிறது... தகாத இடத்திலும் தகுந்த இடத்திலும்





விழுந்தாலும்கூட சூர்ய ஒளியை அந்த சுத்தி, அசுத்தம் இரண்டுமே சென்று ஒட்டிக் கொள்வதில்லை.

எப்படி சூர்ய ஒளி எங்கும் பரவினாலும் உலகத்தின் சுத்தி - அசுத்தி அதனிடம் போய் ஒட்டிக் கொள்ளாதோ, அப்படியேதான் சர்வ வியாபியான பகவானிடத்தில் குண தோஷங்கள் ஒட்டிக் கொள்ளாது.

ரிக் வேதத்தில் சில மந்த்ரம் என ஒன்று இடம் பெறுகிறது. அதைப் பூரணமான ஆயுளுக்காக அபம்ருத்யு பரிகாரமாய்ச் சொல்லுவார்கள். அதிலே வருகின்ற அஷ்டவாக்யம் என்ற எட்டு வாக்கியங்கள் ஜோதிஷாய் பிரகாசிக்கிறான் பரமாத்மா என்கின்றன. 'அவன் யார் என்றால், ஸ்வர்ண ஸ்தம்பத்திலிருந்து தோன்றினானே, அந்த ஹிரண்ய கசிபு வீட்டிலிருந்து தோன்றியவன்தான் - நரசிம்ஹன்தான் தேஜஸ் ஸ்வரூபமாய் இருக்கிறான்' என்கிறது சில மந்திரம். 'தேஜோ ரூபியாய் இருந்து ஆயுளை அவன் விருத்தி பண்ணுகிறான். மிருத்யுவுக்கு மிருத்யு அவன்...' என்று விசேஷமாகப் பிரகடனம் பண்ணுகிறது.

சஹஸ்ரநாமத்தில் கூட 'நாரசிம்ஹ வபு: ஸ்ரீமான்...' என்று வருகிறது. ஆதி சங்கர பகவத் பாதாள் பாஷ்யத்தில்: 'விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் ஆதியிலும் நரசிம்ஹன்; இடையிலும் நரசிம்ஹன், கடைசியிலேயும் நரசிம்ஹன்தான் இருக்கிறான்.

உலகத்தில், எதிரே இருக்கிறவர்களை ஸ்தோத்திரம் பண்ணுவதுதான் வழக்கம். ஆனால் பீஷ்மாச்சார்யார் என்ன பண்ணுகிறார்? எதிரேயிருக்கும் படியான வாசுதேவனை - கிருஷ்ணனைச் சொல்லாமல் நரசிம்ஹனை ஸ்தோத்திரம் செய்கிறார்! ஆரம்பத்தில் நரசிம்ஹன்தான்; கடைசியில்தான் கிருஷ்ணன்.. எது உத்தமமான விஷயமோ அதைத்தான் முதலில் சொல்ல வேண்டும் என்பது சாஸ்திரம்.

அப்படியென்றால் கிருஷ்ணன் மாற்றுக் குறைந்தவன் என்று அர்த்தமில்லை இங்கே..

லௌகிகத்திலே நாம் பேசுகையில் நமக்கு நன்றாகத் தெரிந்த விஷயங்களை முதலில் சொல்லி விடுகிறோம். பிறகுதான் தெரியாத விஷயங்களைப் பற்றிப் பேச முற்படுகிறோம். அதைப் போல்தான் பீஷ்மாச்சார் எது நமக்குத் தெரிந்த விஷயமோ அதை முதலில் சொல்லி விடுகிறார்:

நாரசிம்ஹ வபு ஸ்ரீமான்!

கடைசியிலும் நரசிம்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



**இருபது அடி உயரமும், 8,500 கிலோ எடையும் கொண்ட ஐம்பொன்னாலான நடராஜர் சிலையை உருவாக்கி வருகிறார் திம்மக்குடியைச் சேர்ந்த ராஜன் ஸ்தபதி. திம்மக்குடி, சுவாமிமலை அருகாமையில் உள்ள கிராமம். சிலையின் மெழுகு மாடலே இப்போதுதான் முடிந்துள்ளது. ஜப்பான் அருங்காட்சியகத்திற்காக உருவாகும் இச்சிலையின் பணி முடிவடைய ஏழு ஆண்டுகள் ஆகுமாம்.**

**— செந்தில் முருகன்**

ஹனைத்தான் சொல்கிறார் - சர்வப்ரவரணாயுத:

எல்லாமே அவனுக்கு ஆயுதங்கள் என்று பொருள்.

இதற்கு ஆதி சங்கர பகவத் பாதாள் வியாக்யானம் பண்ணுகையில் 'சர்வப்ரவரணாயுத: ந்ருசிம்ம: என்று எழுதினார். வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பது போல, அதையும் தனக்கு ஆயுதமாகக் கொள்ளக் கூடியவன் அவன். நரசிம்ஹ அவதாரத்திலே நகங்களே ஆயுதமாயின அல்லவா... அதைக் கொண்டு தான் ஆதிசங்கரர் அப்படி வியாக்யானம் சொன்னார்.

அந்த பீஷ்மாச்சார்யார் சொன்னதையே ஆழ்வார்களும் சொல்கிறார்கள். பேராயிரம் கொண்டதோர் பீடுடையவன் நரசிம்ஹன் என்கிறார்.

ஆகையால், ஏற்றமுடைய எம்பெருமான், இந்த காயத்ரி மந்த்ரத்துக்குள் அந்தர்யாமியாய் இருந்து கொண்டு ஒளிப் பிழம்பாய்ப் பிரகாசிக்கும் நரசிம்ஹன், தேஜஸாய் விளங்கக் கூடியவன்.

தேஜஸ் மட்டுமின்றி, சப்தமாக விளங்கக் கூடியவனும் நரசிம்ஹன்தான்.

அவதார காலத்திலே ஸ்தம்பத்தை ஓங்கி அறைந்தபோது இரண்டும் வந்தது...

எவை இரண்டும்?

அண்ட பகிரண்டங்களை அதிரச் செய்த ஒலி. அந்த ஒலியினால் எங்கும் பரவி நின்றான் பரமாத்மா. தேஜஸினால் மட்டுமல்ல, ரூபத்தினால் மட்டுமல்ல... சப்தத்தினாலும் பரவி நின்றான்.

இந்த சப்தம் ப்ரும்மாவையே உலுக்கிக் கீழே தள்ளிவிட்டது! வருணனைக் கீழே தள்ளவில்லை; குபேரனைத் தள்ளவில்லை, இந்திரனையும் தள்ளவில்லை... பிரும்மாவை மட்டும் 'தொப்'பென்று கீழே தள்ளி விட்டது. ஏன்...?

"இந்த மாதிரி (ஹிரண்ய கசிபு) துஷ்டனுக்கெல்லாம் வரத்தைக் கொடுத்துவிட்டு உட்கார்ந்திருக்கிறாயே! இவனை முடிக்க நான் இப்படியொரு வேஷம் போட்டுக் கொண்டு வர வேண்டியதாகி விட்டதே... ஜாக்கிரதை! இனிமேல் யாருக்காவது வரங்கொடுப்பதானால் என்னைக் கேட்டுக் கொண்டு கொடு..." என்று கோபத்தில் சப்தத்தினாலேயே பிரும்மாவைக் கீழே தள்ளிவிட்டாராம் பரமாத்மா!

அப்படி இத்தனை உலகத்தையும் கடந்து அந்த சப்தம் போயிருக்கிறது.

சப்தம் மட்டுமல்ல; தேஜஸூம் கூட.

அஹோபில மட பீடாதிபதி நாற்பத்து நாலாவது பட்டத்து ஸ்ரீமத் அழகிய சிங்கர் ஒரு உபன்யாஸத்திலே கேட்டார். 'இன்று ஏன் கூட்டம் குறைவாக இருக்கிறது...?' என்று.

"இன்றைக்கு ஒலியும் ஒளியும்" (டிவியில்) என்று பதில் வந்தது.

"நானும் ஒலியும் ஒளியும்தான் சொல்லப் போகிறேன் - அதாவது நரசிம்ஹனைப் பற்றிச் சொல்லப் போகிறேன்" என்றார் அவர்!

ஒளி - ஒலி, தேஜஸ் - சப்தம்... இரண்டுமே நரசிம்ஹ அவதாரத்திலே சித்தம்.

ஆகவே விஷ்ணு என்கிற விஷயத்தில் நாம் எதை கிரஹிக்க வேண்டுமென்றால், அவன் நரசிம்ஹ ரூபியாய் எங்கும் பரவினான். ஸ்வரூபத்தினால், ரூபத்தினால், எல்லா இடத்திலும் உட்கார்ந்தான். தேஜஸினால் எங்கும் பரவினான்; சப்தத்தினால் எங்கும் பரவினான்.

விஷ்ணு சஹஸ்ரநாமத்திலும், எட்டும் எட்டும் என்கிற உயர்ந்த புருஷ சூக்தத்திலும் எட்டும் எட்டும் எட்டும் என்கிற காயத்ரி மந்திரத்திலும் குறிப்பிடப்படும் விஷ்ணு, ஒலி - ஒளி வடிவினனாக உலகை நிறைத்து அருள் பாலித்துக்கொண்டிருக்கிறான்.

(தொடரும்)



# Spictex®

மென்மையான
சுகானுபவம்...
மேன்மையான
பொருத்தம்...

உங்களுக்காகவே !



எண்ணத்தை
சுண்டியிழுக்கும் கண்கவர்
வண்ணங்களில்,
மனதை கவரும்
நாகரீக வடிவங்களில்,
கொள்ளை கொள்ளும்
எல்லையில்லா
டிசைன்களில்.

**பாண்டீஸ்**
**மற்றும்**
**சிம்மீஸ்**

அனைத்து மங்கையரின்
அளவுகளுக்கு ஏற்ப கிடைக்கிறது.



# Spictex®

ஸ்பிக்டெக்ஸூம், நீங்களும்
**பொருத்தமான ஜோடி !**

**சிம்மீஸ் ரகங்கள் :-**

- *சிட்டி கேர்ள் சிம்மீஸ்*
- *சுடி லேஸ் சிம்மீஸ்*
- *சுடி சிம்மீஸ்*
- *மிடி சிம்மீஸ்*
- *ஹாஃப் சிம்மீஸ்*

ஆடவர் மற்றும் குழந்தைகளுக்
கான உள்ளாடை தயாரிப்பிலும்
முன்னோடிகள்.

நர்மதாவைப் பார்த்ததுமே பத்ரி மெலிதாகச் சிரித்தான்:

"மோஹன்ராஜைப் பார்க்கவா?" என்று கேட்டான்.

ஆமாம் என்று தலையசைத்துவிட்டு "பார்த்தாச்சு" என்றாள் நர்மதா.

"நான் பார்க்கப் போய்க்கிட்டிருக்கேன்."

"சரி" லேசாக முகம் அசைத்து விடை பெற்றாள் நர்மதா.

"ஒரு நிமிஷம்," அவன் நிறுத்தினான்.

அவள் நின்றாள்.

பத்ரி நெருங்கி வந்தான்.

"நான் 'ரிஸைன்' பண்றதா முடிவுக்கு வந்தாச்சு."

"என்னது?"

அவளுக்குப் புரியவில்லை.

"தப்பையே பிடிவாதமா பண்ணிண்டிருக்கப் படாதுன்னு தோணித்து."

அவனிடம் ஒரு புதுமை தெரிவது போல வியப்போடு பார்த்தாள் நர்மதா.

"அண்ட்... நானும் ஒங்க போராட்டத்திலே சேரணும்னு தீர்மானம் பண்ணிட்டேன்."

நர்மதாவுக்குள் ஜில்லென்று ஒரு குளிர்ச்சி பரவியது. எதுவோ ஒன்று தரையிலிருந்து மேலே உயர்த்துவது போல் ஓர் உணர்வு.

"டூ யூ மீன் இட்?" நம்பாதவன் போல் கேட்டாள்.

"ஐ மீன் இட்."

அசோக மர நிழல் கவிந்த சிமெண்ட் பெஞ்ச் ஒன்று காலியாக அவளைக் கூப்பிட்டது.

"வாங்க பத்ரி... அங்கே உக்காந்து பேசுவோம்."

அவர்கள் அங்கே போய் அமர்ந்தபோது எதிரெதிர் திசையில் இருந்து ஒரு பட்டாம் பூச்சியும், மரங்கொத்தியும் மரத்தில் வந்து அமர்ந்தன.



"இது உணர்ச்சி வசப்பட்ட முடிவு இல்லியே?" நர்மதா கேட்டாள்.

# தென்றலாகி நிலவினில் ஆடி... 17

"நோ. இந்த முடிவு ஒங்களோட மொதல்ல பேசின அன்னிக்கே தோணியது. நான் 'கண்ட்ரோல்' பண்ணிண்டேன்."

"எப்பப் பேசியது?"

"மொதல்லே... அந்த ஏரிக்கரை மீட்."

"ஓ"

"என் சிஸ்டர் ஷீலா ரொம்ப எதுத்தா... மீனாட்சி டெக். மோஹன்ராஜ் 'அப் ஸெட்'. எவ்வளவோ சொல்லி வாதாடினேன்...."

அவன் தயங்கினான்.

"சொல்லுங்கோ."

"எ கேரியர் ஈஸ் எ கேரியர். எதுக்காகவும் கேரியரை விடப்படாதுன்னா... ஒரு விஷயம் அதர்மம்னா அதர்மம்தான்னேன்... யூ நோ... அவனை கன்வின்ஸ் பண்ணாம நான் ஒரு முடிவு எடுக்கறதில்லே."

மரங்கொத்தியின் கருப்பு மஞ்சள் கிரீடம் அசைவதைப் பார்த்துவிட்டு அவன் தொடர்ந்தான்.

"ஒங்க பேர்ல ஒரு மயக்கம்தான் காரணம்னா."

அவன் இவ்வளவு வெளிப்படையாகப் பேசுவது அவளை நெளிய வைத்தது. எனினும் தான் அதை விரும்புவதும் புரிந்து வியப்பு ஏற்பட்டது.

"மிஸ்டர் பத்ரி."

அவள் குரலில் ஒரு விலகலின் கண்டிப்பு! பத்ரி நிமிர்ந்தான்.

"ஒருவேளை ஒங்க சிஸ்டர் நெனைக்கறது சரியா இருக்கலாம்."

"வாட் டு யூ மீன்?"

"மயக்கம்."

பத்ரி இமையசையாது அவளைப் பார்த்தான்.

"மயக்கம் வேறே. மரியாதை வேறே."

மயக்கத்திலிருந்தும் மரியாதை பிறக்கலாம். மரியாதையிலிருந்தும் மயக்கம் பிறக்கலாம் என்று நினைத்தாள் நர்மதா.

எனினும் இரண்டிற்கும் இவர் வித்தியாசம் தெரியாதவர் அல்ல! சிந்தனை தொடர்ந்தது.

"வேண்டாம் பத்ரி! டோண்ட் ரிஸைன்."

"ஏன்?"

"இந்த கன்ஸர்ன்லே எத்தனை வருஷம் சர்வீஸ் ஒங்களுக்கு?"

"அஞ்சு வருஷம் முடிஞ்சாச்சு."

"எக்ஸ்க்யூஸ்மீ... சம்பளம் ஏழெட்டாயிரம் வருமா?"

"மேலே வரும்."

"அப்புறம் பிரமோஷன்... போனஸ்... க்வாட்டர்ஸ்... மெடிகல் அலவன்ஸ்... வெஹிகிள்..."

"நீ என்னை டெஸ்ட் பண்றியா?"

அவன் முதன்முறையாகப் பன்மை தவிர்த்தான். அதில் நர்மதா ஒரு நெருக்கம் உணர்ந்தாள்.

"அது என் கடமை."

"................."

"நீங்க என்னண்டே எதையோ எதிர்பார்க்கறேள்! நான் சண்டைக்காரி... எதையோ எதிர்த்துப் போராடிண்டிருக்கேன்."

"அது நியாயமான சண்டைன்னு நான் புரிஞ்சுண்டா?"

"புரியறதுக்கு ஒரு ஸ்பீட்... ஒரு 'ரிதம்' உண்டு... யூ ஆர் ஃபாஸ்ட்... அப்புறம்..."

பத்ரியைப் போல் தேங்காய் உடைக்கிற

**வையவன்**

## அருள்வாக்கு

காய்கறித் தோட்டம் போடுவதற்கு என்ன பலன்? கத்திரிக்காய் ஸாம்பார், வெண்டைக்காய் கறி இத்யாதிதானே? ஒருத்தருக்கு இந்த ஸாம்பாரும் கறியும் வேண்டியிருக்கவில்லை. ஆனாலும் அவருக்கு என்னவோ வேதனை - புத்ர சோகம். Business-ல் Loss மாதிரி என்னவோ ஒன்று. அது தெரியாமலிருக்க, வெட்டி, கொத்தி ஏதாவது கார்யம் பண்ணி மறக்கடிக்கலாமென்று காய்கறித் தோட்டம் போடுகிறார். அதற்காக, தோட்டம் போடுவதன் பலன் என்ன என்று கேட்டால், 'புத்ர சோக நிவ்ருத்தி' என்று சொல்லலாமா?



இப்படித்தான் ஒரு கர்மாவின் இஹாமுத்ர பலன்* வேண்டாமென்று கர்மா செய்கிறவன் பெறும் சித்த சுத்தியைக் கர்ம பலனாகச் சொல்வதில்லை. இது ஈச்வர ப்ரஸாதமாக அவன் பெறுவதே.

"நேர்ப் பலன் தனக்கு வேண்டாமென்றிருந்தும், நம்முடைய ஆக்ஞை என்பதாலும், ஸமூஹ ஒழுங்கை உத்தேசித்தும் நம்முடைய ப்ரீதிக்காகவே இவன் இவ்வளவு நன்றாகக் கர்மாநுஷ்டானம் செய்கிறானே! இந்த மனோபாவத்துக்காக இவனுடைய சித்தத்தின் அசுத்தங்களைப் போக்குவோம்'' என்று அநுக்ரஹிப்பதுதான் சித்த சுத்தி.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

* இஹ-அமுத்ர பலன்: பூலோக, ஸ்வர்க்கலோக இன்பப் பயன்கள்.

மாதிரிச் சொல்ல முடியாது அவன் தயங்கினாள்.

"சொல்லு நர்மதா."

"மீனாட்சிகிட்டே நீங்க பேசினதை அவ சொன்னா. அதுக்காக இந்த ரெவிக்லேஷன்னா அது அபத்தம்."

சட்டென்று பத்ரி குறுக்கிட்டான். "ப்ச்"

கண்களை இறுக மூடி மறுப்பது போல் தலையசைத்தான்.

"நீ என்ன சொல்ல வர்றேன்னு புரியறது. ஐ ஹாவ் மெட் கேர்ள்ஸ்... மோர் கிளாமரஸ் விமன். அலஹாபாட்லே எங்கப்பா அக்கவுண்ட்ஸ் ஆபீசரா இருந்தார். நான் ரூர்க்கியிலே என்ஜினியரிங் படிச்சேன்... வெஸ்ட் பெங்கால்... யூ.பி... கேரளான்னு எங்க கம்பெனி எவ்வளவோ கவர்ன்மெண்ட் கன்ஸ்ட்ரக்ஷன்ஸ் காண்ட்ராக்ட் எடுத்திருக்கு."

அவன், அவள் தான் சொல்வதை எப்படி வாங்கிக் கொண்டிருக்கிறாள் என்று கவனித்துவிட்டுத் தொடர்ந்தான்.

"நெறய பெண்களைச் சந்திச்சிருக்கேன். புத்தி கூர்மை... சரளம்... நாசுக்கு... தூக்கிச் சாப்பிடற பெண்ணழகு... ரசிச்சிருக்கேன்... பட் ஒரு கமிட்மெண்ட் உள்ள மொதல் பொண் இருக்கூடல்ல பாத்த நீ தான்!"

அவள் அவன் மீதிருந்த கண்களை அகற்றவில்லை.

"மீனாட்சி கிட்டே நான் பேசினதை அவ முழுசாப் புரிஞ்சுக்கலேன்னு தோணறது."

அவன் சற்று நிறுத்தித் தொடர்ந்தான்.

"லவ் வேற... இது வேற... ஒரு சகாவை ஒரு தோழமையை வாழ்க்கைல ஒரு நோக்கம் தேடற மனுஷியைப் பார்த்த தெளிவு இது. மயக்கம் இல்லே... தெளிவு."

நர்மதா யோசித்தாள்.

"கிவ் மீ டைம்" என்றாள்.

"எதுக்கு? ஏத்துக்கவா மறுக்கவா?"

"புரிஞ்சுக்க."

பேச்சு முடிந்ததுபோல் அவள் எழுந்தாள்.

மாலையில் பத்ரி அனந்தாச்சாரியைப் பார்க்க வீட்டிற்கு வந்தான்.

ஜீப் இல்லை. ஹீரோ ஹோண்டா ஸ்ப்லெண்டர். சொந்த வண்டி.

"வாங்க இன்ஜினியர் சார்." அனந்தாச்சாரி வணங்கிய கையோடு வரவேற்றார்.

அவன் சிரித்த முகத்தோடு "இன்ஜினியர் இல்லே. வெறும் பத்ரி" என்று கூறியவாறே அவர் காட்டிய நாற்காலியில் அமர்ந்தான்.

அனந்தாச்சாரி உள்ளே திரும்பி "மஹாலக்ஷ்மி... குடிக்க ஏதாவது கொண்டு வாற்

யாம்மா'' என்று குரல் கொடுத்து விட்டு பத்ரியைப் பார்த்து "ஆச்சரியமா இருக்கே" என்றார்.

"எது?"

"இவ்வளவு சீக்கிரம் முடிவு எடுத்தது."

மோஹன்ராஜை ஆஸ்பத்திரியில் சேர்க்க அவருடன் ஒன்றாய் அலைந்தபோது பத்ரி அனந்தாச்சாரிக்குக் குறிப்பு காட்டியிருந்தான்.

காப்பி டபராவுடன் மஹாலக்ஷ்மி வந்தாள். அவளுக்குப் பின்னால் நர்மதா முகம் தெரிந்தது.

"ஐ மெட் நர்மதா'' என்றான் பத்ரி பதிலாக.

அனந்தாச்சாரி திரும்பி அவளைப் பார்த்தார்.

"அவ சொல்லவே இல்லியே."

அனந்தாச்சாரியின் பார்வை தன்னைத் துருவியதைக் கண்டு இந்த கிண்டல் தன்னிடம் வேண்டாம் என்று தாத்தாவுக்குப் பேத்தியாக உதடு முறுக்கிக் கோணி அவள் பதிலடி கொடுத்தாள்.

பத்ரி காப்பி டபராவை வாங்கி இரண்டு ஆற்று ஆற்றி விட்டுச் சிந்தாமல் சிதறாமல் வாய்க்கு நேரே தூக்கி விட்டுக் கொண்டு பருகினான்.

மஹாலக்ஷ்மியின் கண்ணில் ஒளி வீசிற்று.

அதையும், அவளையும், பின்னால் நின்ற நர்மதாவையும் மீண்டும் பத்ரியையுமாக அவர் பார்வை தாவித் தாவி ஒரு சங்கிலி கோத்தது.

"எமன்.... எமன்'' என்று நர்மதா தாத்தாவைச் செல்லமாக மனசுக்குள் திட்டிச் சந்தோஷப்பட்டாள்.

டபரா செட் காலியாகிக் கைக்கு வந்தும் மஹாலக்ஷ்மி நகராமல் பத்ரியைப் பார்த்துக் கொண்டு நின்றாள். பிறகு அனந்தாச்சாரியிடம் "இவாளும் ஐயங்கார்தானா?'' என்றாள்.

பத்ரி முந்திக் கொண்டான்.

"ஆமாம் மாமீ."

கொஞ்சம் போனால் வடகலையா தென்கலையா என்ன கோத்திரம்... எது பூர்வீகம் என்று தொடங்கி விடுவாளோ என்ற பயம் நர்மதாவுக்கும் அனந்தாச்சாரிக்கும் ஒரே சமயம் தோன்றியது.

நல்லவேளை அவ்வளவு தூரம் போகவில்லை.

"அதுக்கில்லே... இவர் சிஸ்டர் வந்திருந்தாளே... ஷீலா பிரசாத்னுட்டு... வடக்கத்திப் பேராட்டமோ... கிறிஸ்டியன் பேராட்டமா இருந்தது.... அதான் கேட்டேன்."

பத்ரி விளக்கும் பொறுப்பை மேற்கொண்டான்.

"அக்கா அல்லஹாபாட்ல பொறந்தா. தலைச்சன். ரொம்ப ஸ்ரமப் பிரசவம். டாக்டர் ஷீலா பிரசாத்னுட்டு ஒரு வடக்கத்திக்காரி போராடிப் பிரசவம் பார்த்தா. அவ ஞாபகார்த்தமா அப்பா அந்தப் பேரை வச்சுட்டார்."



''எனக்கு தலை தீபாவளி ஒத்துக்கிறேன் அதுக்காக உங்கப்பா 'விக்' பரிச கொடுத்து கிண்டல் செய்ய வேண்டாம்....''

— ராஜி ராதா

மஹாலக்ஷ்மிக்குப் பரம திருப்தி. உள்ளே போகும்போது ஏக முக மலர்ச்சி. அனந்தாச்சாரி பேச்சைத் தொடர்ந்தார்.

"நீங்க ஒருக்கா இந்த வேலையைத் தூக்கி எரியற அளவு வசதியானவரா இருக்கலாம். ஆனா மனஸ் ஆழத்திலேர்ந்து ஒரு கொரல் வராமே ஒரு காரியத்திலே எறங்கிடப்படாது. பின்னாடி வருத்தப்பட வேண்டி வரலாம்..."

அனுபவம் பேசும்போது குறுக்கிடுவது விவேகமல்ல. பத்ரி கவனித்தான்.

"இதுல நீங்க ஜெயிக்க முடியாமலும் போகலாம். ஒருநாள். ஒரு மாசம்... ஒரு வருஷத்திலே முடியற யுத்தம் இல்லே இது."

பத்ரி பதற்றமின்றி ஆமோதித்தான்.

''புரியறது. பொல்யூஷன் வெளியிலே மட்டும் இல்லே... சொல்லப்போனா வெளியிலே இல்லே. மனுஷா மனசிலேயே வந்தாச்சு... அங்கிருந்து தான் ஆரம்பமே."

இந்தத் தெளிவு அனந்தாச்சாரி எதிர்பாராதது. ஆச்சரியப்பட்டார். காலம் வேறு. கவலைகள் வெவ்வேறு என்று ஒரு தலைமுறையை கழித்துக் கட்டுவது என்ன பேதைமை!

"திருக்கூடல் எனக்கு ஒரு திருப்புமுனை."

பத்ரி உறுதியாக வெளிப்பட்டான். உறுதி குலையாமல் பேசி விடை பெற்றான்.

இரண்டு நாட்கள் கழிந்தன. கெமிக்கல் தொழிற்சாலைக்கு பத்ரியின் இடத்திற்கு நிர்வாகம் நியமித்திருந்த புது என்ஜினியரின் ஜீப், பெருமாள் கோவில் அருகில் நின்றது.

ஐந்து பேர் இறங்கினர். கோவிலின் பின் வழி சுற்றி மணல் எடுக்கச் செல்லும் இடம்



**"அதுவா.... இவர்... வெடி வெடிக்கிறது ஊருக்கே கேட்கணுமாம்..."**

**— ராஜி ராதா**

நோக்கிப் போன பாதையில் அவர்கள் பேசிக் கொண்டே நடந்தனர்.

திருக்கூடல்வாசிகளைப் பற்றியோ, அங்கே நடந்த போராட்டத்தைப் பற்றியோ அவர்கள் எள்ளளவும் பொருட்படுத்தியதாகக் காட்டிக் கொள்ளவில்லை.

நேரே ஆற்று மணல் எடுக்க வேண்டிய பகுதி நோக்கி நடந்தார்கள்.

வழியில் லாரிப் போக்குவரத்துக்கு எந்தெந்த இடம் இடையூறு என்று கைகாட்டிப் பேசிக் கொண்டார்கள்.

மணல் எடுக்கும் முயற்சிகள் தடுக்கப்பட்ட இடம் வரை போனவர்கள், அங்கே நின்று தெற்கும் வடக்குமாகத் திரும்பிப் பார்த்தார்கள்.

ஒருவர் தெற்கே தூரத்தில் தெரிந்த ஏதோ ஒரு பகுதியைக் கை காட்டி என்னமோ பேசினார்.

எல்லார் தலைகளும் அசைந்தன.

அவர்கள் மீண்டும் திரும்பி வந்து ஜீப் ஏறினார்கள்.

திருக்கூடல் ஆற்றிலிருந்து மணல் எடுத்தால்தானே பிரச்னை?

இரண்டு கி.மீ. தள்ளி எங்கிருந்தாவது மணல் வாரி வந்து மடமடவென்று இரவும் பகலும் ஒவர்டைம் வைத்து வேலையைத் தொடங்கி முடித்து விடுவோம்!

திருக்கூடல்வாசிகள் கத்திக் கூச்சல் போட்டு நாலு தரம் காவல் நிலையத்துக்கும் சிறைச்சாலைக்கும் போய்க் களைத்து ஓய்ந்து போவார்கள்.

இருக்கவே இருக்கின்றன, இழுத்து மாளாத சட்டம் என்ற ரப்பரும் வழக்கு வாய்தாக்களும்... சுத்தமாக வாய் மூடிக் கொள்வார்கள்; பிறகு மறந்தே போவார்கள்!

இப்படித் தொழிற்சாலைக் கட்டுமானப் பொறுப்பேற்ற நிறுவனம் கருதுவதாகப் போராட்டக்காரர்களுக்குத் தகவல் வந்தது.

அதற்கு ஏற்றாற்போல மீனாட்சியின் வீடு தாண்டி சாலையிலிருந்து அரை கி.மீ. உள் தள்ளிய ஆற்றோரப் பகுதிக்கு ஒரு காலை வேளையில் இரண்டு கம்பெனி வேன்களும் ஒரு ஜீப்பும் வந்து நின்றன.

நிறையப் பேர் இறங்கி, நாலு திசையிலும் நடந்து சுற்றிப் பார்த்தார்கள். மணல் வாரினால் ஆட்சேபிக்க அங்கே அதிகக் குடியிருப்புகளோ, வீடுகளோ இல்லை.

அடுத்த நாளிலிருந்தே கெமிக்கல் தொழிற்சாலைக் கட்டுமானத்திற்கு மணல் வாரும் வேலை நடக்கப் போகிறது என்பது காண்ட்ராக்ட் லாரியில் வேலை செய்த ஒரு க்ளீனர் மூலம் திருக்கூடல்வாசிகளுக்கு ஊர்ஜிதம் ஆயிற்று.

தேரடி மண்டபத்தில் அன்று மாலையே மீண்டும் ட்யூப் விளக்குகள் எரிந்தன. பொதுக் கூட்டம் இல்லை. ஊர்ப் பிரமுகர்களும் போராட்டக்காரர்களும் கலந்து கொண்ட சின்ன சிறப்புக் கூட்டம்.

கல்யாண சத்திரத்திலிருந்து இரவல் வாங்கி வந்த ஜமக்காளம் விரித்து மேடையில் அனைவரும் சப்பணம் போட்டு அமர்ந்திருந்தனர்.

சிறப்பு அழைப்பாளராக பத்ரியும் வந்திருந்தான்.

எல்லாரும் அறிந்த விஷயத்தையே சுருக்கமாகச் சொல்லிவிட்டு அனந்தாச்சாரி "என்ன செய்யப் போறோம்?" என்று கேட்டார்.

"என்ன செய்யலாம்னு உத்தரவு போடுங்கோ சர்தார்ஜி!" என்று கலையரசன் அனந்தாச்சாரியின் தலைமைப் பொறுப்பை நினைவூட்டினான்.

"மயிலே மயிலேன்னா எறகு போடப் போறதில்லே இவனுங்க! ராவோட ராவா இவனுங்க நட்டிருக்கிற கல் கம்பங்களை ஆளுங்களை விட்டுப் புடுங்கி விட்டுட்டாச் சரி. வழிக்கு வருவாங்க" என்றான் மோஹன்ராஜின் தீவிரத் தோழன் ஒருவன்.

"ஏய் குருமட்டு! அப்பறம் பட்டாளம் வந்து நிக்கும்... யோசனை சொல்றான் பாரேன்!" என்று கலையரசன் அவனைக் கண்டித்தார்.

"நான் ஒரு வார்த்தை பேசலாமா?" என்று பத்ரி அனுமதி வேண்டினான்.

"தாராளமாச் சொல்லுங்க."

"நான் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கத் தயார். தொழிற்சாலை கட்டப் போற இடத்திலே... மக்கள் விழிப்புணர்வு வருமா?"

நர்மதா உட்பட அனைவரும் அவன் குரலில் தொனித்த உறுதியில் மௌனமாயினர்.

(அடுத்த இதழில் முடியும்)




# தீபாவளிப் பரிசு
# ஸ்ரீராம் டிரஸ்ட் வழங்கும்



# மகத்தான முதலீட்டுத் திட்டம்!

## ரூ.10,000 முதலீடு செய்யுங்கள்.
## 5 ஆண்டுகளில் ரூ.20,000 (இரு மடங்கு)
## பெற்றுக் கொள்ளுங்கள்.

**அத்துடன் 4 இலக்கியப் பொக்கிஷங்களையும் அன்பளிப்பாகப் பெறுங்கள்**

21.10.97க்குள் டெபாசிட் தொகை அனுப்புபவர்களுக்கு மட்டுமே 'அமுதசுரபி' 'கல்கி' – 1997 ஆம் ஆண்டின் தீபாவளி மலர்கள் அனுப்பப்படும். பிறகு வரும் டெபாசிட்களுக்கு 5 ஆண்டுகளுக்குத் தொடர்ந்து இதழ்களும் 1998லிருந்து 5 ஆண்டுகளுக்குத் தீபாவளி மலர்களும் கிடைக்கும்.

1. 'கல்கி' வார இதழ் 5 ஆண்டுகளுக்கு (260 வாரங்களுக்கு) உங்கள் இல்லம் தேடி வரும்.
2. 'கல்கி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்கு பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.
3. பொன்விழாக் காணும் 'அமுதசுரபி' இலக்கிய மாத இதழ் 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி வரும்.
4. 'அமுதசுரபி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.

ரூ. 10,000 (ரூ. பத்தாயிரம்) 'ஸ்ரீராம் டிரஸ்ட்' பெயருக்கு செக் / டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி:

---

'ஸ்ரீராம் டிரஸ்ட்', ஏ–7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு,
சென்னை – 600 102. தொலைபேசி எண்: 628 68 96 628 78 79

1. முழுப்பெயர்: திரு / திருமதி / செல்வி............................................................
   முகவரி:..............................................................................................
..............................................................................................................
..............................................................................................................
2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர்:
   முழுப்பெயர்:.......................................................................................
3. வாரிசுதாரர்:........................................................................................
4. கல்கி , அமுதசுரபி இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி:..................................
..............................................................................................................
..............................................................................................................

CHEQUE / D.D.No. DT. ON

இடம் ............................................ அன்புள்ள

தேதி ............................................ முதலீட்டாளர் கையொப்பம்

# அஞ்சு பேர் ஆட்டோ!

சென்னையில் அஞ்சு பேர் ஆட்டோ வரப்போவதாகச் செய்தி. ஆட்டோ வருகிறதோ இல்லையோ, ஜோக் வந்து விட்டது!

"மூணு சீட்டு ரசிகர்கள் சார்பிலே முதல்வருக்கு ஒரு விழா எடுக்கணும்பா!"





"அஞ்சு பேர்னா அஞ்சு பேர்தான். ஸ்டாண்டிங் எல்லாம் அனுமதிக்க முடியாது. சொல்லிப்புட்டேன்."

"என்னங்க இத்தனை வருஷங்களுக்கு அப்புறம் இப்போதான் நமக்கு ஒரே ஆட்டோவிலே செல்லும் பாக்கியம் கிடைச்சிருக்கு!"



"அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆட்டோவை விட ஒரு பாஸஞ்சர் அதிகம். அதுதான் நம்ம கணக்கு."



குல்லூ

"ஐந்து பெரியவங்க ஏறலாம். குழந்தைகள் கணக்கிலே சேராதுன்றது வாஸ்தவம்தான். அதுக்காக இப்படியா?"





# உலகின் மிகப்பெரிய சிவன் சிலை!

உலகிலேயே மிகப் பெரிய சிவன் சிலை பெங்களூரில் அமைந்துள்ளது. விமான நிலையத்துக்குப் போகும் சாலையில் மணிபால் மருத்துவமனைக்கு அருகில் அறுபத்தைந்து அடி உயரச் சிலை நிறுவப்பட்டுள்ளது.

தவக்கோலத்தில் அமர்ந்துள்ள சிவனாரின் சடை முடியிலிருந்து கங்கை பொங்கி, பின்னணியில் அழகான வெள்ளிப் பனிமலை.

சிவனாரின் எதிரில் அருமையான பொற்றாமரைக்குளம்.

இக்கோயிலை 'ஜேத்தானந்து மேத்வானி' எனும் மார்வாடி வணிகரின் நினைவாக அவரது பிள்ளைகள் உருவாக்கியுள்ளனர்.

தகவல்: பெங்களூர் ப. மூர்த்தி

'ACCIDENT' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம் © டேனியல் ஸ்டீல்



# 29

பிராடைக் காணோம். அவன் வைத்து விட்டுச் சென்ற சீட்டு மட்டும்தான் இருந்தது. மறுபடி படித்தாள் பேஜ். கால்ஃப் விளையாடப் போவதாக எழுதியிருந்தானே தவிர, எங்கே விளையாடப் போகிறான், யாருடன் விளையாடப் போகிறான் என்ற எந்தத் தகவலும் இல்லை. அவன் எழுதியிருப்பது பொய் என்று அந்தக் கணமே தெரிந்துவிட்டது பேஜுக்கு. ஸ்டிபானியிடம்தான் ஓடியிருக்கிறான் என்று ஊகித்துக் கொண்டு ஒரு பெருமூச்சுடன் அந்தச் சீட்டைக் கசக்கி 'வீசியெறிந்தாள்.

அவள் ஊகித்தது உண்மையே. இருவருடனும் மாறி மாறி வாழ பிராடினால் முடியவில்லை. முன்பெல்லாம் இரவு பூரா ஸ்டிபானியுடன் தங்கியிருந்து விட்டு, வீடு திரும்புவான். இரவு வேளைகளின் அதே அளவு அந்தரங்கத்துடன் பேஜிடமும் பழக முடிந்தது. இப்போது உண்மை வெளிப்பட்டு விட்டதால் பேஜிடம் முன்போல நெருக்கம் கொள்ள அவனுக்கு இயலவில்லை. ஏன் பேஜிடம் உண்மையைச் சொன்னோம் என்று ஓரோர் சமயம் எண்ணினாலும், இந்த 'விடுதலை' அவனுக்குத் தேவையாக இருந்தது. ஸ்டிபானியுடன் இருக்கும்போதுதான் அவனுக்கு வாழ்க்கை சந்தோஷமாக இருக்கிறது. பேஜுக்குத் துரோகம் செய்கிறோமே என்கிற உறுத்தலைக் காட்டிலும் ஸ்டிபானிக்குத் துரோகம் செய்யக் கூடாது என்ற எண்ணம்தான் அவன் உள்ளத்தில் மேலோங்கி

மூலம்: டேனியல் ஸ்டீல்

யிருந்தது.

அது மட்டுமல்ல. கொஞ்ச நாளாக ஸ்டீபானி அவனை நெருக்கிக் கொண்டிருந்தாள். ஒரு வழியாகத் தன்னுடனேயே வந்து இருந்து விடும்படியும், இல்லா விட்டால் அவனை மறந்து துறந்து போய் விடுவதாயும் பயமுறுத்தியிருந்தாள்.

ஒரு வருட காலம் பேஜை விட்டுப் பிரிந்து போய் இருந்துவிட்டு, திரும்பி வந்து, விட்ட இடத்திலிருந்து வாழ்க்கையைத் தொடங்கினால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்று எண்ணிக் கொண்டான் பிராட். ஆனால் வாழ்க்கை என்பது ஃப்ரிஜ்ஜில் வைக்கிற பொருள் அல்ல - வேண்டும்போது வைத்துவிட்டு வேண்டும்போது எடுத்துக் கொள் வதற்கு. அந்த யதார்த்தம் பிராடுக்குப் புரிந்திருந்தது...

சீட்டை வீசியெறிந்தபின் ஒரு நிமிடம் பேஜ் யோசனையுடன் நின்றிருந்த சமயம் தாரென்ஸன் போனில் கூப்பிட்டான்.

"ஆண்டியை இங்கே அழைத்து வாயேன். அவனுக்குக் கை சரியாக இல்லா விட்டாலும் பிஜானுடன் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருப்பான். நான் ஆஸ்பத்திரிக்குப் போய் க்ளோவுடன் கொஞ்ச நேரம் இருக்கலாம் என்று பார்க்கிறேன். நீயும் கூட ஆஸ்பத்திரிக்குத்தானே வருவாய்?" என்றான்.

"ஆண்டியும் பிஜானும் வீட்டில் தனியாக இருப்பார்களா?"

"ஒரு வேலைக்காரி வந்திருக்கிறாள். இரண்டு பேரையும் கவனித்துக் கொள் வாள்," என்று தாரென்ஸன் கூறவே, ஆண்டியை அழைத்துக் கொண்டு அங்கே சென்றாள். ஆண்டிக்கு ஏகப்பட்ட சந்தோஷம். அவனுக்கும் பிஜானுக்கும் நெருக்கமான சினேகம் ஏற்பட்டிருந்தது.

காரில் ஆஸ்பத்திரிக்குப் போகும்போது, "வீட்டில் நிலைமை

# 11:29

## தமிழில்: ரா.கி. ரங்கராஜன்

எப்படி இருக்கிறது?" என்று தாரென்ஸனை கேட்டாள்.

பேஜ் சோகமாகப் புன்னகை செய்து, "நானும் பிராடும் அனேக மாய்க் கடைசிக் கட்டத்தில் இருக்கிறோம் என்று நினைக்கிறேன். ஆனால் அவசரப்பட்டு முட்டாள்தனமாக ஏதும் செய்து விட்டுப் பின்னால் வருத்தப்படக் கூடாதென்று பார்க்கிறேன்," என்றாள்.

"நானும் உன்னை அவசரப்படுத்தவில்லை," என்றான் அவன்.

ஆலிஸனைப் பார்க்கச் சென்ற போது அவள் நிலைமையில் எந்த முன்

னேற்றமும் ஏற்பட்டிருப்பதாகத் தெரிய வில்லை. டாக்டர் வந்து ஒரு மணி நேரம் மஸாஜ் செய்துவிட்டுச் சென்றதாக நர்ஸ் தெரிவித்தாள். சிறிது நேரம் மகளின் அருகில் உட்கார்ந்திருந்த பின்னர் வெளியே வந்தாள்.

தாரென்ஸனும் தன் மகளைப் பார்த்து விட்டு வந்திருந்தான்.

"க்ளோ அபாயக் கட்டத்தை முழுக்கத் தாண்டி விட்டாள். இன்னும் இரண்டொரு அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டியிருக்கும். அதன் பிறகு நடப்பதற்குப் பயிற்சி செய்தால் சரியாகிவிடும்," என்றவன், "ஆலிஸன் எப்படி இருக்கிறாள்?" என்று கேட்டான்.

"ஒன்றும் புரியவில்லை," என்றாள் பேஜ், துயரம் தொண்டையை அடைக்க.

"பொறுமையாக இரு. உன்னால் முடிந்ததை நீ செய்து கொண்டிருக்கிறாய். டாக்டர்களால் முடிந்ததை டாக்டர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். சில வாரங்களுக்கு ஒரு முன்னேற்றமும் இல்லாத மாதிரி இருக்கும். திடீரென்று ஒருநாள் விழித்துக் கொள்வாள். நினைவு திரும்பி விடும். பிறகு எல்லாம் ஓ.கே.தான்," என்று அவளுக்கு உற்சாகமூட்ட முயன்றான் அவன்.

ஆனால் பேஜின் துயரம் நீங்கவில்லை. "இப்படியே ஆறு வார காலத்துக்கு மேல் இருந்தால் பிறகு நிரந்தரமான கோமாதான் என்று சொல்கிறார்கள்," என்றாள்.

"அதெல்லாம் சும்மா. ஆறு வாரத்துக்குப் பிறகு கூடக் குணமாவது உண்டு. சின்ன வயது. குழந்தைகளுக்குச் சீக்கிரமே சரியாகிவிடும்."

ஆனால் பேஜின் கண்கள் குளமாகவே இருந்தன. என்னென்னவோ நடந்து கொண்டிருக்கிறது. என்னென்னவோ பொறுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. என்னென்னவோ சமாளிக்க வேண்டியிருக்கிறது. இனி எதையும் தாங்கிக் கொள்ள முடியாது என்று கூடச் சில சமயம் தோன்றுகிறது.

ஆனால் ஒன்று மட்டும் புரிந்தது. தாரென்ஸன் மட்டும் இல்லையென்றால் என்றைக்கோ பைத்தியம் பிடித்திருக்கும். பிராட் எந்தச் சமயம் எங்கே இருக்கிறான் என்பது கடவுளுக்குத்தான் வெளிச்சம். என்ன செய்து கொண்டிருக்கிறான் என்பதும் கடவுளுக்கே வெளிச்சம். நடுநடுவே ஆலிஸனைப் பார்க்க வருகிறான். ஆனால் சில நிமிடங்களுக்கு மேல் படுக்கையருகே நிற்பதில்லை. மாறுதல் இல்லாமல் ஒரே மாதிரியாக ஆலிஸன் கிடக்கும் காட்சி – கருவிகள், மானிட்டர்கள் – எந்த நிமிஷத்திலும் அவள் இறந்து விடுவாள் என்ற திகில் –

இதையெல்லாம் எதிர்நோக்க அவனிடம் திராணி இல்லை.

"எல்லாம் போக, என் அம்மாவும் அக்காவும் வேறே நியூயார்க்கிலிருந்து வரப் போகிறார்கள். எவ்வளவோ தடுத்துப் பார்த்தேன். முடியவில்லை," என்றாள் பேஜ்.

தாரென்ஸன் மெல்லச் சிரித்து, "அவர்கள் மீது உனக்கு ஏதோ வெறுப்பு என்று தோன்றுகிறது. ஏன்?" என்றான்.

"உங்களுக்குத் தெரியாது. என் இளம் பிராயம் ஒரு நரகம். சொன்னால் நம்ப மாட்டீர்கள்," என்றாள் அவள். அதற்கு மேல் விவரிக்க அவள் இஷ்டப்படவில்லை என்பது தெரிந்ததால் அவனும் துருவவில்லை.

"என் அப்பா இறந்த பிறகு ஒரே ஒருமுறை அம்மாவும் அக்காவும் இங்கே வந்தார்கள். அதுவே எனக்குப் போதும் போதும் என்றாகி விட்டது," என்று அவள் சொல்லிக் கொண்டிருந்தபோது, க்ளோவின் சிநேகிதன் ஜேமி வந்தான்.

"க்ளோவைப் பார்த்தேன். ரொம்ப வலியில் இருந்தாலும் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்தாள்," என்றவன், "இரண்டு நாள் முன்பு பிலிப்பின் அப்பாவையும் அம்மாவையும் பார்த்தேன்," என்றான்.

பேஜின் நெஞ்சு வேதனையில் விண்டது. க்ளோ பிழைத்துக் கொண்டு விட்டாள். ஆலிஸனைப் பொறுத்தமட்டில் பிழைத்துக் கொள்வாள் என்ற நம்பிக்கையாவது இருக்கிறது. ஆனால் அந்தப் பையன் பிலிப்? போனவன் போனவன்தானே? அவனுடைய பெற்றோருக்கு எப்படி இருக்கும்!

"பிலிப் குடித்திருந்ததால் விபத்து நேரிட்டிருக்கும் என்று ஒரு பத்திரிகை செய்தி வெளியிட்டிருந்தது. அவர்கள் மீது வழக்குத் தொடரப் போவதாக பிலிப்பின் அப்பா சொன்னார்," என்று சொல்லிவிட்டு அவர்களுடன் சேர்ந்து ஆஸ்பத்திரி கேன்ட்டீனில் சிற்றுண்டி அருந்தியபின் ஜேமி புறப்பட்டுச் சென்றான்.

---

**"என்னங்க இது பட்டாசு கடையிலே 'பொக்கே' விக்கறீங்க."**

**"அது பொக்கே இல்லீங்க. இந்த வருஷம் புதுசா வந்திருக்கிற படைப்பாளிகள் பட்டாசு!"**

**— அகில்**



அன்று இரவு பிராட் வீடு திரும்ப வில்லை.

காலை, அம்மாவை அழைத்து வருவதற்காக விமான நிலையத்துக்கு ஆண்டியுடன் புறப் பட்டுக் கொண்டிருந்தாள் பேஜ். அப் போதுதான் பிராட் வந்தான்.

"ஸாரி பேஜ்..." என்று அவன் ஆரம் பித்ததுமே கோபம் வெடித்துக் கொண்டு வந்தது அவளுக்கு.

"ஆலி இருக்கிறாளா போய் விட்டாளா என்று போன் செய்து கேட்கக் கூட உங்களால் முடியவில்லை? இல்லையா?"

"ஏன்... ஆலிஸனுக்கு... என்ன நேரிட்டது?" என்றான் கரகரத்த குரலில்.

"ஒன்றும் நேரவில்லை. ஆனால் ஏதாவது நேர்ந்திருந்தால் உங்களை எங்கே கூப்பிடுவது? நீங்கள்தான்..."

"மூடு வாயை!" என்று கூறித் தன் அறைக்குள் சென்றவன் மடேலென்று கதவைச் சாத்திக் கொண்டு விட்டான்.

ஆண்டியுடன் விமான நிலையத்துக்குப் புறப்பட்டாள் அவள். ஆண்டியின் கன்னங் களில் கண்ணீரின் சுவடு படிந்திருந்தது. அம்மா வும் அப்பாவும் இப்படிச் சண்டை போட்டுக் கொள்வதை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

"ஸாரி கண்ணா," என்று அவன் முகத்தைத் துடைத்துவிட்டாள் பேஜ். ஆனால் வழி பூரா அவன் பேசவேயில்லை.

வண்டி வண்டியான பெட்டிகளுடன் வந்து இறங்கினார்கள் அம்மாவும் அக்கா அலெக்ஸிஸும். அவைகளை வெளியே கொண்டு போய்க் காரில் வைக்கப் போர்ட்டர்களே திணறிப் போனார்கள்.

எக்கச்சக்கமான மேக்கப்பில் இருந்தாள் அலெக்ஸிஸ். எப்போதுமே இளமையாக இருப்பது ஒன்றுதான் அவளுக்கு லட்சியம். அம்மாவோ, நியூயார்க்கில் பருவ நிலை பிர மாதமாக இருப்பதைப் பற்றியும் அலெக்ஸிஸின் அபார்ட்மென்ட்டை அழகுபடுத்திக் கொண் டிருப்பதைப் பற்றியும் பேசிக் கொண் டிருந்தாள்.

"ஆலிஸன் எப்படி இருக்கிறாள்?" என்று ஒரே ஒரு தடவை கேட்டாள் அலெக்ஸிஸ். அவள் கோமாவில் கிடப்பதைப் பற்றிப் பேஜ் விவரமாகச் சொல்ல ஆரம்பித்தவுடனே, அம்மா ஆண்டியிடம் கொஞ்சுகிற மாதிரி பேச்சைத் திருப்பி விட்டாள். சந்தோஷமான விஷயங்களைப் பற்றி மட்டுமே கேட்க அவளுக்குப் பிடிக்கும்.

சின்ன வயதில் இவர்களால் அனுபவித்த நரகங்களை மறந்துவிட்டு, இவர்கள் மாறி யிருப்பார்கள் என்று ஏன்தான் எதிர்பார்க் கிறோமோ என்று பேஜ் தன்னைத் தானே நொந்து கொண்டாள்.

வீட்டில் அவர்களுக்காக பிராட் காத் திருந்தான். பேஜுக்கே அவன் செய்கை ஆச் சரியமாக இருந்தது. அவர்களுடைய பெட்டி களை உள்ளே கொண்டு போய் வைத்து, மரியாதையாகக் கொஞ்ச நேரம் பேசிக் கொண் டிருந்தான். பிறகு வெளியே போய் விட்டான்.

அம்மாவும் அக்காவும் தங்கள் பெட்டி களைப் பிரிப்பதும் மூடுவதும் சமையலறையில் இருப்பதை எடுத்துச் சாப்பிடுவதுமாக இருந்தார்கள். நேரம் ஓடிக் கொண்டிருந்தது. மணி நாலரை. அன்று பூரா ஆஸ்பத்திரிக்குப் போகவில்லையாகையால் உடனே கிளம்பத் துடித்தாள் பேஜ். ஆனால் இவர்கள் புறப் படுகிற வழியாய்த் தெரியவில்லை.

கைக் கடியாரத்தைப் பார்த்தபடி, "என்னம்மா, ஆஸ்பத்திரிக்குப் புறப்பட நேர மாகிறதே?" என்றாள் கடைசியில்.

அம்மாவும் மூத்த மகளும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

"ஒரே களைப்பாக இருக்கிறது எனக்கு. அலெக்ஸிஸுக்கு வேறே கடுமையான ஜலதோ ஷம். நாங்கள் நாளைக் காலை வருகிறோமே?" என்றாள் அம்மா.

தனியாகவே ஆஸ்பத்திரிக்குப் புறப் பட்டாள் பேஜ், நொந்து போன மனத்துடன்.

ஆலிஸனைப் பார்ப்பதற்காகத்தான் அம்மாவும் அக்காவும் வந்திருப்பதாக நினைத்தது எத்தனை முட்டாள்தனம்! நியூ யார்க்கில் அவர்களுக்குப் பொழுதுபோக வில்லை. எங்காவது ஊர் சுற்ற வேண்டும். அதற்காகத்தான் இங்கே வந்திருக்கிறார்கள். ஆஸ்பத்திரி, அதன் கோரம், நாற்றம் இதெல்லாம் அவர்களுக்குப் பிடிக்காது.

"கடத்தல் வீரப்பன் கேஸட் அனுப்பியிருக் கான்!"

"என்னன்னு?"

"கண்டிஷன்படியே கடத்தின ஆறு பேர்லே எல்லோரையும் அவன் விடுதலை பண்ணத் தயாராம். ஆனா, ஒரே ஒரு ஆள் மட்டும் மாப் பிள்ளைக்கு பயந்துட்டு தீபாவளிக்கப்புறம்தான் ரிலீஸ் ஆவேன்னு அடம் பிடிக்கிறாராம்!"

— அகில்





**“தீபாவளின்னதும் உங்க நினைவுக்கு வர்றது?”**

**“நரகாசுரனும், என் மாப்பிள்ளையும்!?”**





“படம் ஃபெயில் யூராகுங்கறது அந்த தயாரிப்பாளருக்கு முன்னாடியே தெரியும் போலிருக்கு.”

“எப்படி சொல்றே?”

“படத்துக்குத் தலைப்பை ‘புஸ் வாணம்’னு வெச்சிருக்காரே!”

– ஆரெஸ் பிரபு

சே! என்ன மனிதர்கள்! சிரிப்பதா அழுவதா என்று தெரியவில்லை. ஆலிஸன் கோமாவில் கிடக்கிறாள். பிராட் கள்ளக் காதலியுடன் சுற்றுகிறான். ஆண்டி கையை முறித்துக் கொண்டிருக்கிறான். அம்மாவும் அக்காவும் வந்து கொட்டமடிக்கிறார்கள்.

ஆலிஸனின் அருகே ஒரு மணி நேரம் உட்கார்ந்திருந்தாள். வழக்கம்போல் பேசினாள்.

“நியூயார்க்கிலிருந்து உன் பாட்டி வந்திருக்கிறாள், ஆலி. கூடவே உன் பெரியம்மா அலெக்ஸிஸும் வந்திருக்கிறாள். நாளைக்கு வந்து உன்னைப் பார்ப்பதாகச் சொன்னார்கள்,” என்று தன் பாட்டுக்குப் பேசிக் கொண்டே போனாள். ஆண்டியின் பள்ளிக்கூட அனுபவங்கள், அவன் சொன்ன விஷயங்கள், இன்னும் தனக்குத் தோன்றியதையெல்லாம் ஆலிஸனிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். ஒன்றே ஒன்றை மட்டும் சொல்லவில்லை – கணவன் செய்யும் துரோகத்தையும், குடும்பம் இரண்டாகப் பிளந்து கொண்டிருப்பதையும் பற்றி.

மகளின் நெற்றியில் மென்மையாக முத்தமிட்டுவிட்டு, அவளையே பார்த்தபடி ஒரு நிமிடம் நின்றிருந்து விட்டு விடு திரும்பிய போது, அம்மாவும் அலெக்ஸிஸும் சளசளவென்று அரட்டை அடித்துக் கொண்டிருந்தார்கள்.

ஆலிஸன் எப்படி இருக்கிறாள் என்று இருவரும் ஒரு வார்த்தை கூடக் கேட்கவில்லை. ஆண்டிதான், “ஆலி எப்படிம்மா இருக்கிறாள்?” என்று கேட்டான்.

அதற்குள் பேஜின் அம்மா குறுக்கிட்டு, “எல்லாம் சரியாகி விடும்டா. கவலைப்படாதே. நீ போய்த் தூங்கு,” என்று கூறி அவனை அனுப்பி விட்டாள்.

விருந்தாளிகளுக்கான அறை இரட்டைக் கட்டிலுடன் வசதியாக இருந்தது. அங்கேதான் அம்மாவும் அக்காவும் படுத்துக் கொள்வார்கள் என்று பேஜ் எதிர்பார்த்தாள்.

ஆனால் அலெக்ஸிஸ், “ஆலிஸனின் அறை சும்மாதானே இருக்கிறது? நான் அங்கே படுத்துக் கொள்கிறேன்,” என்றாள்.

கேட்பதற்கே கஷ்டமாயிருந்தது பேஜுக்கு.

க்ளோவுடன் சாப்பிடப் போவதாகச் சொல்லிவிட்டு ஆலிஸன் சென்றாளே, அந்தப் பயங்கர ராத்திரிக்குப் பிறகு, அந்த *11-29*-க்குப் பிறகு, அவளுடைய அறையில் ஒரு துரும்பைக் கூடத் தொடாமல் வைத்திருந்தாள் பேஜ். அந்த இடத்தைப் புனிதமான கோவிலாக நினைத்திருந்தாள்.

ஆலிஸனின் படுக்கையில் வேறொருவர் படுப்பதா!

ஆனால் அவளால் மறுத்துப் பேச முடியவில்லை. அலெக்ஸிஸ் அங்கே படுத்துக் கொள்ளப் போய்விட்டாள்.

பேஜ் தன் படுக்கையறைக்குத் திரும்பினாள். ஆனால் தூங்க முடியவில்லை. ஆலிஸனின் அறையிலிருந்து கேட்கும் ஒவ் வொரு சின்ன அசைவும், அலெக்ஸிஸ் புரளும்போது ஏற்படும் ஒவ்வொரு ஓசையும் அவள் இதயத்தின் மீது யாரோ ஓடுகிற மாதிரி தட தடத்தது. வேதனை தாளாதவளாக மௌனமாய்க் கண்ணீர் பெருக்கினாள். கடைசியில் அந்த சத்தங்களைக் கேட்கச் சகிக்காமல் தன் அறையின் கதவைச் சாத்திக் கொண்டாள்.

வெளியே போயிருந்த பிராட் நள்ளிரவுக்கு மேல் திரும்பினான். அப்போதும் பேஜ் தூங்கவில்லை. விழித்துக் கொண்டுதான் இருந்தாள்.

(தொடரும்)

மேஷ ராசிக்காரரான நடிகர் ரகுவரனுக்கு இந்த வாரம் காம்ப்ளான் பாய் வளர்ச்சி! புண்ணிய காரியங்கள் சிலது செய்யப் போறாரு. வீட்டுக்கு நிறைய கெஸ்ட் வரப்போறாங்க. அது சரி, தீபாவளிக்கு என்ன ஸ்பெஷல் ஐட்டம் பண்ணப் போறீங்க ரோகிணி?



### மேஷம் :

*(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

உற்சாகத்தில் துள்ளிக்குதித்தான்னு இந்த.. கதைங்களெல்லாம் எழுதுவாங்களே, அந்த மாதிரி டைம் இது. சும்மா சல்லுனு லைஃப்ல உயரப் போறீங்க. தொழில் துறைல இருக்கறவங்களுக்கு காம்ப்ளான் பாய் வளர்ச்சி நிச்சயம். போற வழிக்குப் புண்ணியம் தேடிக்கறாப்பல சில உத்தமமான காரிங்கள் செய்ய இந்த வாரம் மனசு நினைக்கும். சொந்தக்காரங்க நிறையப் பேர் உங்க வீட்டுல டேரா போட வருவாங்க. அதனால கொஞ்சம் கூடுதல் செலவு இருக்கும். வாரக் கடைசியில கொஞ்சம் உணர்ச்சி வசப்படக் கூடிய சந்தர்ப்பங்கள் வரும். கோபத்தை விழுங்கிடுங்க. வார்த்தை தடிச்சா வம்பு!

### ரிஷபம் :

*(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

வீட்டுல சந்தோஷத்துக்குக் குறைவு இருக்காதுங்க. துட்டு கூட பாக்கெட்டுல கொஞ்சம் நிறைஞ்சே இருக்கும். கலைத் துறையில இருக்கறவங்களுக்கு கலக்கலான வாரம். புகழ் மழைன்னுவாங்களே, அது கொட்டப் போவுது. சிலருக்கு தொழில் ரீதில கொஞ்சம் சேஞ்ச் வரலாம். அது பதவி உயர்வாகவும் இருக்கலாம். கல்யாணம் ஆவாதவங்களுக்கு டும்டும் சான்ஸ்.

### மிதுனம் :

*(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

இந்த வாரம் எங்கனா வெளியூர் போக வேண்டி வரலாம். கொடுக்கல் வாங்கல்ல கொஞ்சம் ஜாக்கிரதையா இருங்க. உங்களை கவுக்கறதுக்கு சில பேர் ரெடியா இருக்காங்க. வீட்டுல அம்மாவுக்கு கொஞ்சம் உடம்பு படுத்தலாம். பார்த்துக்கங்க. இதனால மட்டுமில்ல; பொதுவாவே இந்த வாரம் கொஞ்சம் பணத் தட்டுப்பாடு இருக்கும்.

### கடகம் :

*(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

நீங்க ஆச்சர்யப்படறாப்பல இந்த வாரம் சில காரியங்கள் உங்களுக்கு சாதகமா நடக்கப் போவுது. குறிப்பா அரசியல்வாதிகளுக்கு கையில கொஞ்சம் துட்டு தாராளமா புழங்கும். அதனால உல்லாசமா இருக்கத்தோணும். வயசானவங்களுக்கு ஏதாச்சும் கோவில், குளம்னு சுத்தற யோகம் வரும். சட்டம், ராணுவம், போலீஸ் துறையிலிருக்கறவங்களுக்கு நல்ல டைம். வீடு, நிலம், ஏதாச்சும் வாங்கற ஐடியால இருக்கறவங்க, இந்த வாரம் சீரியஸா முயற்சி பண்ணா, ஓர்க் அவுட் ஆயிடும்.

### சிம்மம் :

*(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

வீட்டுல குட்டிகுட்டியா சில பிரச்னைங்க வரலாம். செலவு கட்டுக்குள்ள இருக்காது. எதிலேயும் நிதானம் கடைப்பிடிச்சீங்கன்னா ஓரளவுக்கு இழப்பைத் தவிர்க்கலாம். கூடப் பொறந்தவங்களோட




டைாய் வரலாம். தேவையில்லாம ஊர் சுத்தாதீங்க. லாட்டரி, ஷேர் பக்கம் போகாதீங்க.

### கன்னி :

*(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

வாரத் தொடக்கத்துல பிரமாதமா சொல்றாப்பல நல்லது எதுவும் நடக்காட்டாலும், சனிக்கிழமைக்கு அப்புறம் சில அதிர்ஷ்டங்கள் வரலாம். ரொம்ப நாளா தள்ளிட்டே போயிருக்கிற சில காரியங்கள் இப்ப ஓர்க்அவுட்டாயிடும். வெளிநாட்டுத் தொடர்பு உள்ளவங்களுக்கு அந்த சைடுலேயிருந்து லாபகரமா ஏதனா நடக்கும். பெண்களுக்கு இது ஜாலியான வாரம். சசிகலா அளவுக்கு இல்லாட்டாலும் அவங்கவங்க ரேஞ்சுக்கு ஏத்தாப்பல நகை வாங்குவீங்க. சிலருக்கு உல்லாசப் பயணங்கள் உண்டு.

### துலாம் :

*(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

நேத்து வரைக்கும் இருந்து வந்த எதிர்ப்புகளும்

# நடக்குமென்பார் நடக்கும்!

## அக்டோபர் 22 முதல் 28 வரை

தோல்விகளும் காணாமப் போற டைம் இது. போதுமான அளவுக்கு வாய்ப்புகளும், வசதிகளும் தானாவே வந்து சேரும். ஆனா அரசியல்ல உள்ள வங்களுக்கு மட்டும் எதிர்பாராத சில சங்கடங்கள் வரும். அதுவும் வாரக் கடைசில சரியாப் போயி டும். நல்லதும் கெட்டதும் கலந்தே வரும் இந்த வாரத்துல, டெய்லி புள்ளையார் கோயிலுக்குப் போய்ட்டு வந்தீங்கன்னா நல்லதோட பர்சன் டேஜ் கொஞ்சம் ஜாஸ்தியா இருக்கும்.

### விருச்சிகம் :

*(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

ஐக்கிய முன்னணி வழிகாட்டும் குழு கூட்டத் தோட முடிவுகள் மாதிரி இந்த வாரம் உங்களுக்கு பல முக்கியமான முடிவுகள் தள்ளித் தள்ளிப் போகும். அதனால எப்பவும் ஒரு சலிப்பு இருந் துட்டே இருக்கும். துட்டு கிருஷ்ணா வாட்டர் மாதிரி கொஞ்சமாத்தான் வரும். பெட்ரோல் மாதிரி எக்கச்சக்கமா செலவாகும். பெட்ரோலுன் னதும் ஞாபகத்துக்கு வருது. இந்த வாரம் டூ வீலர் வச்சிருக்கறவங்க கொஞ்சம் ஜாக்கிரதையா இருக் கணும். லாரிக்காரங்களை நம்ப முடியாது.




### தனுசு :

*(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

உங்களுக்கு என்னங்க கவலை? இப் போதைக்கு வீட்டுல நீங்க வச்சதுதான் சட்டம். பணப் பிரச்னை இருக்காது. உத்யோகஸ்தர் களுக்கு ஆபீஸ்ல நல்ல பேர். சில பேருக்கு பதவி உயர்வு சான்ஸ் கூட இருக்குது. அரசியல்வாதிங் களுக்கு டக்கரான டைம். மக்கள் மத்தியில் நல்ல செல்வாக்கு கூடும். பொண்ணுங்களுக்கு அவங்க வங்க வீட்டுக்காரங்களால குறிப்பிடும்படியான சில விசேஷங்கள் நடக்கலாம். அது புதுசா ஒரு நகையாவோ, குழந்தையாகவோ இருக்கலாம். பங்கு மார்க்கெட்டுல பணம் போட்டவங்க இப்ப ஓரளவு லாபம் எதிர்பார்க்கலாம்.

### மகரம் :

*(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்க திறமை வெளிப்படுற நேரம் இது. எந்தக் காரியத்திலயும் வெற்றி நிச்சயம். தவிர கூடி இருக் கறவங்க உதவி வேணுமா, வேணுமான்னு கேட் டுக்கேட்டு செய்வாங்க. எஸ்சாய்! மூத்த சகோதரர் மூலமா இந்த வாரம் கட்டாயமா ஏதாவது லாப கரமான விஷயம் நடக்கும். ஆனால் வாக்குவாதம் பண்ணுற உங்க குணத்தினாலே அப்பப்ப கொஞ் சம் மனக் கஷ்டம் உண்டாகலாம். சிலருக்கு வெளியூர், வெளிநாடு போற சான்ஸ் இருக்குது. ரொம்பப் பெரிய அமௌண்டா எதிலேயும் இப்ப முதலீடு பண்ணாதீங்க. பெண்களுக்கு இது சுமாரான வாரம்தான்.

### கும்பம் :

*(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

இத்தனை நாளா இருந்து வந்த பிரச்னைகள் கொஞ்சம் கொஞ்சமா மறைய ஆரம்பிச்சுடும். நேத்து வரைக்கும் உங்களை பூச்சி காட்டிட்டிருந்த எதிரிங்க இப்ப காணாமப் போயிடுவாங்க. வீட்டுல சில சங்கடங்கள் இருக்கும்னாலும் சுலபமா சமாளிக்க முடியும். கூடப் பொறந் தவங்க அடிக்கடி உங்க வீட்டுக்கு வரு வாங்க. ஆனா அதிகமா அவங்க பக்கம் சாயாதீங்க. உங்களோடைய சந்தோஷம் உங்க குடும்பத்துல இருக்கறவங்களால தான் கை கூடப் போவுது. வாரக் கடைசில தேக நலன் கொஞ்சம் பாதிக்கப்படலாம். பார்த்துக்கங்க.

### மீனம் :

*(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

அதிர்ஷ்ட தேவதையின் அடுத்த வீட்டுக்காரரா இப்ப நீங்க இருக்கீங்க. அத னால தோல்வி பயம் உங்களுக்கு வேணாம். எல்லாத்துலயும் வெற்றி, பர்ஸ் நிறைய பணம், மனசு நிறைய மகிழ்ச்சி. அப்புறம் என்ன! தூள் பண்ணுங்க! இந்த ராசிக்காரங்க சில பேருக்கு கல்யாணப் பேச்சு வார்த்தை நடந்துட்டு இருந்தால் இந்த வாரம் பட்னு சிக்கிடும். எக்ஸ்போர்ட் பிஸினஸ் பண்றவங்களுக்கு லாபம் கூடும். எல் லாமே ப்ளான்படி நடக்கும்னா லும் கொஞ்சம் நிதானமா செயல்பட வேண்டியது முக்கியம்.

# நீங்கள் கேட்டவை

● ஆரூர் அரசு, பவித்திரமாணிக்கம்.

? போட்டியின்றி கலபமாகக் கிடைக்கவிருந்த எம்.பி. பதவியை வேண்டாமென்று உதறிய மூப்பனார் பற்றி...?

! 'நான் எம்.பியாக இருந்து எதையும் சாதித்து விடவில்லை' என்று அவர் வெளிப்படையாகப் பேசியதைப் பாராட்டலாம். ஒருவேளை, கட்சியைக் கட்டிக் காப்பதற்கே நேரம் போதவில்லை என்பதால் இந்த முடிவு எடுக்கப்பட்டிருக்கலாம். 'அப்படிப்பட்டவர் பிரதமர் பதவிக்கு எப்படிப் பெயர் கொடுத்தார்?' என்று கேட்காதீர்கள்... பிரதமர் பதவியில் அமர்த்தப்பட்டிருந்தால், ஒரு வேளை கட்சித் தலைமைப் பதவியை வேறு தகுதியான நபரிடம் அவர் ஒப்படைத்திருக்கக் கூடும் இல்லையா?



• 'கொள்கைப் பற்று...!'

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? 'ஜெ. காலத்தில் ஏழைகளுக்கு ஏதேனும் பிரச்னை வந்ததா?' என்று காளிமுத்து கேட்கிறாரே?

! ஏழை, நடுத்தர வர்க்கம், பணக்காரர் - எல்லா பிரிவினருக்கும் சேர்ந்து ஒரே பிரச்னைதான் இருந்தது. 'ஜெ முதல்வராக இருந்து தமிழகத்தை ஆள்கிறார்' என்கிற பிரச்னை.



• கவனத்தோடு...



• சால்வை ஜாக்கிரதை!

● பிரபாலிங்கேஷ், மேலகிருஷ்ணன்புதூர்.

? 'இப்போதெல்லாம் எனக்குச் சிறுகதை எழுத அறுபது - எழுபது பக்கங்கள் தேவைப்படுகின்றன என்று ஒரு பிரபல எழுத்தாளர் சமீபத்தில் கூறியிருக்கிறாரே?

! அது 'சிறு'கதையாக இல்லாது 'அறு'கதையாக மாறிவிடாமலிருந்தால் சரி!



• அம்பலம்!

● ஜி. செல்வராஜன், ரிஷிவந்தியம்.

? சரித்திர புருஷர்களின் கதை வந்த இதழில், காட்டில் பதுங்கிய கள்வனின் கதை... - இது நியாயமா?

! பதுங்கிய கள்வனை வழிக்குக் கொண்டு வந்தவரின் கதை அது... வீரப்பனை சமுதாயமும் அரசியலும் சேர்ந்து எப்படி வளர விட்டன என்கிற கதை..!

● ஜி. ஜெயராமன், கூத்தனூர்.

? பஸ் கட்டணமா? ரயில் கட்டணமா? எது வதைக்கிறது?

! பஸ் கட்டணம் - நேரடித் தாக்குதல்; ரயில் கட்டணம் - மறைமுக அணுகுண்டு!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம் - 1.

? காஞ்சிபுரத்தில், உலக உரைவிடநாள் விழா அழைப்பிதழில், முதல்வர் சிவப்பு சால்வை அணிந்திருக்கும் படம் அச்சிடப்பட்டு விட்டதால் அதைக் கிழித்துப் போடும்படியாகியிருக்கிறதே...?

! முதல்வர் இப்போது மஞ்சள் சால்வை அணிவதால் சிவப்பு சால்வைப் படத்தைப் பார்த்துக் கோபித்துக் கொள்வாரோ என்கிற பயத்தில் அப்படிச் செய்திருக்கிறார்கள்... முதல்வர் இது போன்ற மூட நம்பிக்கைகளுக்குட்பட்டவர் அல்ல என்கிற முழு நம்பிக்கை, சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு இருந்திருந்தால், இந்த நிகழ்ச்சியே நடந்திருக்காது.

● ஆர். ராமசாமி, திருவண்ணாமலை.

? புற்றீசல் போல் பத்திரிகைகள் பெருகி வருகையில், ஒரு பத்திரிகையின் வெற்றி தோல்விகளுக்கு ஆசிரியர் குழு, படிப்பவர், பதிப்பாளர் என எல்லோருக்கும் சமபங்கு உண்டு என்கிறீர்களா?

! இலவசப் பொருள்களை வாரி வாரி வழங்குபவர்களைச் சேர்க்காமல் விட்டு விட்டீர்களே... - இது நியாயமா?

● மேலை பழ. நாகப்பன், சென்னை - 41

? ஆயுத பூஜையை நன்றாகக் கொண்டாடினீரா?

! உம்... ஆயுதம், கலை வளர்ச்சிக்கும் உற்பத்திப் பெருக்கத்துக்கும் பயன்பட...

## 'மருதநாயகம்' தியாகியா? துரோகியா?

வேண்டும்; கலவரங்களுக்கு அல்ல.. என்று பிரார்த்தித்துக் கொண்டேன்.

● ஜி. அர்ஜுனன், திருப்பூர்.

? 'இளையராஜாவும் நானும் பிரியக் காரணம் கமல்' என்று கங்கை அமரன் குற்றம் சாட்டியிருக்கிறாரே?

! அம்பலத்துக்கு வந்திருக்கும் அந்தரங்கம்! கமல் என்ன சொல்கிறார் என்று பார்க்க வேண்டும்..

● ஓவியக் கவி, மேட்டுத்திருக்காம்புலியூர்.

? 'தென் மாவட்டக் கலவரங்களுக்கு கருணாநிதிதான் காரணம் என்று ஆய்வு முடிவுகள் வந்து கொண்டிருக்கின்றன.. இதை மறைக்கத்தான் கருணாநிதி என் பேரில் ஊழல் புகார்களை அடுக்குகிறார்...' என்று ஜெ புகார் சொல்லியுள்ளாரே?

! ஜெ மீது ஊழல் புகார்களை அடுக்குவது முதல்வர் அல்ல; சட்டம். அந்தக் குற்றச்சாட்டுகள் மீது வழக்குகள் நடத்த போதிய சாட்சியம் இருக்கிறது என்று முடிவு செய்திருப்பது நீதிபதிகள் தாமே தவிர கருணாநிதி அல்ல... தென் மாவட்டக் கலவரங்களில் பாதிக்கப்பட்டவர்களுக்கு நஷ்டஈடு அதிகரிக்கப்படலாம் என்றும் கலவரங்கள் நிகழாதிருக்க இன்னும் அதிக அளவில் முன்னெச்சரிக்கையாகச் செயல்பட வேண்டும் என்றும் மாநில மனித உரிமை கமிஷன் கூறியுள்ளது. 'கருணாநிதிதான் கலவரங் களுக்கு காரணம்' என்று எந்த ஆய்வும் முடிவுக்கு வரவில்லை! இக்கட்டான நிலையில் சிக்கியிருக்கும் 'ஜெ' மக்களிடம் அனுதாபம் பெற புளுகு முட்டைகளை அவிழ்த்து விடுகிறார்.



• அன்றும்...



• கணக்குப் பண்ணித்தான்....



• நேற்றும்...



• இன்றும்...

● ஆர். மார்டின், திருமானூர்.

? 'சந்திரபாபு நாயுடு செய்யும் தவறுகளைத் தட்டிக் கேட்கவே லட்சுமி பார்வதியோடு இணைந்துள்ளேன் என்று சு. சுவாமி கூறியுள்ளாரே...?

! அலுக்காமல் சலிக்காமல், தமது ஒவ்வொரு தகாத கூட்டணிக்கும் அதே நொண்டிக் காரணம் கூறும் அவருடைய 'கொள்கைப் பற்றை' மெச்சுகிறேன்.

● வனிதா, புன்னம்பாடி.

? இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்ட ஒன்பது

❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:
ப. சுகுமார்
131, சின்னக் கடைத்தெரு,
தூத்துக்குடி 1

செயற்கைக் கோள்கள் தோல்வி அடைந்துள்ளனவே.. இந்தத் தோல்விகள் நம்மை எப்படி பாதிக்கும்?

! பொருளாதார ரீதியாக பாதிக்கும். ஆனால் சமீபத்தில் அமெரிக்கா சனி கிரகத்துக்கு அனுப்பியுள்ள ராக்கெட் சுமந்து செல்லும் ப்ளுடோனியம் தவறுதலாகச் சிதறி விட்டால் விண்வெளியே பாதிப்புக்குள்ளாகிற அபாயம் இருக்கிறது என்கிறார்கள்... சர்ச்சைக்கிடையே வெற்றிகரமாகச் செலுத்தப்பட்டு விட்டது.

● நா. ஷேக் உசேன், செஞ்சி.

? மருதநாயகம் தியாகியா? துரோகியா?

! எது எப்படியோ.. கலெக்‌ஷனுக்கு உதவக் கூடிய ஆசாமியாகக் கமலுக்குப் பட்டிருப்பது மட்டும் உண்மை.

● ப. சுகுமார், தூத்துக்குடி - 1 ❑

? துர்கை பூஜையை யொட்டி கல்கத்தாவில் பிளாஸ்பூர் ரயில் விபத்தை பொம்மைக் காட்சியாக அமைத்து வைத்திருந்தார்களாமே?

! அந்த துர்காதேவிதான் இத்தகைய விபத்துகளிலிருந்து காக்க வேண்டும் என்ற பிரார்த்தனையோ என்னவோ..!

● மு. கருணாநிதி, தேவராயனேரி.

? பி.பி. ஸ்ரீநிவாஸ், கே.ஜே. யேசுதாஸ், உன்னி கிருஷ்ணன்... யார் குரலில் ஈர்ப்பு சக்தி அதிகம்?

! கரும்பு, சர்க்கரை, பாகு - மூன்றில் எதற்கு சுவை அதிகம் என்று கேட்கிற மாதிரியிருக்கிறது..!

● மல்லிகை மன்னன், மதுரை.

? விடுதலைப் புலிகள் அமைப்பை பயங்கரவாதிகள் லிஸ்டில் சேர்த்தது அமெரிக்கா செய்துள்ள தவறு என்று நெற்றிக் கண்ணைத் திறந்திருக்கிறாரே நெடுமாறன்?

! கொழும்பில் நடந்த குண்டுவெடிப்பு, அமெரிக்க நடவடிக்கை நியாயம்தான் என்று மீண்டும் காட்டிவிட்டதே. நெற்றிக் கண் திறந்தாலும்..

- தராசு

# கிச்சுகிச்சு விஷயம் (கிசுகிசு அல்ல!)

கிச்சுகிச்சு மூட்டினால் என்ன வரும்?

'இதென்ன கேள்வி, சிரிப்புதான்' என்கிறீர்களா? கூடவே சில சந்தேகங்களும் வந்தன. தெளிவு செய்து கொள்ள நரம்பியல் மருத்துவர் டாக்டர் எஸ்.எஸ்.கே. ஐயரை அணுகினோம்.

''கிச்சுகிச்சு மூட்டினால் சிரிப்பு உண்டாவதேன்?''

''எந்த உணர்ச்சியுமே நரம்பு மண்டலத்தின் வெளிப்பாடுதான். சிரிப்பு, அழுகை, எரிச்சல் இப்படிப்பட்ட பலவித உணர்வுகளை உடலில் பலவித தசை இயக்கங்களை உருவாக்குவதன் மூலம் நரம்பு மண்டலம் வெளிப்படுத்துகிறது. சிரிப்பைப் பொறுத்தவரை முக்கியமாக உடலில் உண்டாகும் மாறுதல்கள் முகம் மற்றும் மூச்சுக் குழாயிலுள்ள தசைகள் விரிந்து சுருங்குவதுதான். கண்ணிலுள்ள 'பாப்பா'வும் பெரிதாகிறது. கிச்சுகிச்சு மூட்டும்போது இது போன்ற மாறுதல்கள் உண்டாக, மூளை கட்டளையிடுகிறது.''



''உடலின் சில பாகங்களில் மட்டும் ஏன் கிச்சுகிச்சு உணர்வு உண்டாகிறது? இடுப்பையோ முதுகையோ 'கிச்சுகிச்சு' மூட்டினால் ஏன் சிரிப்பு உண்டாக வேண்டும்?''

''இடுப்பு, கழுத்து, அக்குள், குதிகால் ஆகிய இடங்களில் உள்ள நரம்புகளின் எண்ணிக்கை அதிகம். தவிர அந்த நரம்புகள் அமைந்திருக்கும் விதமும் ('டெக்ஸ்சர்') இதற்குக் காரணமாக அமைந்திருக்கிறது. இப்படி அமைய என்ன காரணம் என்பது கண்டுபிடிக்கப் படவில்லை. பரிணாம வளர்ச்சியில் எங்கோ இதற்கான விடை ஒளிந்திருக்கிறது.''



• டாக்டர் எஸ்.எஸ்.கே. ஐயர்

''நரம்புகளைத் தூண்டுவதால் எந்தவித உணர்ச்சியும் உண்டாகலாமே? குறிப்பாக சிரிப்பு ஏன்?''

''உடலின் ஒவ்வொரு பாகம் ஒவ்வொரு தொடு உணர்ச்சியைப் பெற்றிருக்கும். மார்புப் பகுதி, குதிகாலின் ஒரு குறிப்பிட்ட பகுதி இவற்றை நீவினால் செக்ஸ் உணர்வு உண்டாவதைப் போல்தான் இதுவும். தவிர மனவியல் காரணமும் இதில் உண்டு. மூன்று மாதக் குழந்தைக்கு நாம் கிச்சுகிச்சு மூட்டும்போது நாம் முகத்தை உர்ரென்று வைத்துக் கொள்வதில்லை. நாமும் சிரிப்பதோடு, ''சிரி, சிரி'' என்று குழந்தைகளிடமும் கூறிக் கொண்டிருக்கிறோம். ஆக, குழந்தையைப் பொறுத்தவரை இடுப்பு, கழுத்து போன்ற பகுதிகளில் கிச்சுகிச்சு மூட்டுவது என்பது சிரிப்பு சம்பந்தப்பட்ட விஷயம் என்பது மனதில் பதிந்து விடுகிறது. தசைகளை எதெதற்கு, எப்படி இயக்க வேண்டும் என்கிறதைக் கற்றுக் கொள்ளும் முயற்சியில் கிச்சுகிச்சு மூட்டினால் சிரிப்பு வரும்!''

''சிலர் மட்டும் ஏன் கிச்சுகிச்சு மூட்டினால் சிரிக்க மாட்டேன் என்கிறார்கள்? தவிர நம்மை நாமே கிச்சுகிச்சு மூட்டிக் கொண்டால் சிரிப்பு வருவதில்லையே, ஏன்?''

''தாங்கு சக்தியும், உணர்ச்சி வெளிப்பாடும் மனிதருக்கிடையே மாறுபடுகின்றன. ஒரு ஆபாச ஜோக்கை நாலு பேருக்கு நடுவே கேட்க நேர்ந்தால் சிரிப்பு வந்தால் கூட அதை அடக்கிக் கொள்ள முயற்சிக்கிறோம். அதே சமயம் ஒரு சிறந்த நடனமணி சிரிக்க வேண்டிய கட்டத்தில் சிரிப்பு பாவத்தை அற்புதமாக வெளிப்படுத்துகிறார், மனதில் எந்தவித மகிழ்ச்சி உணர்வு இல்லாமல் போனாலும். இதெல்லாம் மனதை 'கண்டிஷனிங்' செய்து கொள்வதைப் பொறுத்தது.''

**- ஜி.எஸ்.எஸ்.**

அட்டையில் சிரிப்பவர்: **சங்கீதா**

வண்ணப்படம் : **உத்ரா**

கார்ட்டூன் : **நடனம்**




50

# "ஆண்டவா, கூட்டம் பயப்படுது ஆண்டவா!"

• கோவை அனுராதா



**சிரிக்க வைப்பதையே பிரதானத் தொழிலாகக் கொண்டுள்ள இரண்டு நாடகர்களிடம் "நீங்க நாடகம் போடப் போயி சிரிப்பா சிரிச்ச அனுபவம் ஏதாச்சும் உண்டுங்களா?" என்று கேட்டோம்:**

**கோவை அனுராதா:**

தெருக்கூத்து, நிஜ நாடகம் போன்ற நாடக வடிவத்திலிருந்து சில ஐடியாக்கள் எடுத்துக்கிட்டா என்னன்னு ரொம்பநாளா ஆசை. ஏதாவது ஒரு நாடகத்திலாவது புகுத்தி, தெறமை காட்டலாமுன்னு, 'எங்கடா சந்து விழுது'ன்னு பாத்துக்கிட்டிருந்தோம்.

கோவையில இந்து முஸ்லீம் ஒற்றுமையை வலியுறுத்தி ஒரு நாடகம் போட்டோம். மேடையில நின்னு முஸ்லீம் பாத்திரம் பேசுறமாதிரி காட்சி. அவர் பேசிக்கிட்




டிருக்கும்போது பார்வையாளர் பகுதியிலிருந்து 'ஏய் நிறுத்துன்னு' சத்தம் போட்டு எழுந்து பேசுற கேரக்டர செட்டப் செஞ்சிருந்தோம்.

முஸ்லீம் வேஷம் போட்டவர் பாதி பேசி முடிக்கல. கூட்டத்திலிருந்து இந்து கேரக்டர் ஜம்பமா எழுந்து உடம்ப உலுக்கி பேச ஆரம்பிச்சார். ரெண்டு வரி முடியல. கூட்டத்தில கத்தியிருந்தவங்க கடுப்பாகி எழுந்து, தர்ம அடி கொடுக்க ஆரம்பிச்சிட்டாங்க. தளபதி, மந்திரின்னு வேஷம் போட்டவங்களோட மேடையிலிருந்து விழுந்தடிச்சு காப்பாத்த ஓடினோம்!

மடமடன்னு விழுற அடியிலிருந்து அவர மீட்டெடுத்துப் பார்த்தா, உடம்பில பிட் நோட்டீஸ் அளவுகூடத் துணி இல்ல!

'ஐயா, நாடகத்தில அவரும் ஒரு கேரக்டருதாங்க'ன்னு சொல்லும்போது எங்க நெலைமையப் பாத்து கூட்டம் மனசுக்குள்ள சிரிக்க ஆரம்பிச்சது எங்க கண்ணுக்குத் தெரிஞ்சதே!

பேந்தப் பேந்த விழிக்கிற அவரை அணைச்சுக்கிட்டு போறதப்பாத்து பின்னால ஒருத்தர் அடக்கி அடக்கிப்பாத்திருக்கார் போல... கெக்கென்னு சிரிக்கிற குரல் வருது. தலைய குனிஞ்சுகிட்டு மடமடன்னு மேடைக்கு பின்னால ஓடி ஒளிஞ்சிட்டோம்.

**ஒய்.ஜி.மகேந்திரன்:**

**பா**ண்டிச்சேரியில 'பாவம் பரத்வாஜ்'ன்னு ஒரு நாடகம் போட்டோம். பெரும் பணக்காரன் ஒருவனுக்கு நோய் இருப்பதாகக் கதைல வச்சு, 'இருந்து என்ன பண்ணப் போறோம்'னு பணத்த ஏழை மக்களுக்கு வாரி இரைக்கிற மாதிரியான கேரக்டர்.

நாடகம் போட்ட இடமோ, கிராமப்பகுதி. அதனால, 'ஆங்கில வார்த்தைய கொஞ்சம் குறைச்சுப் பேசு'ன்னு டாக்டர் கேரக்டர் பண்ணவருக்குச் சொன்னோம். பணக்காரனை சோதிச்சுப் பார்த்து, டாக்டர் சொல்ல வேண்டிய வசனம் "ரத்தத்திலே கேன்சர்." மேடையேறின டாக்டர், "உங்க ரத்தத்திலே பிளட் கலந்திருக்கு"ன்னு மூக்கு கண்ணாடிய சுழட்டிக்கிட்டே சொன்னார்.

"பின்ன பிளட்னா என்னப்பா?"- ஜனங்க கிட்டேருந்து கமெண்ட் வந்திடுமேன்னு ஓடிப்போய், மைக்கப் பிடிச்சு தவறை ஏத்துக்கும்படியா ஆயிட்டது. டோட்டல் கதையே கொலாப்ஸ்! பரிதாபமா பாக்குது கூட்டம். எப்படியோ சமாளிச்சோம்!

**இ**ன்னொரு சம்பவமும் சொல்லலாம். பத்து பதினைஞ்சு வருசத்துக்கு முன்னாடி வெள்ளகோயில்ல ஒரு நாடகம் போட்டோம். ஒருவருக்கு சொட்டைத்தலை. அதனால விக் வச்சுத்தான் நடிப்பாரு. அன்னைக்கு அவர் சீன் வர்ற வரைக்கும் பின்னாடி நின்னு, சுவாரசியமா நடிகர்களோட பேசிக்கிட்டிருந்திருக்காரு. அவர் சீன் நெருங்கவும், அவசர அவசரமா 'விக்'கை மாத்தி வச்சுட்டு மேடைக்கு வந்திட்டார். வகிடு, பிடரி பக்கமா மேலேறுது! மூக்கொடையிறத பாத்துக்கிட்டே நிக்க முடியுமா? மேலேறி, "எல்லாருக்கும் ஆண்டவன் முன் பக்கமா முடியை வச்சி, இவருக்குப் பின்பக்கமா வச்சிட்டாரே? ஆண்டவா! கூட்டம் பயப்படுது! இவரு தலை முடியை முன்னால வையி. அப்படியா? நானே வச்சுவிடவா? சரி ஆண்டவரே"ன்னு டயலாக் பேசி, சமாளிச்சி, நானே மாத்தி வச்சேன்.

தொகுப்பு: **வேணுஜி**

படங்கள்: **தி. பாண்டியராசு**



**"எழுத்தின் மூலம் ஆயிரக்கணக்கில் பணம் வருகிறதா? பரவாயில்லையே!"**

**"நான் என் அப்பாவுக்குப் பணம் அனுப்பும்படி எழுதுவேன். அவர் உடனே அனுப்பி வைப்பார்."**

**– ஜூலி**

## கங்கா ஸ்நானம் ஆச்சா...?

## கல்கி தீபாவளி மலர் படிச்சாச்சா...?

- வீடு தேடும் படலம் - அமரர் கல்கி – சிரிக்க ஆரம்பித்தால் நிறுத்த மாட்டீர்கள்
- மலர் வளர் அன்னை – ம.செ – கரம் குவிக்க வைக்கும் அட்டைப் படம்
- ராஜஸ்தானத்து ரங்கநாதர் – யோகா, சுப்ரபாலன் – பாலைவன மாநிலத்தின் காட்சிப் பதிவுகள்
- சிரிப்புச் சந்தை – அமிர்தம் – வண்ணப்பட வியப்புகள்
- வீரத்தின் வரலாறு – மருது – சித்திரங்களில் சுபாஷ் சந்திர போஸ்
- காஞ்சி நகர் காட்சிகள் – பத்மவாசன் – கண்ணில் ஒற்றிக் கொள்ள வைக்கும் தெய்வீகப் படங்கள்
- மகான்களின் சிந்தனைகள், அயல்நாட்டு அதிசயங்கள், நவரசச் சிறுகதைகள், கருத்துக்கு விருந்தான கட்டுரைகள், பேசும் புகைப்படங்கள், குழந்தைகள் பகுதி, மங்கையர் மலர் பக்கங்கள்

– இன்னும் படிக்கத் திகட்டாத ஏராளமான விஷயங்கள்!

விலை ரூ. 50. தபாலில் பெற ரூ. 20 சேர்த்து அனுப்பவும். உங்கள் பிரதிக்கு உடனே உள்ளூர் ஏஜெண்டிடமோ, மானேஜர், கல்கி, சென்னை - 97 என்ற முகவரியிலோ தொடர்பு கொள்ளுங்கள்.



# கழுதையை 'குருஜி'ன்னு கூப்பிடலாமா?

சமீபத்தில் மதுரை நகைச்சுவை மன்றத்தின் ஆறாம் ஆண்டு விழா மதுரை மீனாட்சி மிஷன் ஆஸ்பத்திரியில் நடைபெற்றது. வி.கே. ராமசாமி சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்ட இவ்விழாவில் வெடித்துச் சிதறிய நகைச்சுவைகளில் சில :

**சாகுல் ஹமீது :**

"நான் ஒரு கூட்டத்தில் பேசும்போது 'சிங்கத்தைப் பார்த்து வீரத்தைக் கத்துக்கணும், காகத்தைப் பார்த்து ஒற்றுமையைக் கத்துக் கணும், நாயைப் பார்த்து நன்றியைக் கத்துக் கணும்..'னு பேசினேன். கூட்டத்திலிருந்து ஒருவர் 'படக்'குனு எழுந்து 'நீங்க நேரத்தைப் பார்த்து பேசக் கத்துக்கணும்' என்றார். எனவே எனது வரவேற்புரையை இத்துடன் முடித்துக் கொள்கிறேன்."

**டாக்டர் சேதுராமன் :**

"ஒரு குரு தன் மாணவனை அழைத்து, 'நீ குருஜிக்களை எல்லாம் கழுதை என்றாயாமே' என்று கண்டித்ததோடு 'இனிமே அப்படி சொல்ல மாட்டேன்னு சொல்லு' என்றார். உடனே அந்த மாணவன், 'அப்படியானால் கழுதையை குருஜி என்று அழைக்கலாமா?' என்று கேட்டான். 'அது உன் இஷ்டம்' என்றார் குரு. உடனே மாணவன் சொன்னான் : 'சரிங்க குருஜி'!"

**பேராசிரியர் நமச்சிவாயம் :**

புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களை எல்லாம் கரைச்சுக் குடிச்சிருக்கிற ஒரு டாக்டர்கிட்ட சிகிச்சைக்குப்

என்னது? நானும் ஹ்யூமர் கிளப்புல சேரணுமா? சேச்சே! எனக்குக் கடிக்கத் தெரியாது தோழா!





''அந்தப் பத்திரிகை வச்சப் போட்டியிலே எனக்கு முதல் பரிசு கிடைச்சிருக்கு. ஆனால் அதை எப்படி எடுத்து வர்றது, எடுத்து வந்தாலும் என்ன செய்றதுனு தெரியலே!''

''அப்படி என்ன கிடைச்சிருக்கு?''

''ரயில் என்ஜின்!''

— எஸ். இராஜேந்திரன்

போனேன். அந்த டாக்டர் எனக்கு ஊசி போடும்போது என் கையில ஒரு ஊசியைக் கொடுத்துட்டு ஊசி போட்டார். 'இந்த ஊசி எதுக்கு டாக்டர்?'னு கேட்டேன். அதற்கு அவர், 'நான் புறநானூற்று போர் முறைகளை அறிந்தவன். ஒரு நிராயுத பாணியைக் குத்துவது தமிழனுக்கு அழகல்ல' என்றாரே பார்க்கலாம்...!

● வறுமையில் உழன்ற மாணவன் ஒருவன் என்னிடம் வேலை கேட்டு வந்தான். நானும் அவனை தூத்துக்குடியில் ஒன்றில் சேர்த்து விட்டேன். அவன், அவனது திறமையால் படிப்படியாக முன்னேறி உயர்ந்த பதவிக்கு வந்தான். அவன் திறமையைப் பார்த்த முதலாளி, தன் மகளையே அவனுக்குத் திருமணம் செய்து வைத்தார். பணம் நிறைய வந்ததும் அவனுக்குக் குடிப்பழக்கம் வந்து விட்டது. ஒருநாள் நான் தூத்துக்குடியில் நண்பர் ஒருவரோடு சாலையில் போய்க் கொண்டிருந்தபோது அவன் மிதமிஞ்சிய போதையில் ஒரு விளக்குக் கம்பத்தைப் பிடித்து ஆடியபடியே அதனுடன் பேசிக் கொண்டிருந்தான். நான் அவனைப் பார்த்து 'என்னப்பா... எப்படியிருக்கே?!' என்று கேட்டேன். உடனே அவன் என்னைப் பார்த்து கும்பிட்டு, தள்ளாடியபடியே "ஐயா, நான் இன்னைக்கு இந்த நிலைமையில இருக்கேன்னா அதுக்கு நீங்கதான்யா காரணம்' என்றார். என்னுடன் வந்த நண்பர் என்னைப் பார்த்த பார்வை இருக்கே... அவன், தான் அந்தஸ்து அடைந்த நிலைமையைச் சொல்ல, என் நண்பரோ, "இப்படி எத்தனை இளைஞர்களை சீரழிச்ச?" என்று கேட்க... தடுமாறிப் போனேன்!

● அந்தக் காலத்திலே பெரியவங்கதான் பெண்ணையும், மாப்பிள்ளையையும் பார்த்து முடிவு பண்ணுவாங்க. பொண்ணும், மாப்பிள்ளையும் மணமேடையிலதான் பார்த்துக்கணும். என்னைய கேட்டா – அதுதான் நல்ல மெத்தட். ஏன்னா... இல்லைன்னா எனக்கெல்லாம் கல்யாணம் ஆகியிருக்குமா?''

மதுரையிலிருந்து : எஸ். ஜே. இதயா




● விஞ்ஞான முன்னேற்றம்! பிச்சையெடுக்கும். ரோபோ!

● வீட்டிற்கு ஒரு மரம் இரண்டாவது மாடியில் போன்சாய்!

— எஸ்.கே. கணேசன்

## கல்கி கன்ஸல்டன்ஸி

# குஜ்ரால் போட்ட பிள்ளையார் சுழி!

தெரிகிறது தெரிகிறது! விடி வெள்ளி தெரிகிறது...! தொழில் துறை முன்னேற்றத்துக்கான ஆரம்ப அறிகுறி தெரிகிறது. அயல்நாட்டுப் பயணங்கள், கேசரியிடம் கெஞ்சல் என்று பரபரத்தவர் தலைகூர்ந்து தொழில்துறை பக்கமும் கவனம் திருப்பியுள்ளார்.

முன்னணி தொழிலதிபர்களை அழைத்துப் பேச்சுவார்த்தை நடத்தியுள்ளார். ரத்தன் டாடா, ராஹுல் பஜாஜ், முகேஷ் அம்பானி, நுஸ்லி வாடியா, கேஷுப் மஹிந்திரா என்று பல தொழில் நிறுவனப் பிரமுகர்கள் கூட்டத்தில் பங்கேற்றிருக்கிறார்கள். பிரதமர் மட்டுமின்றி நிதியமைச்சர், தொழில்துறை அமைச்சர், வர்த்தக அமைச்சர் என்று மத்திய அமைச்சரவையின் முக்கியஸ்தர்களும் பங்கேற்றிருக்கிறார்கள்.

சிமெண்ட், கார்கள், எலக்ட்ரானிக் சாதனங்கள், எஃகு, துணிமணிகள் போன்றவற்றுக்கான மார்க்கெட் குறைந்து போய் மிகவும் மந்தமாக இருப்பதை இந்தத் தொழிலதிபர்கள் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள். நாட்டின் பொருளாதாரத் தேக்கம் காரணமாகவே இந்தப் பொருள்கள் விலை போகாமல் இருக்கின்றன என்பதை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.



• சிதம்பரம்

அடிப்படை வசதி பூர்த்தி செய்யப்பட்டால்தான் தொழில்துறை முன்னேற்றம் அடையும் - மின்சக்தி, சாலைகள், நெடுஞ்சாலைகள், துறைமுகங்கள், தகவல் தொடர்பு போன்றவை வளராவிட்டால் பொருளாதாரம் வளராது என எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

சமீப காலமாக இந்த அடிப்படைத் தேவைகளில் அரசு அதிகம் முதலீடு செய்யவேயில்லை. ஏற்கனவே உள்ள அடிப்படை வசதிகளைப் பராமரிப்பதற்கே நிதி செலவாகிவிடுவதால் வசதிகளைப் பெருக்கவோ, புதிய வசதிகளைப் புகுத்தவோ நிதி போதவில்லை என்பது சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது.

பிரதமர் இதற்கெல்லாம் பொறுமையாக செவி சாய்த்ததே நமக்கு மகிழ்ச்சி கலந்த வியப்பை ஏற்படுத்துகிறது. விளைவுகள் பிரமாதமாக இல்லாவிட்டாலும் நாட்டின் முன்னணி தொழிலதிபர்களின் கருத்து கேட்க வேண்டும் என்கிற எண்ணம் பிரதமருக்கு எழுந்துள்ளது அவர் போக்கில் மாற்றத்தைக் குறிக்கிறது.

இதைப் போன்ற கூட்டங்கள் அவ்வப்போது நடத்தப்பட்டு, நாட்டு நலனில் அக்கறை உள்ளவர்களிடம் கருத்து கேட்கப்பட்டு, அக்கருத்துக்களின் அடிப்படையில் நடவடிக்கையும் எடுக்கப்படுமானால் நிச்சயமாக நல்ல பலன் இருக்கும்.

கடந்த செப்டம்பர் முதல், இந்தியப் பொருளாதாரம் முன்னேற ஆரம்பித்திருக்கிறது என்று ப.சிதம்பரம் கூறிவரும் நம்பிக்கை வாசகம்கூட நிஜமாவதற்கு வாய்ப்பிருக்கிறது.

**— வி. கோபாலன்**

# இனிமே இது தான் போட்டி

# மிக மிக மிக சுலபம்!

சுவையான, புதிய ஏவிடி அஸ்ஸாம் டீ 250 கிராம் பாக்கெட் ஒன்றை வாங்குங்கள். அத்துடன் ஒரு நுழைவுத் தாள்.

சன் டி.வி., சென்னை தொலைக் காட்சி மற்றும் விஜய் டி.வி. ஆகியவற்றில் ஏவிடி அஸ்ஸாம் டீ விளம்பரத்தைப் பார்த்த பிறகு, நுழைவுத் தாளைப் பூர்த்தி செய்யுங்கள்.

ஏவிடி அஸ்ஸாம் டீ பாக்கெட்டின் கீழ் பகுதியின் சான்றை இணைத்து, பூர்த்தி செய்த நுழைவுத் தாளை எங்களுக்கு அனுப்புங்கள்.

அதன் பிறகு, நல்ல மணம் வீசும் ஸ்ட்ராங்கான ஏவிடி அஸ்ஸாம் டீ பருகுங்கள் - பலன் கிடைக்கும், காத்திருங்கள்!

நீங்கள் வெற்றி பெறக் கூடியவை:

விரைந்து செயல்படுவோர்க்கான பரிசு : 500 ஏவிடி அஸ்ஸாம் ஏர்-பேக் (தினமும் பத்து)

ஆறுதல் பரிசு : 250 ஏவிடி அஸ்ஸாம் குடைகள்

4-வது பரிசு : 100 ஏவிடி அஸ்ஸாம் சுவர்க் கடிகாரங்கள்

3-வது பரிசு : மூன்று ரெப்ரிஜரேட்டர்கள்

2-வது பரிசு : இரண்டு கலர் டி.வி.

முதல் பரிசு : 10 சவரன் தங்கம்

வெற்றி பெறுவதற்கு 856 பரிசுகள் - இழப்பதற்கு ஒன்றும் இல்லை...

ஏவிடி அஸ்ஸாம் டீ 250 கிராம் பாக்கெட் ஒன்றை வாங்குங்கள். அது உங்களுடைய அதிர்ஷ்ட நாளாக இருக்கும்!

நுழைவுத் தாள்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 15 நவம்பர், 1997.

நுழைவுத்தாள்களை அனுப்ப வேண்டிய முகவரி : தபால் பெட்டி எண். 4550 சென்னை - 600 006



# எம். என். நம்பியார்

சி.எம். போன்ல கூப்பிடறார்னு பையன் வந்து சொன்னப்ப நான் நம்பலை. 'இருக்காது, போடா'ன்னு அவனை அனுப்பிச்சிட்டேன். அவன் திரும்பவும் வந்து 'எம்.ஜி.ஆர்.தாங்க பேசறார்'னு சொன்னான். போய் போனை எடுத்தேன். அவரேதான்.

"இப்ப என்ன பண்ணிக்கிட்டிருக்கீங்க?" எம்.ஜி.ஆர். கேட்டார்.

"ஊட்டியில ஒரு ஜென்டில்மேன் இந்த நேரம் என்ன பண்ணிக்கிட்டிருப்பானோ அதைத்தான் பண்ணிக்கிட்டிருக்கிறேன். சீட்டு ஆடிக்கிட்டிருக்கேன். எல்லாம் உங்க உபயம் தான்"னு நான் சொன்னேன்.

"வாங்களேன். சாப்பிட்டுட்டு அப்படியே பேசிக்கிட்டிருப்போம்"ன்னார்.

"ஐயையோ.... என்னை ஜாதியில இருந்து தள்ளி வச்சிடுவாங்களே. அங்க வந்தா எலும்பும், முள்ளும் தான் இருக்கும்."

"சரி... சரி... ஒரேயடியா பிகு பண்ணிக்காதீங்க. சாப்பிட்டுட்டே வாங்க."

அவர் அப்போ ஊட்டியில இருந்து எனக்கு போன் பண்ணப்ப நான் வாலி இன்ஸ்டிடியூட்ல இருந்தேன். அது ஒரு ரொம்ப பெரிய அமைப்பு. அதில் மெம்பர்ஷிப் கிடைக்கிறதே கஷ்டம்.

சி.எம். கூப்பிடறப்ப எப்படி போவாம இருக்கறதுன்னு நான், 'தமிழகம்' பங்களாவுக்குப் போனேன்.

தமிழகம் பங்களா, முன்னாடி ஜெய்ப்பூர் மகாராஜாவோட அரண்மனையா இருந்தது. அட்டகாசமான பில்டிங்.

ஊட்டியில நான் பார்க்காத இடம் கிடையாது. இப்ப ஊட்டியில இருக்கிறவங்கள்ல முக்கால்வாசிப் பேர் எனக்கப்புறம் பொறந்தவங்களாத்தான் இருப்பாங்க.

நான் ஒவ்வொரு வருஷமும் ஊட்டி போவேன். தாசப்பிரகாஷ்லதான் தங்குவேன். அங்கே எனக்கு எப்பவுமே ஸ்பெஷல் கவனிப்பு. அதாவது ரூம்லேயே, அதைப் பாழாக்காம சமைச்சி சாப்பிட எனக்கு பிரத்யேகமா பர்மிஷன் கொடுத்திருக்காங்க. எப்ப போனாலும் அங்கே 83-ம் நெம்பர் ரூம்லதான் தங்குவேன்.

வரேன்னு சொன்னா அந்த ரூமை எனக்காக ரிசர்வ் செஞ்சிடுவாங்க.

எனக்கு மட்டும் அங்கே எப்படி அவ்வளவு செல்வாக்குன்னா தாசப்பிரகாஷ் ஹோட்டல் உரிமையாளர்கள் நான் பார்த்து வளர்ந்தவங்க.

அங்கே ஹோட்டல் வராத முந்தியே அங்கேயிருந்து நான் ஊட்டியோட அழகை யெல்லாம் அணுஅணுவா ரசிச்சிருக்கேன்.

1948-ல் ஒரு படம். விஜயகுமாரின்னு பேரு. கே.ஆர். ராமசாமி ஹீரோ. ராஜகுமாரி ஹீரோயின். எனக்கு ஒரு மீனவர் வேஷம். எனக்கு ஜோடி சிவபாக்கியம்னு ஒரு அம்மா. அப்ப ஊட்டியில ஷூட்டிங். அப்பத்தான் தாசப்பிரகாஷ் திறந்தாங்க.



அப்ப இருந்தே பழக்கம்.

வருஷா வருஷம் நான் ஊட்டிக்குப் போய் வரத் தவறவே மாட்டேன். இந்த வருஷமும் போயிருந்தேன். அடுத்த வருஷமும் போவேன். அப்படி ஊட்டியும், தாசப்பிரகாஷும் என் வாழ்க்கையோட கலந்து போச்சு.

இப்ப பஸ் ஸ்டாண்ட் இருக்கிற இடமெல்லாம் அப்ப ஏரி. இப்ப சில்ரன்ஸ் பார்க் இருக்கிற இடத்தில அப்ப ஒரு பாறை இருந்தது. ஒரு நீச்சல் போட்டி வச்சாங்க. அந்தப் பாறையில இருந்து குதிச்சி அந்தப் பக்கமா

நீந்திப் போய் மறுபடியும் வந்து அந்தப் பாறை மேல வரணும். இதான் போட்டி. கவர்னர் தலைமையில நடந்தது. அந்தப் போட்டியில மூணு பையன்கள் கலந்துக்கிட்டாங்க. ஒருத்தன் அண்ணன். இன்னொருத்தன் தம்பி. இவங்க கூட அவங்க சிநேகிதன் ஒருத்தன்.

எல்லாம் முடிஞ்சி பாறை மேல ஏறினாங்க. சட்டுன்னு சிநேகிதன் பாறை வழுக்கி ஆத்தில விழுந்தான். அவனைக் காப்பாத்த அண்ணன்காரன் குதிச்சான். என்னதான் நீச்சல் தெரிஞ்சாலும் அது பெரிய ஏரியில்லையா? சமாளிக்க முடியல்ல. ரொம்ப நேரமாச்சி. காணோம். தம்பியும் குதிச்சான். மூணு பேரும் காலி. இந்தக் காட்சியை நான் அன்னிக்கி கண்ணால பார்த்தது இன்னிக்கும் மறக்கல்ல.

11

**ஊ**ட்டிக்கு பெருமை தொட்டபெட்டா. இந்தியாவிலேயே ரெண்டாவது உயரமான இடம். ஹிமாலயன் ரேஞ்ச்சில இந்தியாவில ரொம்ப உயரம் கேரளாவில யானைமுடி. 8840 அடி. அடுத்தது நம்ம தொட்டபெட்டா. 8460 அடின்னு நினைக்கிறேன்.

1930-ல் ஒரு பாட்டு. தமிழ்நாட்டையே ஒரு கலக்கு கலக்கிச்சி. சிவபாக்கியம் பாடின பாட்டு. வயசானவங்களுக்கு ஞாபகமிருக்கும். 'வண்ணான் வந்தானே... வண்ணார சின்னான் வந்தானே'ன்னு ஆரம்பிக்கிற பாட்டு.

அதைக் கேட்டுட்டு சலவைக்கார சகோதரர்களுக்கெல்லாம் ஒரு ரோஷம் வந்து அவங்கல்லாம் சேர்ந்து அப்ப ஒரு தியேட்டர் ஊட்டில ஆரம்பிச்சாங்க. சம்பந்தா பிக்சர் பேலஸ் தியேட்டர்னு பேரு. அங்கே நான் படம் பாத்திருக்கேன்.

இதெல்லாம் ஊட்டியிலேயே இருக்கிறவங்களுக்கே தெரியாத விஷயங்க.

ஊட்டியோட அழகு இப்ப பழங்கதையா ஆயிடுச்சி. என்னைக் கேட்டா வெள்ளைக்காரன் போனதுமே ஊட்டியோட அழகு கால் பங்கு போச்சு. குந்தா புராஜக்ட் வந்தது. இன்னொரு கால் பங்கு காலி. பிலிம் தொழிற்சாலை வந்தது. இன்னும் கால் பங்கு போச்சு. காரணம் அநியாயமா மரத்தையெல்லாம் வெட்டிட்டாங்க. இப்ப ஊட்டி மட்டும் இருக்கு. அழகு மிஸ்ஸிங்.

பாத்தீங்களா, இப்படித்தான் ஊட்டின்னு வந்தாலே நான் அதிலேயே மூழ்கிப் போயிடுவேன்.

**ஆ**ங்... எம்.ஜி.ஆர். கூப்பிட்ட விஷயத்துக்குப் போவோம்.

தமிழகம் பங்களாவுக்குப் போய்ச் சேர்ந்தேன். வாசலில் இருந்தே எனக்கு தடபுடல் மரியாதைதான். சொல்லி வச்சிருந்தார் போலிருக்கு.

நான் போனதும் என்னையும் தாண்டி எனக்குப் பின்னால பார்த்தார் முதல்வர் எம்.ஜி.ஆர்.

"என்ன பாக்கறீங்க?"

"வேற யாரும் வரல்லியா?"

"என்னை மட்டும்தானே வரச் சொன்னீங்க."

"எதுக்கு வரச் சொன்னேன்னு தெரியாதா?"

"தெரியாதே."

இவரு சீட்டாட கூப்பிட்டாருன்னு எனக்குத் தெரியும். அதனால நான் இங்கே வர்றதுக்கு முன்னாடியே என்னைப் போல நாலு ஜென்டில்மென்னை – அதாவது சிகரெட் பிடிக்காத, தண்ணி அடிக்காத, சீட்டு மட்டுமே ஆடத் தெரிஞ்ச நாலு பேரை அரேஞ்ஜ் பண்ணிட்டுத்தான் வந்திருந்தேன்.

போன் பண்ணதும் அவங்களும் வந்து சேர்ந்தாங்க.

சீட்டு ஆடினோம்.

இப்படி எம்.ஜி.ஆர். ஊட்டி வந்தப்போ ஒரு நாலைஞ்சு வருஷம் ஆடியிருக்கோம்.

முதல் ரெண்டு வருஷம் நல்லா ஆடின எம்.ஜி.ஆர்.

# மயிலைக்கு ரயில்!

சென்னை கடற்கரையிலிருந்து, சேப்பாக்கம் வரை இதுவரை ஓடிக் கொண்டிருந்த பறக்கும் ரயில், திருவல்லிக் கேணி, கலங்கரை விளக்கம், திருமயிலை என்று மைலாப்பூர் வரை நீட்டிக்கப்பட்டுள்ளது.

மயிலைவாசிகளுக்குப் பறக்கும் ரயில் வருவதில் ஏக சந்தோஷம். பதினேழு நிமிடங்களில், இங்கிருந்து பாரிஸ் போய் விடலாம். ஐந்து நிமிடத்துக்கு ஒரு ரயில்.

கடற்கரை நிலையத்திலிருந்து சேப்பாக்கம் வரை இருந்த இரண்டரை ரூபாய் கட்டணத்திலேயே இப்போது மயிலை வரை பயணம் செய்யலாம்.

ஸ்டேஷன்களில் புதுமையாக, தானியங்கி படிகள் (எஸ்கலேட்டர்கள்) அமைக்கப்பட்டுள்ளன. சென்னையின் சாமானிய மக்களுக்கு இதில் ஏறி மேலே போவது புது அனுபவம்.

பறக்கும் ரயிலில் பயணம் செய்தபடியே கீழே சென்னை மாநகரைப் பார்க்கிறபோது சுவாரசியமாய் இருக்கிறது. இது நம்ம சென்னைதானா என்ற சந்தேகம் கூட சில சமயம் எழுகிறது.

தென்னக ரயில்வே பொதுமேலாளர் என். கீர்த்தி வாசனிடம், "இந்த ரயில் தடம், வர்த்தகரீதியில் லாபம் பெற்றுத் தருமா?" என்று கேட்டோம்.

"இதுபோன்ற நகர்புற ரூட்களில் சரக்குப் போக்குவரத்து கிடையாது. பயணிகளும் பெரும்பாலானவர்கள், சீசன் டிக்கட்காரர்களாகவே இருப்பார்கள். எனவே அதிக லாபம் வரும் என்று சொல்ல முடியாது. அதுமட்டுமில்லை. ஜனத்தொகை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிற இன்றைய சூழ்நிலையில், ஓரளவுக்கு மேல் பஸ்களின் எண்ணிக்கையை அதிகரிக்க முடியாது. காரணம் டிராபிக் நெரிசல். அப்புறம், மாற்று ஏற்பாடுதான் என்ன? அந்தக் கோணத்தில்தான் இதைப் பார்க்க வேண்டும்!" என்றார்.

— எம். பாரதி

படம் : ஸ்ரீஹரி



அப்புறமா தப்புத் தப்பா ஆட ஆரம்பிச்சார்.

என்ன சொல்ல வரேன்னா, முதல்ல அவர் தோத்துக்கிட்டே வந்தார். நாங்க அவர்கிட்ட பணம் பிடுங்கி ஜெயிச்சிட்டிருந்தோம். அப்புறமா திடீர்னு நல்லா ஆட ஆரம்பிச்சுட்டார். எங்க பாடு திண்டாட்டம்.

நான் சொன்னேன் : "இது நல்லா இருக்கா... உங்ககிட்ட இருந்து காசு அடிக்கணும். அதுக்குத்தான் நாங்க வரோமே தவிர, எங்க காசை உங்களுக்குக் கொடுத்துட்டுப் போறதுக்கு எங்களுக்கு என்ன தலையெழுத்தா?"

இப்படி தமாஷா அவரோட நெறைய சம்பவங்கள். எம்.ஜி.ஆர். கேரம் ரொம்ப நல்லா ஆடுவார். கோயமுத்தூர்ல எங்க வீட்ல அப்ப ஒரு கேரம் போர்டு இருந்தது. நாங்க எப்ப ஆட உட்கார்ந்தாலும் எங்கிட்ட சவால் விட்டு ஜெயிப்பாரு.

"அஞ்சு போர்டுல கேம் எடுக்கறேன்"னு சொல்லிட்டு ஜெயிப்பார்.

ஆரம்பத்தில் மூணு போர்டுலேயே ஜெயிச்சிட்டு வந்தார். நான் கொஞ்சம் நல்லா ஆடக் கத்துக்கிட்ட பிறகு அது அஞ்சு போர்டு ஆச்சு. அப்புறமா ஆறு ஆச்சு.

"ஒருதரம் ஆறு போர்டுல கேம் எடுத்துக் காட்டறேன்"னு என் கூட ஆடினார்.

எல்லா காயும் போட்டாச்சு. என் காய் ஒண்ணும், அவரோடது ஒண்ணும்தான் போர்டுல பாக்கி இருந்தது. ஒவ்வொரு தடவையும் என் காயை பேஸ்(Base)ல தள்ளிட்டு வேடிக்கை பார்ப்பாரு. எனக்கு கேமை எப்படி முடிக்கிறதுன்னு தெரியல்ல.

கோபம் வந்தது. தமிழ்ல இருக்கிற 'பச்சை' வார்த்தைகள்ல ரொம்ப மோசமான வார்த்தையைச் சொல்லி அவரைத் திட்டினேன்.

அவரு கூலா சொன்னாரு : "போல் குருமுட்டு! என் காயை நீ போட்டிருந்தா கேம் முடிஞ்சிருக்குமில்ல?"

கேமை முடிக்கணும். யார் காயைப் போட்டா என்ன? பாருங்க... இந்தச் சின்ன விஷயம் எனக்குத் தெரியாம போச்சு! அதுதான் எம்.ஜி.ஆர். எந்தக் காரியத்தைச் செஞ்சாலும் அதை ஆர்வமாவும் சிறப்பாவும் செய்யக்கூடியவர்.

நான் எதையும் எப்பவும் 'பட்'டுனு சொல்லிடுவேன். யாரு எவங்கன்னு பார்க்கறதில்ல. ஆணா, பெண்ணா அப்படீனும் பார்க்க மாட்டேன். பல சமயங்கள்ல காஞ்சதா சொல்வேன். சில சமயங்கள்ல பச்சையாவும் சொல்றதுண்டு.

அரசிளங்குமரி ஷூட்டிங். நானும் எம்.ஜி.

ஆரும் கத்திச் சண்டை போடற காட்சியை ஷூட் பண்ணிக்கிட்டிருந்தாங்க.

ஒரு உண்மையை நான் இங்கே மனப் பூர்வமா ஒத்துக்கணும். என்னை விட எம்.ஜி.ஆருக்குக் கத்திச் சண்டை ரொம்ப இயல்பா வரும். அது மட்டுமல்ல; சில லாகவங்கள்ல, நுணுக்கங்கள்ல அவரை மிஞ்ச முடியாது.

அந்தக் காட்சி லாங் ஷாட். நான் கத்திய சுத்தினப்போ எப்படியோ எக்குதப்பா என்னோட கத்தி எம்.ஜி.ஆர். கண்ணில் பட்டுடுது. முகமெல்லாம் ரத்தம். நான் ஒரு நிமிஷம் பதறியே போயிட்டேன்.

கத்திய எப்படி சுத்தினாலும் அவரு சமாளிப்பாருன்னு நானும், நான் மேல கத்தி படாதபடி கவனமாதான் சுத்துவேன்னு அவரும் நினைச்ச எங்கேயோ தப்பு நடந்து போய் பாவம், அவர் கண்ணில என் கத்தி குத்தியாச்சி.

அப்படியே கையால மூஞ்சியை மூடின படியே எங்கிட்ட வந்து 'என்ன வேய், இப்படி கண்ண குத்திட்டீர்?'னு திருநெல்வேலி பாஷையில கேட்டார்.

அதுக்குள்ள நானும் கொஞ்சம் சமாளிச்சிக்கிட்டேன். "போய்யா... முதலாளி குத்தச் சொன்ன இடத்தில நான் இன்னும் குத்தல்லே" அப்படீன்னு சொன்னேன்.

நான் வேணும்னு குத்தியிருக்க மாட்டேன்னு புரிஞ்சுக்கிட்டு எம்.ஜி.ஆர்.கேட்டார்: "முதலாளி எங்கே குத்தச் சொன்னார்?"

"உங்க நெஞ்சப் பார்த்து குத்தச் சொன்னார்."

"ஏன், ஏன் அப்படிச் சொன்னாரு?"

"அவங்க படத்த முடிச்சிக் குடுக்காம கொஞ்சநஞ்சமாவா நீங்க அவங்களைக் கஷ்டப்படுத்தறீங்க?"

நான் இப்படிச் சொல்வேன்னு 'செட்'ல யாருமே எதிர்பார்க்கல்ல. பக்கத்தில நின்னுக்கிட்டிருந்த புரொட்யூசர் பாவம்; வெலவெலத்துப் போய் எங்கிட்ட வந்தார். அவர் பேரு அப்துல்லா. முஸ்லீம்.

"என்னண்ணே... அப்படிச் சொன்னீங்க. நான் எப்பண்ணே உங்ககிட்ட அப்படிச் சொன்னேன்..."

"யோவ்... சொல்லல்லே... ஆனா உண்மையா சொல்லுங்க. இந்தப் படத்த சீக்கிரமா முடிச்சித் தராம எம்.ஜி.ஆர். இழுத்தடிக்கிறதனால அவரு நெஞ்சில குத்தணும் உங்களுக்குத் தோணல்ல? குரான் மேல சத்தியமாச் சொல்லுங்க" அப்படீன்னு கேட்டேன். அவர் சைலண்டா அப்பாலே போயிட்டார்.

உடனே எம்.ஜி.ஆரை ஆஸ்பத்திரிக்கு அழைச்சிட்டுப் போனாங்க. அதுவரைக்கும் பிரமாதமா பேசிக்கிட்டிருந்த எனக்கு ரொம்ப டென்ஷன் ஆயிடுச்சி. "இவ்வளவு கவனமா இருந்தும் எம்.ஜி.ஆர். கண்ணில குத்திட்டோமே. இப்படி ஆயிடுச்சே"ன்னு ரொம்ப வேதனையா போச்சு.

அப்துல்லா வந்து, "என்ன அண்ணே... எம்.ஜி.ஆர்.கிட்ட இப்படி என்னை மாட்ட வச்சிட்டீங்களே"ன்னு வருத்தப்பட்டார்.

"கவலைப்படாதீங்க. நான் இப்ப ஓபனா சொல்லிட்டேனில்ல... இனிமே பாருங்க... படம் சீக்கிரமா முடிஞ்சிடும்."

அப்படியே படத்தை அதுக்கப்புறம் எம்.ஜி.ஆர். சீக்கிரமா முடிச்சிக் குடுத்தார்.

இப்படி யாருக்காவது ஏதாவது பிராப்ளம்னா எங்கிட்ட வந்து அப்ரோச் பண்ணச் சொல்வாங்க. நானும் சமயம் பார்த்து 'சுருக்'னு ஒரு டயலாக் அடிப்பேன். விஷயம் செட்டில் ஆயிடும். எனக்கு அப்படி ஒரு ராசி. நான் சொல்றது ஒரு நல்ல காரியத்துக்காக அமையறதனால மத்தவங்க என்னைப் பத்தி என்ன நினைக்கிறாங்கன்னு நான் கவலைப் படறதுமில்லை.

(தொடரும்)



**"பெண்ணைப் பாடச் சொல்லி, பாட ஆரம்பிச்சப்புறம் பையன் ஏன் எழுந்து ஓட ஆரம்பிச்சுட்டார்?"**

**" 'நான் ஒரு கை பார்க்கிறேன், நேரம் வரும் கேட்கிறேன்! போகப் போகப் பூனையல்ல, புலிதான் என்று காட்டுகிறேன்'னு பாடினாளாம்!"**

**– வெ. ராஜாராமன்**

# ஸ்வஸ்திக் சாமிகள்

ஒவ்வொரு வியாழக் கிழமையும், தவறாது செய்யும் ஒரு வழக்கம் விஜயலட்சுமிக்கு உண்டு. அருகிலுள்ள கோயிலுக்குச் சென்று, தட்சிணாமூர்த்திக்குப் பையன் பரமேஷ் பெயரில் அர்ச்சனை செய்வது. அதுவும் இப்போது, பிளஸ்டு - பள்ளிப் படிப்பின் இறுதியாண்டை நெருங்குவதால், வழிபாடு தீவிரமாகவே இருந்து வந்தது.

கடந்த நாலைந்து மாசமாக, இன்னொரு வழக்கமும் அவளிடம் தொற்றிக் கொண்டிருந்தது. அதாவது தனியார் டீ.வி. சானல் ஒன்றில் ஸ்வஸ்திக் சாமிகள் நிகழ்ச்சிகளை விடாமல் பார்ப்பது. அந்த டீவியில் வேலை பார்க்கிற ஒருவர் பக்கத்து வீட்டில் குடியிருப்பவர். அவர் சொல்லி, ஆர்வமூட்டிய சமாசாரம் அது.

சாமிகள் எத்தனை அழகாகப் பேசுகிறார்! குரலில் தான் என்ன ஓர் இனிமை, நைச்சியம்! அதுவும் பத்து நாள் முன்பு, ஏதோ சில விமர்சனங்களுக்குப் பதில் அளிக்கும் விதத்தில், பேசினார் : 'ஸ்வஸ்திக் நல்லதைக் குறிக்கும் ஓர் அடையாளம். என்னைக் கெட்டவன் என்று சிலர் எழுதுகிறார்கள். பழைய கதைகளைக் கிளறுகிறார்கள். ஆனால் எது நல்லது, எது கெட்டது என்பதை நிர்ணயிப்பவன் ஆண்டவன் மாத்திரமே! சிவவாக்கியர் அற்புதமாகப் பாடியிருக்கிறார். 'நல்லதல்ல; கெட்டதல்ல... நடுவில் நிற்பதொன்றுதான் நல்லதென்றபோது நல்லதாகி நிற்குமே... நல்லவை நாடி நாமம் சொல்ல வேண்டுமே!' - இழைவும், குழைவுமான விளக்கங்கள்....

கேட்டுக் கொண்டிருந்த விஜயலட்சுமிக்கு உடம்பு சிலிர்த்தது. உடனே நேரில் சென்று, அந்த ஸ்வஸ்திக் சாமிகளைத் தரிசித்து ஆசி பெற வேண்டுமென்ற அவா உண்டாயிற்று.

கணவன் மகேந்திரனிடம், "என்னங்க? எப்ப மெட்றாஸ் போகலாம்? உங்க தங்கையைப் பார்க்கணும்னு சொன்னீங்களே?"

''ம்... என்ன உனக்கு



# போட்டிக் கதை - 5

திஷர் அக்கறை?"

"இல்லீங்க... அங்கே போனால் ஸ்வஸ்திக் சாமிகளைப் பார்க்கலாம்! முருகர் அவதார மாமே அவர்..."

"இதுதான் காரணமா? நாத்தி மீது வந்த கரிசனத்துக்கு?"

விஜயலட்சுமிக்குக் கணவன் சுபாவம் தெரியும். கோபிக்காமல் பொறுமையுடன், "ஏழாவது தெருவில் ஜானகி அம்மா போயி ருந்தாங்க. ரொம்ப சக்தியாம் அவருக்கு."

"பார்க்கலாம்... பரமேஷுக்கு தினம் ஏதாவது டியூஷன் இருக்கு. படிக்கணும்... அவனைத் தனியே எப்படி விட்டுப் போறது?"

"சாமிகளை எப்படியும் பார்க்கணுங்க" என்றாள் விஜயலட்சுமி. குரலில் ஒரு பிடிவாதம் தொனித்தது; அதே சமயம் கணவன் சொன்னதில் உள்ள உண்மையும் அவளுக்கு உறைக்காமலில்லை. நிஜம்தான்.



விடிகாலையில் எழுந்து, அருகில் உள்ள மாஸ்டரிடம் ஒரு பாடத்துக்கு டியூஷன்... பிறகு பொன்னையாராஜபுரத்தில் பள்ளிக்கு, ஏற்ற இறக்கத்தில் சைக்கிள் மிதித்துச் செல்ல வேண்டும்.. மறுபடியும் மாலை எங்கேயோ திருச்சி சாலையில் கணக்குக்கு ஸ்பெஷல் கோச்சிங்... சாறு மாதிரி பிழிந்துதான் எடுக்கிறார்கள் –

வாசலில் சீழ்க்கை ஒலி கேட்டது.

**ப**ரமேஷ் நுழைந்ததுமே, "ஒரு விசேஷம் தெரியுமாம்மா?"

"என்ன? போன வார டெஸ்டில் நல்ல மார்க்கா?"

"போம்மா... உனக்கு அதேதான்!" என்று சொல்லி, இடது கையை மேலும், கீழுமாகச் சாய்த்தான்.

"புரியும்படியா சொல்லு."

"இடதுகையில் படம் வரைஞ்சேனே! டீச்சர் என்னை 'அப்ரிஷியேட்' பண்ணினார்..."

"அம்பிடெக்ஸ்ட்ரஸா" வேறு ஒரு குரல் பக்கத்தில் கேட்டது.

நிமிர்ந்து பார்த்தாள் விஜயலட்சுமி. "அட, உங்கள் டியூட்டி சீக்கிரம் முடிஞ்சுடுத்தா?"

மகேந்திரன் புன்னகை செய்தான். "கதவு திறந்து கிடந்தது. டீவி பாட்டுக்கு ஓடறது... பையன் பெருமையைக் கேட்டுக்கிட்டிருக்கே..." என்று சொன்னவன், மகனை நிமிர்ந்து நோக்கினான்.

"பரமேஷ்... இடதுகையாலும் முடியும் என்கிற மாதிரி இரு... அதுவே பழக்கமாகி விடப் போகிறது!" என்றான் எச்சரிக்கும் தொனியில்.

மகேந்திரன் அது போல் சொன்ன வேளை, என்ன 'வேளை' என்பதைத் தேர்ந்த ஜோசியர்கள்தான் ஆராய்ந்து சொல்ல வேண்டும். சொன்னபடியே...

**வி**ஜயலட்சுமி அன்றும் காத்துக் கொண்டிருந்தாள். கணவருக்கு மில்லில் நைட் ஷிப்ட்... மெஷினில் ஏதோ கோளாறு, சரியான பிறகுதான் வேலை செய்ய வேண்டும் என்று தெரிவித்து இருந்தான். கவலை இல்லை... ஆனால் இந்தப் பையன்? பரமேஷ்... மணி பத்துக்கு மேலாகி விட்டதே? அவள் அடிவயிற்றில் பயம் லேசாகக் கவ்வியது.

"என்னங்க லட்சுமியம்மா?"

நிமிர்ந்து பார்த்தாள் விஜயலட்சுமி.

"உங்களுக்கு போன்... அவசரமாம்" – கூப்பிட்ட பெண்ணுக்கு டீவி. பார்க்கும் அவசரம் போல. ஓடிச் சென்று விட்டாள்.

அடுத்த வீட்டுக் கதவைத் திறந்து, இரண்டிரண்டு படிகளை ஒன்றாகத் தாவி ஏறினாள். உள்ளே போனாள். ரிஸீவர் அனாதையாகத் தனித்து இவள் வருகைக்காகக் காத்து இருந்

**வாதூலன்**

தது. எடுத்தான். "ஹலோ"

"யார் பேசறது? விஜயலட்சுமியா? ...ஸ்கூலில் படிக்கிறானே பரமேஷின் தாயார்தானே?"

''ஆமாங்க.'' - சொல்லும்போதே, குபீரென்று உடல் பூரா வியர்வை பிரவகித்து ஓடியது.

''கவனமாக கேளுங்க. ஒரு சின்ன ஆக்ஸிடன்ட்... வடகோவையிலே வண்டி பின்னால உட்கார்ந்தபோது... டாக்டர் வீட்டிலே அட்மிட் ஆகியிருக்கான்...!''

"அய்யோ... அய்யய்யோ... அவர் கூட இப்ப வீட்டில் இல்லையே!"

"கவலைப்படாதீங்க... இன்னிக்கு ராத்திரி பூரா இங்கே இருப்பான். காலையிலே கணவரோட வாங்க. இடம் தெரியுமில்லே? வடகோவையிலிருந்து கௌலி பிரவுன் ரோட்..."

''கோல்ஸ் பிராக்சர்,'' என்றார் டாக்டர். கவலைதோய்ந்த மகேந்திரன் முகத்தையும், பயம் பூசின விஜயலட்சுமி கண்களையும் ஏறிட்டு நோக்கியபடி, "ரேடியம் போன்... தோள் பட்டைக்கு மேலே - பிராக்சர் ஆகியிருக்கு."

"என்னங்க... அவனுக்கு இன்னும் ரெண்டு மாசத்திலே பரீட்சைங்க. பெரிய பரீட்சை...!" - விஜயலட்சுமியால் அழுகையை அடக்க முடியவில்லை.

டாக்டர் தோளைக் குலுக்கினார். "உங்க பையனுக்கு பட்டது சின்ன அடியில்லையே!" என்றார். குரலில் கனிவை வரவழைத்துக் கொண்டார். "வண்டியிலிருந்து கீழே விழும்போது கையை ஊன்றி விழுந்திருக்கிறான். அதான்... வீ வில் ஸீ"

அவள், எதிரே மிகப் பெரிதாகத் தெரிந்த காலண்டர் தேதியையும், 'மாவுக் கட்டு'டன் கிடக்கும் பரமேஷையும் நோக்கினாள். திடீரென்று ஒரே நொடியில் அந்தத் தேதி பரீட்சை தேதியாகவும், பரமேஷின் கட்டுப் போட்ட கை மேலும் சீர் கெட்டுப் போவது போலவும் பிரமை எழுந்தது. குலுங்கிக் கதறி விட்டாள்.

''என்ன இது விஜி... டாக்டர் இருக்காரில்லே?''

"நீங்க எந்த வேளையிலே சொன்னீங்களோ அதே மாதிரி ஆகிவிட்டதே... இடதுகையை..."

டாக்டர் பாதி ஜீரணித்துக் கொண்டார். "பரீட்சைக்கு ஆறு வாரத்துக்கு மேல் இருக்கு. பூரண குணம் ஆகலாம். வேகமாக எழுதுவது கஷ்டம்... பார்ப்போம். இப்ப 'ரிவிஷன்'தானே... ரெஸ்ட் எடுத்துண்டு படிக்கட்டும்... இப்பத்தான் என்னென்னவோ மருந்து புதுசு புதுசா வரதே... ம்''

விஜயலட்சுமியின் இயல்பான வாழ்க்கை மிகவும் மாறிப் போயிற்று. ''பரமேஷ்'' "பிளஸ் டு" என்று மட்டுமே திரும்பத் திரும்ப ஜெபம் போல முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். கிளினிக்கில் சில நாள் தங்கி இருந்து விட்டு, பிறகு வீட்டுக்கு வந்தவுடன், அவளுக்குள் பயம் இன்னும் அதிகமாக எழுந்தது.

பரமேஷ் சில நாட்கள் உற்சாகமாய் இருப்பான். சில தினங்கள் சோர்வாகக் காணப்படுவான். "என்னால் கையை உபயோகிக்கவே முடியாது போலிருக்கு... பயம்மா இருக்கும்மா... ஒரு வருஷம் வேஸ்ட்" என்று துவண்டு போய்க் கூறுவான். அதுபோல் சொல்லும்போதெல்லாம், விஜயலட்சுமிக்கு வயிற்றைக் கலக்கும்.

அன்றும் அது மாதிரிதான். தனக்குப் பிடித்தமான "சாமிகள்" நிகழ்ச்சியை டீ.வி.யில் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் மனசில் ஏதோ தோன்றியது.

திடீரென்று பரமேஷின்

# யார் சிறந்த பக்தர்?

''உங்களுடைய பக்தர்களிலேயே மிகச் சிறந்த பக்தர் யார்?'' என்று விஷ்ணுவிடம் கேட்டார் நாரதர்.

''ஒரு விவசாயிதான்!'' என்றார் விஷ்ணு.

நாரதருக்கு ஏமாற்றம். எந்நேரமும் மகாவிஷ்ணுவின் நாமத்தையே சொல்லிக் கொண்டிருக்கிற தம்மைவிட அந்த விவசாயி எந்த விதத்தில் உசத்தியான பக்தனாகிவிட முடியும் என்று தமக்குள்ளேயே கேட்டுக் கொண்ட நாரதர், அந்த விவசாயி அப்படி என்னதான் செய்கிறார் என்று கவனிக்க ஆரம்பித்தார்.

காலையில் எழுந்ததும் சிறிது நேரம் விஷ்ணுவை நினைத்துச் சில நிமிடங்கள் வழிபட்ட அந்த விவசாயி, வயல் வேலைகளைக் கவனிக்கப் போய்விட்டார். பிறகு, வேலைகளையெல்லாம் முடித்து மாலையில் சில நிமிடங்கள் வழிபட்டார். அவ்வளவுதான். தினசரி இதே மாதிரிதான்.

''தினசரி இரண்டு வேளை மட்டுமே வழிபடும் அந்த விவசாயி எப்படி சிறந்த பக்தனாக

குரல், ''அம்மா'' என்று கத்தினான்.

"என்ன?"

"பரீட்சைக்கு நாள் நெருங்கிட்டிருக்கு. இன்னும் மூணு வாரம் கூட இல்லையே... குணமே ஆகாதோ?"

"சரியாப் போச்சு... அப்பா கூட உனக்காக..."

"என்னது?"

"நீ முதல்லே தைரியமா இரு" என்றாள் விஜயலட்சுமி. கணவன் வாரம் ஒரு நாள் சாப்பிடாமல் பட்டினி கிடப்பதை, இவனிடம் சொல்லுவானேன்.

"இல்லைம்மா... ரொம்ப 'வீக்'கா இருக்கு. பரீட்சை எழுத முடியாது... அடுத்த வருஷம் எழுதறேனே."

விஜயலட்சுமி பதறிப் போனாள். டாக்டரை வரவழைத்தாள். அவர் பையனைப் பரிசோதித்து விட்டு, "ஓ.. இட்ஸ் வெரி காமன்.. 'பிசியோதெரபி' செய்யணும்..."

மகேந்திரன் பலவீனமான குரலில், "குணம் ஆகுமா?"

"டெஃபனட்டா.. சின்னப் பயிற்சிதான். பரமேஷ் செய்யணும். ஆனால் தானாகச் செய்யத் தோணாது. நான் அசிஸ்டெண்டை அனுப்பறேன்" என்றார். பரமேஷை நோக்கி, "இளங்காளை மாதிரி இருக்கே? ஆனா சின்ன பிராக்சருக்கு பயப்படறே!" என்றவர், "இங்கே பார்... இந்த மாதிரி – 'ரிஸ்ட்'டை செய்யணும்..." – நாட்டியக்காரி கையால் சாடை காட்டுவது போல, மணிக்கட்டை மேலே உயர்த்தியும், கீழே தாழ்த்தியும் செய்து காட்டினார்.

மகேந்திரனிடம் ஒரு சீட்டில் எழுதிக் கொடுத்தார். 'supination' 'Fixion' 'Extension' என்று ஏதேதோ வார்த்தைகள் எழுதப்பட்டிருந்தன. "ஒன்றும் பயப்பட வேண்டாம். அசிஸ்டெண்டை நாளைக்கு வரச் சொல்லறேன். இதைக் காண்பியுங்கள். புரிஞ்சுகொள்வான். நான் ஊருக்கு அவசரமாப் போறேன்."

மறுநாளே, அந்த இளைஞன் வந்தான். சரியான பயிற்சியாளன். ரிங் மாஸ்டர் சர்க்கஸில் மிருகங்களை ஆட்டிப் படைப்பது மாதிரி, பரமேஷைப் பயிற்சி எடுக்கச் சொன்னான். விரல்களை மடித்து, மறுபடி விரித்து, மணிக்கட்டை மேலும் கீழும் ஆட விட்டு – இப்படியே திரும்பத் திரும்ப பல முறைகள் சில சமயம் கடுமையாகவும், சில பொழுதில் கனிவாகவும் பேசி பரமேஷைப் பழக்கினான்.

பயிற்சிக்கும், டாக்டர் தொடர்ந்து கொடுத்த சிகிச்சைக்கும் நல்ல பலன் இருந்தது. பரமேஷ் பரீட்சை எழுதினான்.

ஒருவழியாக எல்லாத் தடைகளையும் தாண்டி, பரீட்சை எழுதி மதிப்பெண்களும் வந்தாகி விட்டது; எதிர்பார்த்ததை விட அதிகமாகவே வாங்கியிருந்தான்.

விஜயலட்சுமிக்கு சந்தோஷமாயிருந்தது. அந்த மகிழ்ச்சியில், ஏதோ புத்தகத்தில் ஆழ்ந்திருந்தவள், வெளியே வந்த குரலைக் கேட்கவில்லை.

இரண்டாவது முறையாக மறுபடியும் குரல் கேட்டவுடன், கதவைத் திறந்தாள்.

"வணக்கம்... நான்... டீவியிலிருந்து வரேன்"

"ஓ... வாங்க..."

''உங்க பையன்

தனில்

லையா?'' என்றார் மகாவிஷ்ணு.

— ஜகத்குரு ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடாதிபதி ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹாஸ்வாமிகள் சொன்ன குட்டிக்கதை.

முடியும்?'' விஷ்ணுவிடம் நாரதர் கேட்டார்.

நாரதரின் மனதைப் புரிந்து கொண்ட விஷ்ணு, நீர் நிரம்பிய ஒரு கிண்ணத்தை நாரதரிடம் கொடுத்து, ''இதிலுள்ள நீர் ஒரு துளியும் சிந்தாமல் சிறிது தூரம் சென்று வாயேன்!'' என்றார்.

நாரதரும் அப்படியே சென்று வந்தார். வந்தவரிடம், ''கிண்ணத்தை எடுத்துச் சென்றபோது என்னுடைய நாமத்தை எத்தனை முறை சொன்னாய்?'' என்றார் மகாவிஷ்ணு.

''கிண்ணத்திலுள்ள நீர் கீழே சிந்திவிடக்கூடாது என்பதிலேயே நான் கவனமாக இருந்ததால் உங்கள் திருநாமத்தை என்னால் உச்சரிக்க முடியாமல் போனது!'' என்றார் நாரதர்.

''அந்த விவசாயி கூட இப்படித்தான். அவனது வேலைகளில் கவனமாக இருக்கிறான். இருந்த போதும் காலையிலும், மாலையிலும் என்னைத் தவறாமல் வழிபடுகிறான் என்றால் அவன் சிறந்த பக்






பார்க்கலாம் என்று காத்திருந்தாள்.

**வி**பரீதமாக மகேந்திரன் வரக் காணோம். இத்தனைக்கும் சீக்கிரமே வந்து விடுகிறேன்; இரண்டு பேருமாகச் சேர்ந்து கோயிலுக்குப் போகலாம் என்று சொல்லியிருந்தான்.

ஸ்வஸ்திக் சாமிகள்; பரமேஷுக்கு நேர்ந்த விபத்து; பரீட்சை என்று பல எண்ணங்கள் எழுந்து அவளை அலைக்கழித்தன. படபடவென்று கதவு தட்டப்படும் சப்தம் கேட்டு, பதறிப் போய் எழுந்தாள்.

வாசலில் டாக்ஸி! "மெள்ள மெள்ள," என்று சொல்லி யாரோ இரண்டு பேர் கைத் தாங்கலாக மகேந்திரனைக் கூட்டிக் கொண்டு வந்தார்கள்.

"நான் கூடச் சொன்னேனுங்க. இந்தப் பட்டினி விரதம் எல்லாம் உனக்கு ஒத்துக் காதுன்னு."

"ஐயோ! என்னங்க இது!" என்று விஜயலட்சுமி பதறினாள்.

"ஒண்ணுமில்லை. வேலை செஞ்சுகிட்டிருந்த போது மயக்கம் போட்டு விழுந்துட்டாருங்க... நல்ல காலம்... மெஷினுக்குள் கை, கால் மாட்டிக்கலை! ஒன்றுமில்லே... ஜெனரல் வீக்னஸ்தான்."

அவர்கள் போனதும், விஜயலட்சுமி கணவன் மடியில் முகம் புதைத்து விசித்து விசித்து அழுதாள். மகனுக்காகத் தன்னை வருத்திக் கொண்டு வாரா வாரம் இவர் இருந்த விரதம்; பரமேஷுக்காகத் தனி சிரத்தை எடுத்துக் கொண்டு செயலாற்றிய டாக்டரின் திறமை; எப்படியும் பரீட்சை எழுதி விட வேண்டும் என்ற உந்துதலில் சகல பயிற்சிக்கும் ஈடு கொடுத்த பையனின் விடாமுயற்சி... அப்புறம் அந்த தட்சிணாமூர்த்தியின் அளவற்ற கருணை...

இந்த விரதம், ஆற்றல், விடாமுயற்சி, கருணை எல்லாவற்றையும் துச்சமாக மதித்து, நேற்று முளைத்த சாமிகளை உச்சத்துக்குக் கொண்டு போவது எத்தனை தவறான செயல்!

விஜயலட்சுமியின் அழுகை நிற்கவில்லை. அழுகையினூடே, "சாமிகள்... ஸ்வஸ்திக்..." என்று ஏதோ புலம்பினாள்.

"இவ்வளவுதானே... மெட்ராஸ் போய் அவரைப் பார்த்து வந்தால் போவுது" என்றான் மகேந்திரன் புரியாமல்.

"இல்லேங்க... பார்க்க வேண்டாங்க," என்றாள் விஜயலட்சுமி கண்களைத் துடைத்துக் கொண்டு.

பரீட்சைக்கு முன்னால பிராக்சர் வந்து நல்ல மார்க் வாங்கியிருக்கானில்லே?"

"ஆமாம். உங்களுக்கு யார் சொன்னது?"

உங்க பக்கத்து வீட்டுல எங்க ஸ்டாஃப் ஒருத்தர்... மோகன்..."

"ஓ! அவரா?"

"அப்புறம்... நீங்க ஸ்வஸ்திக் சாமிகள் நிகழ்ச்சிகளை விரும்பிப் பார்ப்பீங்கதானே?"

"ஆமாங்க" என்றாள் வியப்பை அடக்கிக் கொண்டு.

"ஒரு சின்ன காரியம் செய்யணும். 'என் பையன் நன்றாகப் பரீட்சை எழுதினது ஸ்வஸ்திக் சாமிகள் அருளாலே'ன்னு சொன்னால் போதும். உங்களை போட்டோ எடுக்கிறோம்..." – விஜயலட்சுமியின் தயக்கத்தைக் கவனித்தபடி "பணம் தரோமுங்க!"

விஜயலட்சுமிக்கு மூச்சு நின்றாற் போலிருந்தது. கணிசமான தொகை – அதுவும் அப்போதைய நிலைமையில்!

அவள் ஏதும் சொல்லவில்லை.

"இங்கே பாருங்க – பையன் குணமாகி பரீட்சை எழுதினது உண்மைதான். உங்களுக்கும் சாமிகள் மேலே நம்பிக்கை இருக்கு. இதிலே என்னங்க?"

"அவர்கிட்டே கேட்டுச் சொல்லறேன்."

"ஓகே" என்று விடைபெற்றான்.

விஜயலட்சுமி யோசித்தாள். இரண்டு மாசமாக என்ன செலவு! டாக்டர் பீஸ், மருந்து, அந்த தனியான பயிற்சி வேறே... போதாததற்கு அவருக்கு அப்போதைக்கு வந்த சம்பளம் கம்மி.. அதையெல்லாம் இந்தப் பணம் ஈடுகட்டுமே? மேலும் தான் சாமிகள் மீது நம்பிக்கை கொண்டிருப்பதும் நிசம் தானே? இருந்தும் மனத்தின் ஒரு மூலையில் குறுகுறுத்தது. மகேந்திரன் வரட்டும், கேட்டுப்

## தாக்கரேயின் சாபம்

"இங்கே உயர முடியாது என்று எல்லோரும் அயல் நாடுகளுக்கு ஓடி விடுவதால்தான், நம் நாடு பின் தங்கிக் கிடக்கிறது; உழைப்பால் உயர்ந்தவர்கள் மீது ரெய்டு நடத்தினால், இந்த நாடே உருப்படாது" என சாபமிட்டிருக்கிறார் தாக்கரே! "டிசம்பர் 31 வரையில் 'வாலண்டரி டிஸ்க்ளோஷர்' ஸ்கீமிருப்பதால், மத்திய அரசுக்கு ரெய்டுகள் நடத்த தார்மீக ரீதியில் எந்த அதிகாரமுமில்லை. இவர்களுக்கு தேர்தல் நடத்தப் பணம் தேவைப்பட்டால், உடனே 'ரெய்டு' என பூச்சாண்டி காட்டுவார்கள்; இப்போது ரெய்டுகள் நடக்கும் மும்முரத்தைப் பார்த்தால், தேர்தல் நெருங்கிவிட்டது என்றுதான் எண்ணத் தோன்றுகிறது" என சலித்துக் கொண்டிருக்கிறார். இந்த அலுப்புக்கும் சலிப்புக்கும் காரணமில்லாமலில்லை; இவருக்கு 'பைபாஸ்' ஆபரேஷன்செய்த ஹார்ட் ஸர்ஜன் நிதின் மாண்ட்கே வீட்டில் ரெய்டு நடந்திருக்கிறது. இத்தனைக்கும் vds திட்டத்தின் கீழ் 60 லட்சம் கட்டியிருப்பதாக டாக்டர் சாதிக்கிறார். இல்லவே இல்லை என்கிறது வருமான வரித் துறை! இந்தக் குழப்பத்தில் எங்கேயாவது டாக்டருக்கே ஹார்ட் அட்டாக் வந்துவிட்டால்...?



## கடத்தல் ஒரு தொடர்கதை

ஏர் இந்தியாவின் போயிங் 747ன் கமாண்டராக இருந்து சம்பாதிப்பது போதாதென்று, ஒரு இன்ஃப்ளைட் ஸூபர்வைசருக்கும், நியூயார்க்கிலிருக்கும் ஒரு பார்ட்டிக்குமிடையே 'கூரியர்' வேலையை வேறு மேற்கொண்டிருந்திருக்கிறார் தஸ்தூர். தனது சூட்கேஸின் அடியில், 'ஃபால்ஸ்பாட்டத்தில்' மறைத்து, இவர் எடுத்துச் சென்றது ரூ 2.16 லட்சம் பெருமானமுள்ள 'ஹெராயின்'! அண்மையில் சஹார் ஏர்போர்ட்டில் கடத்தல் குற்றத்துக்காக இவர் கைதான கையோடு, ஏர் இண்டியா டாலும், யூனியன் தயவால் அதிக தண்டனையில்லாமல் தப்பி விடுகிறார்களாம். அதனால், இதுபோன்ற கள்ளத்தனங்கள் தொடர்கதையாகி விட்டனவாம்.... ஹூம்! திருடுபவன் ஏழை என்பது பழங்கதை; திருடாதவன் கோழை என்பது புதுக்கதை!

## மொட்டை ஸ்பெஷலிஸ்டுகள்

மும்பையிலுள்ள சென்ட்ரல் ரிசர்வேஷன் புக்கிங் ஆபீஸில் CBI ரெய்டென்பது, கொட்டாவி வரவழைக்கும் விஷயம் என்றுதானே நினைக்கிறீர்கள்? விழித்தெழுங்கள் - ட்யூட்டியிலிருந்த 9 ஊழியர்களிடமிருந்து, கணக்கில் வராத தொகையாக, ரூ.39000 கிடைத்

# கடத்தல் கமாண்டர்!

ஊழியர்களின் கடத்தல் சாதனைகள் ஒவ்வொன்றாக வெளிவர ஆரம்பித்துள்ளன. சிங்கப்பூர் சென்றால் பெல்ட்டுக்குள் தங்கம் கடத்திய கதை.... விமானத்துக்குள்ளிருந்தே 'பீர் கான்'களை அபேஸ் செய்த கதை... சில்லறைத் திருட்டுகள்.... இப்படி எத்தனையோ ரகம்! அகப்பட்டுக் கொண்

இருக்கிறது! ஒரு நாளின் சொற்ப நேரத்திய 'வரவு' இது வென்றால், ஒரு மாதத்தின் வருமானம் என்னவாக இருக்குமென்று கணக்குப் போட்டுப் பார்த்தால், தலையில் எவ்வளவு முடி பாக்கியிருக்குமோ என்கிறார் ஒரு சீனியர் CBI அதிகாரி, வழுக்கைத் தலையுடன்! "இதென்ன பிரமாதம்? 13 லட்சம் பெருமானமுள்ள படுக்

கைகள், கம்பளிகள், இரண்டு முழு ஏர்கண்டி ஷர்கன் முதலியவை 'போன' இடம் தெரியவில்லையே?" என்கிறார் இங்கிருந்து, ஜம்மு தாவி ரயில் நிலையம் சென்று ரெய்டு நடத்திய பிரிதொரு அதிகாரி மொட்டைத் தலை பளபளக்க!

## சாந்தமு லேதா...?

இசைக்குயில் லதா மங்கேஷ்கரின் பிறந்த தினமான செப்டம்பர் 28 அன்று, வருடந்தோறும், மத்திய அரசு 'லதா மங்கேஷ்கர் அவார்டு' என்ற பெயரில், இசைத் துறையில் சாதனை செய்தவர் யாராவது ஒருவரை, ஒரு லட்சம் ரூபாய், ஒரு மொமெண்டோ, இத்யாதிகளுடன் கௌரவிப்பது வழக்கம். பரிசுக்குரியவரைத் தேர்ந்தெடுக்க, ஒரு மாதம் முன்பாக, இசைமேதைகளைக் கொண்ட பிரத்யேகக் குழு ஒன்றும் அமைக்கப்படும். ஆனால் இந்த வருஷம், கல்சுரல் அஃபேர்ஸ் மினிஸ்டாரியிலுள்ள அனைவரையும் ஒட்டுமொத்தமாக, அம்னீஷியா நோய் தாக்கி விட்டது. "செப்டம்பர் இருபத்தெட்டா? அதுவா லதாவின் பிறந்த நாள்?" என அமைச்சர் வினவுமளவுக்கு ஞாபக மறதி! அமைச்சர்கள் அதுபற்றி நினைவுபடுத்திய பின்னரே, அவசர அவசரமாகக் குழு ஒன்று அமைக்கப்பட்டு, பரிசுக்குரியவரும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் – அவர் பெயர் – "ஹிருதயநாத் மங்கேஷ்கர்" – சாட்சாத் லதாவின் சகோதரர்தான்! லதாஜி சாந்தமானாரா?



• குல்ஷன்குமார்



• பால்தாக்கரே

## முதல் சுறா

குல்ஷன் குமார் கொலை வழக்கில், தாக்கரே குறிப்பிட்ட மூன்று பெயர்களுள் (அவர் பாஷையில் சுறா!) ஒன்று தாவுரானி! 'டிப்ஸ் காஸெட்ஸ்' கம்பெனியின் சொந்தக்காரர். குல்ஷன் குமாரைப் போன்றே, குப்பையிலிருந்து கோபுரமாகிய கதைதான் இவருடையதும்! ஆனால், இன்றைய நிலையில் 'ராஜா ஹிந்துஸ்தானி' போன்ற பிரம்மாண்ட வெற்றிப் படங்களின் கோ- புரொட்யூசராகவும், வரிசையாக ஆறு புதுப் படங்களின் தயாரிப்பாளராகவும் இருக்கும் இவரைக் கண்டு, குல்ஷன்குமார் வேண்டுமானால் பொறாமைப்பட்டிருக்கலாமே தவிர, குமாரை ஒரு பொருட்டாக நினைத்து, தீர்த்துக் கட்ட வேண்டிய அவசியம் இவருக்கில்லை என்கின்றனர் சிலர். உண்மையில் இவரிடம் ஒரு கோடி கேட்டு அபுஸலீம் மிரட்டிக் கொண்டிருந்ததாகவும், இவர் கொடுத்ததாகக் கூறப்படும் 25 லட்சங்கள், கோடிக்கணக்கின் முதல் தவணைதானே தவிர குல்ஷன் குமாருக்கான 'ஸுபாரி' (கொலை செய்ய முன் பணம்) அல்ல என நம்பத் தகுந்த வட்டாரங்கள் கிசுகிசுக்கின்றன. முதல் சுறாவிலேயே இத்தனை குழப்பங்கள். இன்னுமிரண்டு மாட்டினால் என்னவாகுமோ?

## L.K.G யில்லாத ஸ்கூல்களா?

கல்வித் துறையின் புதிய சட்டதிட்டங்களில் மாட்டிக் கொண்டு, விழி பிதுங்கிக் கொண்டிருக்கின்றன மும்பை பள்ளிகள். கல்வி அமைச்சர் திடீர் திடீரென பள்ளிகளில் விசிட் அடிப்பதென்ன... குழந்தைகளின் புத்தகப் பையைக் கையில் தூக்கி எடை பார்ப்பதென்ன... இரண்டு கிலோவுக்கு மேல் பளு இருந்தால், டீச்சர்களைக் கண்டிப்பதென்ன... 3–5 வயதுக்குட்பட்ட குழந்தைகளின் அட்மிஷனுக்கு இனி டெஸ்ட், பெற்றோரின் இண்டர்வியூ போன்றவை எல்லாம் கூடாது, பள்ளியின் அருகாமையிலுள்ள குழந்தைகளுக்கே முன்னுரிமை அளிக்கப்பட வேண்டும், அதிகமாக அப்ளிகேஷன்கள் வந்தால், குலுக்கல் முறையில் தேர்வு செய்யப்பட வேண்டும் என்பன போன்ற திட்டங்களை அமல்படுத்தப் பார்ப்பதென்ன... பேசாமல் எல்.கே.ஜியையே எடுத்துவிட்டு, நேராக ஆறு வயதில் UKG –ல் பழைய இண்டர்வியூ முறையில் (டொனேஷனுக்காகத்தான்) தேர்வு நடத்தலாமா என ஸீரியஸாக சிந்தித்துக் கொண்டிருக்கின்றனர் பல பள்ளி முதல்வர்கள்!

— ஜெயஸ்ரீ ராஜ்

# சர்தார்ஜி ஜோக்ஸ்!

சர்தார்ஜிக்கள் பற்றிய ஜோக்ஸ் வெகு பிரபலம். ஆனால் சர்தார்ஜி ஒருவரிடமே ஜோக்ஸ் சொல்லும்படிக் கேட்டால்? ஐடியா சகிதம் ஆட்டோ மொபைல் உதிரி பாகங்கள் விற்கும் கடைகள் நிரம்பிய ராயப் பேட்டை ஜெனரல் பேட் டர்ஸ் ரோடு பக்கம் போனோம். அங்கே சர்தார் ஜிக்கள் நிறைய இருப்பார்கள்.

பலர் டபாய்த்து விட்டதால், நானெல்லாம் அலைய வேண்டிய தாகிவிட்டது. பலிந்தர்பீர் சிங் என்ற ஜோக் வல்லுனர் இறுதியில் அகப்பட்டார். அவர் சொன்ன ஜோக்ஸ்:



• பலிந்தர்பீர் சிங்

- 'ரோட்டில் ஒரு வண்டிக் காரர் கொய்யாப்பழம் விற்றுக் கொண்டிருப்பதை ஒருவர் பார்த் தார். வண்டிக்காரரிடம் 'ஒரு கொய்யாப்பழத்தை வெட்டி, துண்டு போட்டுக் கொடுப்பா' என்றார். வண்டிக்காரர் கேட்டார்: "நாலு துண்டாய் வெட்டவா? எட்டு துண்டாய் வெட்டவா?" அதற்கு பசித்தவர் சொன்னார். "நாலு துண்டே போதும்; எட்டு துண்டு சாப்பிட வயித்துல இட மில்லை!"

- தீபாவளி சமயம். மாப்பிள்ளை ஈரம் சொட்டச் சொட்ட புதுச்சட்டை அணிந்து கொண்டு வந்து மாமனார் முன்பு நின்றார். "என்ன ஆச்சு மாப்பிளே! புதுச் சட்டை தொப் பமா நனைஞ்சிருக்கே!" என்று கேட்டார் மாம னார். அதற்கு மாப்பிள்ளை சொன்ன பதில்: "கங்கா ஸ்நானம் ஆனதும், நீங்க கொடுத்த புது சட்டையைப் போட்டுக்கலாம்னு எடுத்தேன். அதுல என்னடான்னா wash and wear என்று போட்டிருந்தான். உடனே சட்டையை நோச்சுப் போட்டுக்கிட்டேன்."

- ஒரு நட்சத்திர ஓட்டல் நீச்சல் குளத்தில் நடு இரவில் யாரோ இருப்பதைப் பார்த்த காவ லாளி, "பதினோரு மணிக்கு மேல் நீச்சல் அடிக்க இங்கே அனுமதி கிடையாது என்று உங் களுக்குத் தெரியுமா?" என்றான்.

குளத்திலிருந்தவர், "தெரியும். ஆனால் நீச்சல் தெரியாததால் நான் குளத்தில் மூழ்கிக் கொண்டிருக்கிறேன்" என்றதும், காவலாளி சொன்னான்: "ஓகோ! அப்படின்னா சரி!"

- ஒரு டாக்டரின் கிளினிக்கிற்கு முன் னால், தடுக்கி விழுந்து விட்டார் ஒருத்தர். நேரே கிளினிக்கினுள் நுழைந்து டாக்டரிடம் காட்டி, காயத்துக்குக் கட்டு போட்டுக் கொள்ள விரும்பினார். காத்திருந்த நேரத்தில், தன் அறையை விட்டு வெளியில் வந்த டாக்டர், அடி பட்டவரின் வாயில் ஒரு தர்மாமீட்டரை வைத்து விட்டுப் போய் விட்டார். ஆசாமி தலையைத் திருப்பிப் பார்த்தால், பக்கத்திலிருந்தவர் வாயிலும் தர்மாமீட்டர். 'எனக்கு காலில் அடி! என்ன ஏது என்று கூடக் கேட்காமல் வாயில் தர்மா மீட்டர் வைத்து விட்டுப் போய் விட்டாரே டாக்டர்' என்று இவர் புலம்ப, பக்கத்து ஆசாமி சொன் னார்: "உனக்காவது அடிபட்டிருக்கிறது. நான் போஸ்ட்மேன். டாக்டருக்குத் தபால் கொடுக்க வந்தேன்!"

தொகுப்பு: மௌஷ்மி

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.**
**Annual Subscription : India : Rs. 208/-; Overseas : Rs. 1200/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 104/-; Overseas : Rs. 600/- (Air Mail)**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS (S) M4392/97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka